# மலரும் மாலையும்

செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்
கிந்தநூ லுரியதாய் என்றும் வாழ்கவே.

தேசிகவிநாயகன்

# மலரும் மாலையும்

கவிமணி
சி. தேசிக விநாயகம் பிள்ளை

பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை 1.

முதற் பதிப்பு : 30 நவம்பர் 1938
ஒன்பதாம் பதிப்பு : 14 ஜனவரி 1960

விலை ரூ. 5

**கவிமணி நூல்கள்**

மலரும் மாலையும்
மருமக்கள் வழி மான்மியம்
ஆசிய ஜோதி
உமார்கய்யாம் பாடல்கள்
தே. வி. யின் கீர்த்தனங்கள்
கவிமணியின் உரைமணிகள்
குழந்தைச் செல்வம்

ராஜன் எலக்ட்ரிக் பிரஸ், சென்னை-1

# பதிப்புரை

தமிழரின் தவப் பயனுய்த் தோன்றிய நமது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் கம்பனைப்போல், இளங்கோவைப்போல், வாழையடி வாழையாகத் தமிழை வளர்த்து வளம் பெருக்கி வந்துள்ள அறிஞர் பரம்பரையில் தலைசிறந்தவராகக் கொள்ளத்தக்கவர்கள். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, பூத உடம்பை நீத்து, புகழுடம்பு பெற்றவர்கள். இவர்களது கவிதைகள் தமிழிலக்கிய உலகில் ஒரு புதிய வழியையும், விழிப்பையும், புத்துணர்ச்சியையும் விளைவித்துள்ளன. பழமையின் ஊற்றிலிருந்து புதுமை பொங்கி எழும் காட்சியைக் கவிமணி அவர்களின் கவிதைகளில் எங்கும் பரக்கக் காணலாம்.

இப் பதிப்பு எவ்விதமான மாறுதல்களும் இன்றி, முன் பதிப்புப் போலவே வெளிவருகிறது.

வழக்கம் போல திரு. வித்துவான் மு. சண்முகம் பிள்ளை அவர்கள் இப்பதிப்பையும் பார்வையிட்டுப் பதிப்பித்தார்கள். அவர்கட்கு எங்கள் நன்றி உரியது.

பாரி நிலையம்
14—1—60

பாரி நிலையத்தார்

## நூல் - உரிமை

1950-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 28-ஆம் தேதி கவிமணியவர்கள் இந்நூலின் உரிமையையும், "நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்", "ஆசிய ஜோதி", "காதல் பிறந்த கதை", "உமார் கய்யாம் பாடல்கள்", "இளந் தென்றல்", "காந்தளூர்ச்சாலை", "தே. வி. யின் கீர்த்தனங்கள்", முதலிய நூல்களின் காப்பிரைட்டு உரிமையையும், தமது மருகர் கே. குமாரசுவாமிப் பிள்ளை அவர்களுக்கு அன்பின் காரணமாக இஷ்ட தானம் செய்துள்ளார்கள். இந்த இஷ்ட தானப் பத்திரம் நாகர் கோவில் ஸப் ரெஜிஸ்ற்றரில் 28-10-1950-ல் 131-ஆம் நம்பராய்ப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

## கவிமணியின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்

(வித்துவான் மு. சண்முகம் பிள்ளை)

1876 தேரூரில் கவிமணி ஜனனம்.

(1050, ஆடி, 14) சிவதாணு பிள்ளைக்கும் ஆதிலட்சுமி அம்மையாருக்கும் அருந்தவப் புதல்வராகப் பிறந்தார்.

ஆரம்பக் கல்வி : தேரூர்.

ஆங்கிலப் பாடசாலைப் படிப்பு : கோட்டாறு.

திருவாவடுதுறை ஆதீனம் வாணன் திட்டுமடம் சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ்க் கல்வி.

1885 தந்தையார் மரணம்.

கல்லூரிப் படிப்பு, எப். ஏ.

சிவ தீட்சை : திருநெல்வேலி உமையொருபாகக் குருக்கள் செய்து வைத்தார்.

போதனாமுறைப் பயிற்சி : திருவனந்தபுரம்.

திருவாவடுதுறை ஆதீனம் வாணன் திட்டு மடம் சங்கரலிங்கத் தம்பிரானின் பாராட்டு.

1895 முதல் கவிதை நூல் : அழகம்மை ஆசிரிய விருத்தம்.

1901 திருமணம் : புத்தேரியில் பிறந்த புனித வதி உமையம்மையார் வாழ்க்கைத் துணைவியானார்.

1901 ஆரம்பப் பாடசாலை ஆசிரியர் : கோட்டாறு.

போதனமுறைப் பாடசாலை ஆசிரியர் : நாகர்கோவில்.

பெண்கள் போதனமுறைப் பாடசாலை ஆசிரியர் : திருவனந்தபுரம்.

மகாராஜா பெண்கள் உயர்தரப் பாட சாலைத் தமிழாசிரியர் : திருவனந்த புரம்.

மகாராஜா பெண்கள் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் : திருவனந்தபுரம்.

குழந்தைப் பாடல்கள் பாடுதல் : சாசன ஆராய்ச்சியில் ஈடுபடுதல்.

திருவனந்தபுரத்திலிருந்து வெளிவந்த 'தமிழன்', 'கேரளா சொஸைடி பேப்பர்' முதலிய பத்திரிகைகளுக் குப் பாடல்களும் ஆராய்ச்சி யுரை களும் எழுத முற்பட்டார்.

1917-1918 'மருமக்கள் வழி மான்மியம்' என்னும் நகைச்சுவை நூலை, திருவனந்தபுரத் திலிருந்து வெளியான 'தமிழன்' பத்திரிகையில் பகுதி பகுதியாக வெளியிட்டார்.

1922 பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை (அப்பொழுது ஹைகோர்ட்டு வக்கீல்) அவர்களின் 'மனோன்மணீயம்': இரண்டாம் பதிப்பு வெளியீட்டிற்கு உதவி புரிந்தனர்.

1922 மார்ச்சு, 11 சென்னையில் அப்பொழுது வெளியான 'திராவிடன்' என்ற தினப் பத்திரிகையில் 'மனோன்மணீயத்தின் மறு பிறப்பு' என்ற விமர்சனக் கட்டுரை எழுதி வெளியிட்டனர். இது 'மனோன்மணீயம்': இரண்டாம் பதிப்புப் பற்றியதாகும்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து வெளிவரும் 'செந்தமிழ்' மாதப் பத்திரிகையிலும் இவர்களது கவிதைகள் சில வெளிவந்தன.

திருவனந்தையில் பழகிய தமிழன்பர்கள் : நீதிபதி கே. ஜி. சேஷையர், இவர் மருகர் கே. ஜி. சங்கரய்யர், எஸ். வையாபுரிப் பிள்ளை, இசையரசு இலட்சுமண பிள்ளை, கே. என். சிவராஜ பிள்ளை (பின்னால் சென்னைச் சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித் துறையின் தலைவராயிருந்தவர்), இவர் தமையனார் கே. என். குமரேச பிள்ளை (கம்பன் புகழைப் பரப்பியவர்), பண்டித முத்துசாமிப் பிள்ளை 'தமிழன்' பத்திரிகாசிரியர் (திருவனந்தபுரம்),

பின்னாளில் ' விடுதலை ' முதலிய தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் ஆசிரியராக அமர்ந்து உழைத் தவர்—முதலியோர்.

திருவனந்தபுரம் புத்தன் சந்தையி லுள்ள சைவப் பிரகாச சபையில் ஞாயிறுதோறும் மேற்குறித்த நண் பர்களுடன் கூடி, 'திருக்குறள்' முதலிய இலக்கிய ஆராய்ச்சிகள் செய்து வந்தனர்.

1930 அழகிய பாண்டிபுரம் பெரிய முதலியார் ஓலைப் பிரமாணங்களை ஆராய்ந்து, 'முதலியார் ஓலைகள்' என்ற பெய ரால், காலஞ்சென்ற வழக்கறிஞர் பி. சிதம்பரம் பிள்ளை பி.ஏ., பி.எல். அவர்களைக்கொண்டு வெளியிடச் செய்தார். 'முதலியார் ஓலைகள்' பற்றி (24—11—1930) - கேரளா சொஸைடியில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு ஒன்றும் நிகழ்த்தி னார். இது கேரளா சொஸைடி பேப்பரில் வெளியாகியுள்ளது.

வெற்றிகொண்டான் புலவர் பாடிய 'திவான் வெற்றி' என்னும் சரித நிகழ்ச்சி பற்றிய விற்கவிதைப் பிரதியை டி. கே. ஜோஸப் என் பாருக்கு அளித்து, அந்நூல் வெளி வருவதற்கு வேண்டும் உதவிகளும் செய்தனர்.

1931 ஆசிரியர் வேலையிலிருந்து ஓய்வு பெறுதல்.

1931 நாகர்கோவில் நகருக்குச் சுமார் இரண்டு மைல் வடக்கேயுள்ள தமது மனைவியின் பிறந்தகமாகிய புத்தேரிக் கிராமத்தைத் தமது சாந்தி வாழ்க்கைக்குரிய இடமாகக் கொண்டார்.

1926-1936 சென்னைச் சர்வகலாசாலையில் நடைபெற்ற தமிழ்ப் பேரகராதியின் கௌரவ உதவியாளரா யிருந்தார். (Honorary referee.)

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் பதிப்பு வேலைகளுக்காக, கம்பராமாயணம், திவாகரம், நவநீதப் பாட்டியல் முதலிய பல நூல்களின் ஏட்டுப் பிரதிகளைத் தேடி, அவ்வப்போது உதவினர்.

1936 நவம்பர் 'காந்தளூர்ச்சாலை': சரித்திர ஆராய்ச்சி நூல் வெளியிட்டார்.

1938 நவம்பர் 30 'மலரும் மாலையும்' (கவிதைத் தொகுதி) வெளியீடு. வெளியிட்டோர்: புதுமைப் பதிப்பகத்தார்.

1940 டிஸம்பர், 24 'கவிமணி' பட்டம்.

1941 பிப்ரவரி 'ஆசிய ஜோதி': புதுமைப் பதிப்பக வெளியீடு.

| | | |
|---|---|---|
| ஏப்ரல் | 1941 | ‘இளந் தென்றல்’ (குழந்தைப் பாடல்கள்): புதுமைப் பதிப்பக வெளியீடு. |
| | | திருவிதாங்கூர் சர்வகலாசாலைத் தமிழ்ப் பாடக் குழுவின் உறுப்பினர். |
| டிஸம்பர் | 1942 | ‘நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்’: புதுமைப் பதிப்பக வெளியீடு. |
| | | திருவிதாங்கூர் ஸர்க்காரது பாடசாலைப் புத்தகங்களைத் திருத்தும் குழுவில் உடனிருந்து பணியாற்றியது. |
| மே, 11 | 1943 | ஆத்தங்குடியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் பாராட்டு. |
| மே, 12 | | செட்டிநாட்டு அரசர், ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் உபசரணை. |
| | | அண்ணாமலை அரசர் வெள்ளிப் பாத்திரங்கள் பரிசாக அனுப்பியது. |
| | 1944 | திருவிதாங்கூர் சர்வ கலாசாலையில் தமது அன்னையார் பெயரில் தமிழ்ப் பரிசு நிறுவுதல். |
| ஸெப்டம்பர், 11 | 1944 | மதுரை விஜயம்: பாரதியார் கட்டிடம் திறந்தது. |
| ஸெப்டம்பர், 26 | 1944 | திருநெல்வேலி, கலை - அன்பர்கள் பாராட்டு. |
| | 1945 | 70-ஆம் ஆண்டு விழாப் பாராட்டு. |

1945 70–ஆம் பிறந்ததின நினைவாகக் 'கவி மணி மலர்'

ஜூலை 1945 'தேவியின் கவிக் கனிகள்': ஸ்டார் பிரசுர வெளியீடு — மலரும் மாலையில் வந்துள்ள சரஸ்வதி துதி, குழந்தை, தாலாட்டு, கிளி, பசுவும் கன்றும், சந்திரன், முத்தந் தா, என்னும் ஏழு கவிதைகள் இவ் வெளியீட்டில் அடங்கி யிருந்தன.

ஆகஸ்டு 1945 கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, வரலாறு: யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் எழுதினர்.

நவம்பர் 1945 'உமார் கய்யாம்': கவிக்குயில் வெளியீடு.

1947 'காதல் பிறந்த கதை' (கவிதைத் தொகுதி): அருள் நிலையம் வெளியீடு.

ஜனவரி 1948 'கவிமணி வரலாறு': வித்துவான் செ. சதாசிவம் பிள்ளை எழுதி வெளியிட்டார்.

மே, 14 1948 நாகர்கோவிலில் நடைபெற்ற மூன்ருவது தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில் வரவேற்புரை நிகழ்த்தினர்.

ஜனவரி, 6 1950 கன்னியாகுமரியில் நடைபெற்ற தமிழ் நாட்டின் தென்குமரி எல்லை மகாநாட்டில் திறப்புரைச் சொற்பொழிவாற்றினர்.

1950 அக்டோபர் — டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் தலைமையில் பொன்னுடை போர்த்திய விழா.

1950 அக்டோபர் — மருகர் குமாரசுவாமிப் பிள்ளைக்குத் தமது நூல்-உரிமை முதலியவைகளை அளித்தமை.

1950 டிசம்பர் — அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தார் தங்கள் சர்வ கலாசாலையில் கௌரவத் தமிழ்ப் பேராசிரியராக அமரும்படி அனுப்பிய வேண்டுகோள்.

1950 டிசம்பர், 5 — திருவாவடுதுறை மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் பொன்னுடை போர்த்தியது.

1951 — கவிமணியின் கவிதைகளாகிய ‘ மலரும் மாலையும் ’, ‘ நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்’, ‘உமார் கய்யாம்’, ‘ஆசிய ஜோதி’ ‘தே. வி.யின் கீர்த்தனங்கள்’ முதலியவற்றைப் பாரி நிலையத்தார் பதிப்புரிமை பெற்று, முறையே வெளியிடலாயினர்.

1951 ஏப்ரல் — திருச்சி ரேடியோ நிலைய நிருபர் கவிமணியைப் பேட்டி கண்டனர். ‘என்னை இயக்கிய லட்சியம்’ என்பது குறித்து நிருபரின் வினாக்களுக்கு விடை பகர்ந்தனர்.

1952 மே — கவிமணி பிறந்த தேரூரில் - தேரூர்ப் பெருமக்கள் ‘ கவிமணி தேசிக

விநாயகம் பிள்ளை நினைவு நிலையம்" என்னும் பெயரால் பெரியதொரு மண்டபம் கட்டித் தமது பேரன்பினை வெளியிட்டனர். இது இவ்வூரின் நடுநாயகமாய், கலை நிலையமாய், கண்டவர்தம் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து விளங்குகின்றது.

1952 டிஸம்பர் கவிமணி ஏற்கெனவே, தாம் அனுபவித்து வரும் எக்ஸிமா, ஆஸ்த்மா இவற்றோடு, சிறுநீர் போகாத தடையால் சத்திர சிகிச்சை பெற்று, இறைவன் அருளால் குணமடைந்தார்.

1953 ஜூலை "கவிமணியின் உரைமணிகள்" (வசன இலக்கியம்: பாரி நிலைய வெளியீடு) வெளி வந்தது.

நாகர்கோவில் நகரில் 'கவிமணி நிலையம்' உருவாகி வருகிறது. இது ஒரு சிறந்த கலாநிலையமாக விளங்கும். கவிமணியவர்கள் தாம் வாசித்துப் போற்றிவந்துள்ள நூல்களையெல்லாம் இந் நிலையத்திற்கு அளித்துள்ளார்கள்.

1953 ஜூலை இலக்கியங்கள், சாசனங்கள், முதலியவற்றை ஆராய்ந்து, தாம் அவ்வப்போது குறித்து வைத்திருந்த குறிப்புக்களை எல்லாம் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களுக்குக் கொடுத்தனர்.

1953 ஜூலை — 'தே. வி. யின் கீர்த்தனங்கள்' (பாரி நிலைய வெளியீடு) வெளிவந்தது.

1953 ஆகஸ்டு, 8 — கல்கத்தாவில் கவிமணி ஜயந்தி; கல்கத்தா பாரதி சங்கத்தினர் கொண்டாடினர். கவிஞர்கள் பிறந்த தினத்தில் விழாக் கொண்டாட வேண்டும் எனப் பலமுறை வற்புறுத்தி எழுதி யிருக்கிறார் அமரகவி பாரதியார். பாரதி வழியில் இன்று பெருங் கவிஞராய்ச் சிறந்து விளங்கும் கவிமணிக்கு ஜயந்தி விழாக் கொண்டாடும் பணியில் முதல் வழிகாட்டியாக இச் சபையார் உள்ளனர்.

1954 மார்ச்சு, 13 — திருவனந்தபுரம் ரேடியோ நிலையத்தார் கவிமணியைப் பேட்டி கண்டனர். அப்பொழுது கவிமணியின் பாடல்களில் சிலவற்றை அவர்களே பாடக் கேட்டனர்.

1954 செப்டம்பர், 26 — நம்மிடையே இருந்து, அன்பு செலுத்தி, அறம் பெருக்கி, வாழ்வாங்கு வாழ வழி வகுத்துக்கொண்டிருந்த கவிமணி அவர்கள் மறைந்தனர்.

1955 நவம்பர், 21 — கவிமணி அவர்கள் இறுதியாக இருந்து மறைந்த இடத்தில், அவர்கள் மருகர், 'கவிமணி இல்லம்' எனப் பெயரிய அழகியதொரு மாளிகை

அமைத்துள்ளனர். இம் மாளிகையில் கவிமணி அவர்களின் வாழ்க்கையை நினைவூட்டும் பல உருவப் படங்களும் பிற சின்னங்களும் அமைந்துள்ளன. இம் மாளிகை கவிமணி அவர்களின் நினைவுக்குச் சிறந்ததொரு நிலையமாக அமைந்துள்ளது.

1956 மார்ச்சு, 30 'தே. வி. யின் கீர்த்தனங்கள்' என்னும் இசை நூலுக்குச் சென்னை அரசாங்கத்தின் சார்பில் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் பரிசு அளித்தனர்.

1957 குழந்தை இலக்கிய வரிசையில் கவிமணி அவர்களின் 'குழந்தைச் செல்வம்' என்னும் கவிதைத் தொகுதிக்குச் சென்னை அரசாங்கக் கல்வி இலாகாவினர் (D.P.I.) பரிசு அளித்தனர்.

---

## சிறப்புப் பாயிரங்கள்

i. தென் திருப்பேரை
அபிநவ காளமேகம் அனந்தகிருஷ்ண ஐயங்கார்[1]

தேசிகவி நாயகனுஞ் சீரியனை நாஞ்சிற்சு
தேசிகவி நாயகனுத் தேர்ந்துகந்தேன்—காசினியில்
வாடலுரு தென்றும் மணக்கும் மலர்மாலைப்
பாடல் முழுவதுமே பார்த்து.

ii. வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார்[2]

மற்றைக் கவிகளெல்லாம் வன்கற்கள் போல்வார் இவ்
வொற்றைக் கவிமணியை ஒப்பனென்றேர் வுற்றுக்
கவியரசாம் தேசிக விநாய கத்தைக்
கவிமணியென் றுர்கற்றுர் கள். 1

வாழிபல ஊழி மலர்மாலையாம் தொகைநூல்
வாழிமரு மக்கள்வழி மான்மியநூல்—வாழியரோ
தேசிக விநாயகன்தன் சேயாம் சிவனருளால்
தேசிக விநாயகவேந் தே. 2

iii. நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை

தேசிக விநாயகத்தின் கவிப்பெருமை
தினமும் கேட்பதுஎன் செவிப்பெருமை
ஆசிய ஜோதியெனும் புத்தர் போதம்
அழகு தமிழில் சொன்னுன் அதுபோதும். 1

---

1. இவர்கள் 13-12-1950 புதன் கிழமை காலை ஆசாரியன் திருவடி அடைந்தார்கள்.
2. இவர்களும் 1946-ல் சிவபதம் அடைந்துவிட்டனர்.

கோழி குலவிவரும் கிளிகொஞ்சும்
குழந்தை எழுந்து துள்ளிக் களிமிஞ்சும்
ஏழை எளியவர்கள் யாவருக்கும்
இன்பம் கொடுக்க அவன் பாவிருக்கும். 2

உழுது தொழில்புரியும் பாட்டாளி
உழைப்பில் ஓய்வுதரும் பாட்டாகும்
தொழுது அடிமைபடும் துயரமெலாம்
தூரத் தள்ளமனம் உயருமடா! 3

படித்துப் பழகாத பாமர ருக்கும்
பாடிப் பருகஅதில் சேமமிருக்கும்
ஒடித்துப் பொருள்பிரிக்கும் சந்திகளில்லை
ஊன்றிப் பதங்கூட்டும் பந்தனமல்ல. 4

காடும் மலையும்அதில் கலைபேசும்
கடலும் ஞானம்தர அலைவீசும்
பாடும் தேசிகவி நாயகத்தின்
பழமை பாடிடஎன் நாஉவக்கும். 5

நோய்நொடி யாவையும் விட்டோடி
நூறு வயசும்சுகக் கட்டோடு
தாய்மொழி வளர்த்தவன் கவிபேணும்
தனிவரம் தெய்வம் தரவேணும். 6

## கவிமணி வாழ்க!

மாசிலன் என்ற வாழ்வும்
மதிநலத் தெளிவாம் எங்கள்
தேசிக விநாய கத்தின்
திகழ்தரும் சிறப்பை யாரும்

பேசிடும் பொழுதி லெல்லாம்
பெருமிதம் என்னுள் ஊறும்
கூசிடும் எனது சொற்கள்
குணமிகும் அவற்கு முன்னல். 1

கற்றவர் பலபே ருண்டு
கவிகளும் புனைய வல்லார்
மற்றவர் வியக்கப் பேசி
மகிழ்தரும் எழுத்தும் செய்வார்
கற்றதை உணர்ந் தடங்கி,
கசடற வாழ்ந்து காட்டி
நிற்றலை யன்றோ எங்கள்
'கவிமணி' நினைவு கூட்டும். 2

தமிழ்மொழிப் பெருமை யெல்லாம்
தண்மையும் உண்மை தானும்
அமிழ்தென அதனைச் சொல்லல்
அழிவிலா அறிவுக் காக
குமிழ்தர இவற்றின் மேன்மை
குலவிடும் கவியால் ஞானம்
கமழ்தரச் செய்யும் எங்கள்
'கவிமணி' நீடு வாழ்க ! 3

துரும்பென மெலிந்த தேகம்
துலங்கிடும் குளிர்ந்த பார்வை
இரும்பினும் வலிய உள்ளம்
இனியவே செய்யும் எண்ணம்
பரம்பொருள் நினைவே காட்டும்
பாரெலாம் பரந்த நோக்கம்
கரும்பினும் இனிய சொற்கள்
'கவிமணி' வடிவ மாகும். 4

புவியணி கவிகள் பாடும்
புலமையைப் போற்று கேனோ ?
செவிமகிழ் இனிய சொல்லின்
செறிவினை மெச்சு கேனோ ?
நவம்மிகப் பழமை பேசும்
நயத்தினைப் புகழு வேனோ ?
கவிமணி யவரை வாழ்த்தக்
காரணம் எதனைச் சொல்வேன் ? 5

பொய்யகம் நீக்கி வஞ்சப்
புலன்களை அடக்கி யாண்டு
வையகம் முழுதும் வாழ
வரந்தர வல்ல நல்லான்
மெய்யகம் வணங்கி நின்று
மேலொரு பொருளைப் போற்றிக்
கையகம் கூப்பி, 'எங்கள்
கவிமணி வாழ்க !' என்பேன். 6

பொன்னுடை பூட்டி அந்தப்
புலவனைப் புகழ்வ தென்ற
நன்னய உணர்ச்சி கொண்ட
நண்பர்கள் பலரும் வாழ்க !
முன்னுற நின்று இந்த
முயற்சியைச் சிறக்கச் செய்த
என்னுடை இனிய நண்பன்
சண்முகம்* இனிது வாழ்க ! 7

*டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார். இவர்கள் தலைமையில் 25-10-50-ல் நாகர்கோவிலிலே கவிமணிக்குப் பொன்னுடை போர்த்தும் விழா நிகழ்ந்தது. அப்போது நாமக்கல் கவிஞர் அனுப்பியிருந்த வாழ்த்துப் பாடல்களே 'கவிமணி வாழ்க' என்ற தலைப்பில் தரப்பட்டிருப்பவை.

iv. பரலி, சு. நெல்லையப்ப பிள்ளை

தேனைப் பாலை முக்கனியைத்
      தெவிட்டா அமுதைச் சிந்திக்கும்
ஊனம் இல்லா உன்கவியை
      உன்னும் போதென் உள்ளந்தான்;
வானோர் நாஞ்சில் நாட்டில்வாழ்
      வண்மைப் புலவா வையத்துத்
தானோர் இல்லாத் தமிழேபோல்
      தழைத்து நீடு வாழுதியே.

v. அழ. வள்ளியப்பா

தேனொழுகக் கவிபாடும்
      தேசிக விநாயகமே !
நானுனது கவிபாடி
      நாடோறும் மகிழுவனே !

# உள்ளுறை

## இலக்கியம் 17-34



## சரித்திர கவிதை 35-54



## மழலை மொழி 55-70

## உள்ளமும் உணர்வும் 99-114



## வையமும் வாழ்வும் 115-142

## சமூகம் 143-180



## தேசீயம் 181-192

## வாழ்த்து 193-218

## சரம கவி 219-232

## கதம்பம் 233-286

## முத்துக் குவியல் 287—292

# பக்தி மஞ்சரி

## 1. சரஸ்வதி துதி

1. நாடிப் புலங்கள் உழுவார் கரமும்,
நயவுரைகள்
தேடிக் கொழிக்குங் கவிவாணர் நாவும்,
செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும்,
உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம்
அடைக்கலமே. 1

வேறு

2. வெள்ளைக் கலையுடுத்து, வெள்ளைப் பணிபூண்டு,
வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள்—பிள்ளை மொழி
வெள்ளைக் கவிகண்டு, வெள்ளையென் றெண்ணுமல்,
உள்ளத்திற் கொள்வாள், உவந்து. 2

## 2. இலக்குமி துதி

3. பொருளற் றவர்க்கிவ் வுலகில்லை என்றிப்
புவிபுகழும்
தெருளுற்ற ஞானிஅப் பொய்யா மொழியில்
தெரிந்துரைத்தான்;
மருளுற்ற மாந்தரும் வற்றுத செல்வம் இவ்
வையகத்துன்
அருளுற் றலாதடை வாரோ? செந் தாமரை
ஆண்டவளே! 1

3. ஞானி - திருவள்ளுவர்; பொய்யா மொழி-திருக்குறள்.
அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருளிலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. (குறள், 247)

4. சித்தம் தெளிந்திடும், செய்வினை யாவும்
திருத்தமுறும்,
நித்தம் மறிந்தெழு செல்வமும் தங்கி
நிலைபெறும், நல்
முத்தர்க் குரிய பெரும்பதம் வாய்க்கும், இம்
மூதுலகில்
பத்தர்க் கருளுந் திருமகள் பாதம்
பணிபவர்க்கே. 2

## 3. அஞ்சலி

5. என்றுமெனை அழிவிலாப் பொருளா யியற்றினை,
ஈதுனது திரு வுள்ளமே ;
ஈடற்ற கலமிது கவிழ்த்திக் கவிழ்த்தியுயிர்
ஏனோ திருத்தி வைப்பாய் ?
குன்றினொடு குழியெலாம் இச்சிறிய வேயின்வரு
குழல்கொண்டு சென்று நீயுன்
குமுதவாய் வைத்துநவ நவமான இசைகள் செவி
குளிரவே ஊதி நிற்பாய் ;
பொன்றுத லிலாதநிலை தரவல்ல உன்கரப்
புனிதமுடல் தீண்ட லாலே,
பூரித்த உள்ளமகி ழெல்லையற மாய்ந்ததும்,
போற்றமொழி யற்று நின்றேன் ;
நன்றுதவு கொடைகோடி இக்குழவி கைகளில்
நாளும்நீ அள்ளி யிடினும், [டேன்,
நான்குறைகள் சொல்லிஅருள் வேண்டா திருந்தி
ஞானஒளி வீசு மதியே ! 1

5. வேயின் வரு குழல் – புல்லாங்குழல் ; வேய் – மூங்கில்.

6. பண்ணுெழுகு பாடலைப் பாடென் றெனக்குமருள்
பாலிக்கும் வேளை, இந்தப்
பாரெங்கும் அறியாத கர்வமது பொங்கிப்
பரந்துளம் விம்ம நிற்பேன் ;
அண்ணலுன் திருமுகம் நோக்கிநிற்பேன் ; விழிகள்
அருவிநீர் பாய நிற்பேன் ;
ஆகாத குணமெலாம் அடியோடு நீங்கநல்
அமுதகுணம் ஓங்க நிற்பேன் ;
எண்ணரிய ஆழியைத் தாண்டுபுள்போல் அன்பும்
இறகினை விரிக்கும், அதனுல்
ஏத்தியிசை பாடத் தொடங்குவேன் ; நீயும் அதில்
இன்புறுவை என்ப துணர்வேன் ;
நண்ணுதற் கானவழி வேறெதுங் கண்டிலேன் ;
நானுமென் களிம யக்கால்,
நண்பனென் றேயழைக் கின்றனன் ; என்னையாள்
நாதனே ! ஞான பரனே ! 2

7. ஈசனே ! ஒருகணப் பொழுதுயான் உன்னரு
கிருந்திடற் கருளல் வேண்டும் ;
ஏழையேன் செய்வதற் காகவுள கருமங்கள்
யாவு மேபின் செய்குவேன் ;
நேசமுற நின்முகம் காணு திருக்கில் என்
நெஞ்சுதடு மாறி யழியும் ;
நேர்ந்துகொள் பணிஎல்லை யில்லாத ஆழியாய்
நீண்டுதுயர் தந்து நிற்கும் ;
வாசமெழு சோலைவாய் மதுவுண்டு வண்டினம்
மதுரகீ தங்கள் பாட,
மந்தமா ருதம்வீச, வேனிலிங் கின்றெனது
வாசலில் வந்தது, ஐயா !

ஆசையொடு நின்னையெதிர் நோக்கியிவ் வுள்ளத்தில்
அமைதிபெற வீற்றி ருந்து, என்
ஆவியை உனக்குரிமை ஆக்கிவழி படுவதற்
கானவொரு தருணம் இதுவே. 3

வேறு

8. இன்னிசைநீ பாடுமுறை ஏதுமறி யேன்யான்;
இரவுபகல் கேட்டின்பம் எய்திவியந் திடுவேன்;
மன்னுலகை ஒளிசெய்வ துன்னிசையின் ஒளியாம்;
வானெங்கும் உலவுயிரும் உன்னிசையின் உயிராம்;
பன்னரிய நின்னிசையின் பாலாறு பொங்கிப் [னோடு
பாறைகளும் உடைந்துருளப் பாய்ந்தொழுகும் அத
என்னிசையுங் கலந்தொழுக ஏற்றகுரல் காணேன்;
எண்ணிலிசை வலையிலிழுத் தெனையாளும்
இறையே!

9. உறுப்பனைத்தும் உயிர்பரந்திவ் வுருவமையும் வண்ணம்
உனதுகரம் தீண்டுகுறிப் புணர்வதனால், எளியேன்;
வெறுப்பரிய உடலென்றும் விளக்கமுறச் செய்வேன்;
மேலாகி உயிர்க்குயிராய் விளங்குபரம் பொருளே!

10. என்னுளத்து ஞானஒளி ஏற்றியமெய்த் தீபம்
இறையாகும் நீ,அதனால் இறையேனும் பொய்கள்!
மன்னுபல நினைப்புகளில் வந்துகல வாமல்
வன்மையொடு காத்திடுவன்; வழுத்தரிய சிவமே! 6

11. ஏழையுளந் திருக்கோயில் எனக்கொண்டு நீயும்
எழுந்தருளி யிருக்குமுறை அறிந்து, அடிமை அங்கே
சூழவரு வஞ்சனையைத் துரத்தி, நிறை அன்பாம்
சுந்தரநாண் மலர்மாலை சூட்டிநிதம், தொழுவேன். 7

---

10. இறையேனும் - சிறிதேனும்.

12. ஆயபல தொழிலெடுக்க ஆற்றல்தரு வதுநீ
அதனால்என் செய்கருமம் அனைத்தூடும் அடியேன்
தூயநிலை துலக்கிடவே துணிந்திடுவேன் ; எவர்க்கும்
சொல்லரிய பரம்பொருளே ! சுயஞ்சோதிப்
[பொருளே !

வேறு

13. சின்னஞ் சிறிய மலர், இந்தச்
சிறிய மலரைக் கொய்திடுவாய் ;
இன்னுங் காலஞ் செல்லின், ஒளி
இழந்து வாடி விழுந்திடுமே. 9

14. ஐய னே!நீ அணிமாலைக்கு
ஆகா மலரே யானாலும்,
செய்ய உன்றன் திருக்கரத்தால்
தீண்டும் பெருமை அளிப்பாயே. 10

15. நேரம் இருண்டு போய்விடுமோ ?
நியமப் பூசை தவறிடுமோ ?
ஓரும் உள்ளம் அயர்கின்றேன் ;
உண்மை அறியா துழல்கின்றேன். 11

16. மணமும் நிறமும் இல்லாவோர்
மலரே எனினும், ஐயா!நின்
பணியிற் சேரத் தாழாது
பறித்துக் கொள்ள வேண்டினனே. 12

---

5—16. இவை ஸ்ரீ ரவீந்திரநாத தாகூர் பாடிய 'கீதாஞ்சலி'யில் சில பாடல்களின் கருத்தையொட்டி எழுதப்பெற்றவை.

## 4. சுசிந்தை மாலை

17. திங்களுன் கருணை காட்டும்;
தீக்கணுன் வெகுளி காட்டும்;
கங்கையுன் பெருமை காட்டும்;
கடுவுமுன் ஆண்மை காட்டும்;
சிங்கம்நுண் இடையைக் காட்டச்
சிறையனம் நடையைக் காட்டும்
மங்கையோர் பாகா! தாணு
மாலயா! சுசிந்தை வாழ்வே!

## 5. குமரிப் பகவதி

18. தென்னெல்லை காத்தாளும் தேவி! குமரீ! நின்
பொன்னடியைக் கும்பிட்டுப் போற்றுகின்றேன்—
[மன்னு புகழ்ச்
செந்தமிழ் நாடு ஒன்ருகித் தேவர்நா டொத்து,
சந்ததம் வாழ்வரம் தா. [உலகில்

---

17. சுசிந்தை – சுசீந்திரம்: கன்னியாகுமரி மாவட்டத்தில் குமரிமுனைக்குப் பக்கத்திலுள்ள மிகப் பழமையான சிவஸ்தலம். இங்கே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சுவாமியின் திரு நாமம் தாணுமாலயன் என்பது.

தாணு – சிவன்; மால் – விஷ்ணு; அயன் – பிரமா; மூவரும் சேர்ந்த மூர்த்தி. கடு – விஷம்.

18. 6-1-1950-ல் நடைபெற்ற 'குமரி எல்லை மகாநாட்டில்' பாடிய தேவி பிரார்த்தனைப் பாடல். இம்மகாநாட்டில் கவிமணி ஆற்றிய 'திறப்புரைச்' சொற்பொழிவைக் 'கவிமணியின் உரை மணிகள்' என்ற நூலில் காணலாம்.

## 6. செந்தில் குமரன்

[அமரவிளைப் புலவர் சுடலைமுத்துப் பிள்ளை அவர்கள் திருச்செந்தூருக்குச் சென்று முருகனைத் தரிசிக்கப்போகும் வழியில் நம் கவிமணியை வீட்டில் சென்று தரிசித்துவிட்டுச் செல்லலாம் என்று கருதி, கவிமணி இல்லம் சென்றார். அப்பொழுது கவிமணி ஆஸ்த்மா வியாதியால் மிகவும் கஷ்டப் பட்டுக்கொண்டிருந்தார். சுடலைமுத்துப் பிள்ளை முருகன் மேல் ஒரு பாடல் பாடுமாறு கேட்கக் கவிமணி பின்வரும் பாடல்களைப் பாடினார்.]

19. உன்னிடத்தி லன்றி, உலகில் எவரிடம்போய்,
என்னுடைய சங்கடத்தை யானுரைப்பேன்—
[பன்னிருகை
ஏந்துமெழில் செந்தில் இறைவா ! உனையன்றி
ஆந்துணை வேறுண்டோ ஐயா ? 1

20. தண்டனை போதுமையா ! தாங்கமுடி யாதையா !
கொண்டபிணி நீங்கவருள் கூரையா!—கண்டுனது
வாசலில் வந்து, வணங்கவலி இல்லைஐயா!
ஈசனே! செந்திலிறை வா! 2

21. பண்டிதரும் கைவிட்டார்; பத்தியமும் தீர்ந்தது; யான்
உண்டமருந் தால்குணமோ ஒன்றுமில்லை;—அண்டர்
அமரா வதிகாத்த அண்ணலே ! செந்தில்
குமரா ! எனையாண்டு கொள். 3

## 7. முருகன் புகழ்மாலை

22. புல்லும் பசுவிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;
கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம்;—தொல்லுலகில்
ஏழை எளியேன் எதற்காவேன்? செந்தில் நகர்
வாழும் வடிவேல வா! 1

23. முத்தையா! வேலா! முருகா! எனவோதும்
சொத்தையே தேடிச் சுகமடைவீர்!—நித்தமிவ்
வீடும் களமும் விளைநிலமும் தோப்புகளும்
மாடும் சதமாகு மா? 2

24. பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்க்கநமக்கு
உற்ற துணையாய் உதவுகவே!—வெற்றிதரும்
ஈராறு கையன் இமையோர் சிறைமீட்ட
வீராதி வீரன்செவ் வேல். 3

25. செந்தில் முருகா! திருமால் மருகா! என்
சிந்தை குடிகொண்ட தேசிகா!—வந்தினிய
பைந்தமிழ்ச் சோலையிலே பாடும் கவிக்குயில்கள்
சந்ததம் வாழவரம் தா. 4

## 8. அழகம்மை ஆசிரிய விருத்தம்

### காப்பு

### உதயமார்த்தாண்ட விநாயகர்

### வெண்பா

26. சீருதவும் நல்லூராந் தேரூர் அழகிதிருப்
பேருதவும் பாவிணையான் பேசவே—ஓருதய
மார்த்தாண்ட வேழம் வழுவேதும் வாராமல்
காத்தாண்டு கொள்ளக் கடன்.

## விருத்தம்

27. பூவாகி அப்பூப் பொருந்துவண மாகிஅப்
பூவினுறு மணமு மாகிப்
பூதமாய்ப் புலனுய்ப் புறப்பாழு மாய்அப்
புணர்ப்பைஅறி விக்கும் அறிவாய்
ஓவாத அறிவினுக் குறுமிலக் காகிநின்று
உண்மையை உணர்த்து கின்ற
ஒண்சுடர்க் கற்பூர தீபமாய் வல்லிருள்
ஒழித்திலகு நெறிவிளக்கும்
மாவேத மாய்ஆக மப்பொருளு மாகியே
மலியும்உன் னருளை யென்றும்
வாயார வாழ்த்தித் துதிப்பதினும், மேலான
வாழ்வேதும் எங்கு முண்டோ ?
தேவாதி தேவர்தொழு மூவா மருந்தே!
சிவானந்த போக விளைவே!
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! 1

28. பத்திக்கும் என்மடப் புத்திக்கும் ஓயாத
பகையலால் பட்ச மில்லை ;
பஞ்சமா பாதகமும் எஞ்சா தெனக்குற்ற
பள்ளியிற் பாடம் ; அம்மா!
துத்திக்கும் உன்பதம் சுற்றிப் பணிந்துசிறு
தொண்டுகள் செய்தும் அறியேன் ;
தோத்திரப் பாமாலை சாத்தியறி யேன் ; இவை
சொல்லுதற் கொன்றி ரண்டோ ?

---

26—27. இரதபுரி - தேரூர் ; இது சுசீந்திரத்துக்கு அருகிலுள்ளது ; ஆசிரியர் பிறந்த ஊர். அங்குள்ள விநாயகர் திருநாமம் உதயமார்த்தாண்ட விநாயகர் என்பது.

மத்திக்கும் வெண்தயிரை யொத்துக் கலங்குமென்
மறுக்கம்நீ காண விலையோ?
மைந்தனேன் செய்கின்ற குற்றங்கள் ஏதுமொரு
வகையா யெடுக்க லாமோ?
தித்திக்கும் முக்கனிகள் எத்திக்கும் உதிர்கின்ற
செறிமரச் சோலை சூழும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! 2

29. ஆற்றுப் பெருக்கையொத் தழிகின்ற செல்வத்தை
அடைவதில் விருப்பு மில்லேன்;
ஆண்டியாய் வேண்டிப் புசித்துண்டு நாடோறும்
அலைவதில் வெறுப்பு மில்லேன்;
காற்றுப் பெயர்ந்திடிற் காயமோ சூத்திரக்
கயிறற்ற பாவை, அதனால்
காரியம் சிறிதேனு முளதோ? உன் இருபதக்
கஞ்சமே தஞ்ச மென்று
போற்றிப் பெரும்பேறு பெறுதற்கென் உள்ளம்எப்
போதுந் தவிக்குது, அம்மா!
பொங்கிடுங் குரவையிட் டெங்குமோ ரொலிசெய்து
பொலிவாக மள்ள ரெல்லாம்
சேற்றுப் பெருக்கூடு நாற்றைப் புதைக்கின்ற
செய்யகஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! 3

30. பொன்னையே பெண்ணையே மண்ணையே எண்ணிஎன்
பொழுதெலாம் போக்கி விட்டேன்,
புண்ணியச் செயலெதும் பண்ணியான் அறிகிலேன்,
பொல்லாங்கு புரியும் நெறியேன்,

முன்னையோர் சொன்னமொழி உன்னாதை முழுமூடன்,
மூர்க்கரோ டுறவு கொண்டேன்,
மூவுலகும் என்னையொப் பாரில்லை, இல்லைஇது
முக்காலும் உண்மை, உண்மை;
அன்னையே நின்னையே அல்லாது பின்னையோர்
ஆதாரம் வேறும் உண்டோ?
அறிவற்ற சிறியேனை, அன்பற்ற கொடியேனை,
அடிமையாய் ஆண்டு கொள்வாய்;
தென்னையே புன்னையே மன்னிவளர் சோலைத்
திக்கினுஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! 4

31. தையலார் மீதிலே மையலாய் ஓயாது
சண்டாள நெறியி லெல்லாம்
சாடிக் குதித்தோடி அலைகின்ற மனதையான்
சற்றேனும் உன்னை நோக்கிப்
பொய்யிலா மெய்யன்பு பூண்டே துதித்திடப்
போதனைகள் செய்வதெல்லாம்
பொறியெழும் பாலைவிழு துளியாவ தன்றிஒரு
புண்ணியம் பெறுதல் காணேன்;
மையிலா நெறிகாட்டி, அடியாரிற் கூட்டி, உன்
மலர்ப்பதஞ் சென்னி சூட்டி,
வற்றாத கருணையாந் தெள்ளமுதம் ஊட்டி, எனை
வாழ்விப்ப தெந்த நாளோ?
செய்யெலாந் துய்யவெண் சங்கினம் இராப்பொழுது
திங்களின் ஒளியை வீசும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே! 5

32. முக்கோணம் முதலான கோணங்க ளிட்டுனது
மூலாட் சரத்தை யிட்டு
மும்மலம் அறுக்கும்உன் செம்மலர்த் தாளையே
முறையுடன் பூசை புரிவோர்,
மிக்கோ ரென, சித்தி எட்டையும் பெற்றபின்
மேலான வீடும் அடைவார் ;
மேதினியில் இவ்வுண்மை அறியாத மாந்தரே
வேறுதெய் வங்கள் பணிவார் ;
பொக்கான எள்ளினை மிக்கவே ஆட்டினும்
பூசுதற் கெண்ணெய் தருமோ ?
பொய்யான தெய்வங்கள் ஒருகோடி போற்றினும்
புண்ணியம் சிறிதும் உளதோ ?
திக்கா றிரண்டோடு மிக்காறு பாய்கின்ற
செய்யகஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே !
தேவியழ கம்மை உமையே ! 6

33. சந்ததிக் கேயென்ன என்னைப் பயந்திட்ட
தந்தைதாய் செய்த தவமோ ?
தலைநாளில் யான்செய்த புண்யமோ ? அல்லதுன்
தண்ணருட் பெற்றி தானோ ?
சிந்தையுன் பெயரினோடு நாவுனது சீரையும்
திரமென்று கொண்டு, நித்தம்
சீமாட்டி யென்றுனது கால்மாட்டி லேவந்து
சென்னியும் பணிய நின்றேன் ;
எந்தநாள் உள்ளமும் இரங்கிநீ ஆள்வையோ ?
எவ்விதத் துய்கு வேனோ ?
இவ்வுடலை இன்னமும் எடுத்தெடுத் துழல்வெனோ ?
யாதொன்றும் அறிகி லேனே ;

செந்தமிழ் மணத்திஞெடு செல்வர்மண முங்கொடைச்
செங்கைதரு மணமும் மாருத்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே ! 7

34. ஆங்காரி ஆனந்தி அம்பிகை நிரந்தரி
அந்தரி ஆளி யூர்தி
ஆரணி சர்வபரி பூரணி நாரணி
அயிராணி புயக வேணி
பாங்கான பார்வதி பார்க்கவி புராதனி
பகவதி வீரி நாரி
பயிரவி மகிடசம் மாரியென் றுனதுபேர்
பல்லா யிரங்கள் சொல்லி,
ஓங்கா தரத்தோடு பணிகின்ற அடியாரின்
உபயபதம் என்ற னக்கிவ்
உலகாளும் இறைவன் கவிக்குமொரு முடியினும்
உயர்ந்ததிரு முடிகள், அம்மா !
தேங்கா மரத்திலே மாங்கா பறிக்கவொரு
சிணைமந்தி கொக்கை நோக்கும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே !
தேவியழ கம்மை உமையே ! 8

35. வாணிக்கும் நளினிக்கும் அரிய தாய் என்றுன்ணை
வாயார வாழ்த்தி நின்றேன் ;
மந்தாரம் முல்லைஇரு வாட்சிநீ யென்றுதலை
மாலையின் அணிந்து கொண்டேன் ;
கோணுக்குள் வளர்கின்ற குயிலென் றுணைத்தினம்
கோணுது பேணுகின்றேன் ;
குளிரான திங்களொடு கொண்டலென் றென்பவக்
கோடையுந் தீர வந்தேன் ;

---

34. தேங்காமரம்-தேம் காமரம்; கொக்கு - மாமரம்.

மாணிக்கம் வயிரமர கதமும்நீ யென்றென்
மனப்பே டகத்து வைத்தேன் !
வையகத் தெளியேனை ஆட்கொள்ளத் வந்தகுல
மாதெய்வம் நீயல்லவோ?
சேணுக்கு நாட்டு பல தூணுக்கு நிகரெனத்
தெங்கினஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!
தேவியழ கம்மை உமையே ! 9

36. கொண்டலைக் கண்டனைய கூந்தலும், குவியாத
கோகனக மொத்த முகமும்,
குண்டலந் திகழ்கின்ற காதும்,ஒப் பின்றிஅருள்
குடிகொண்ட நீண்ட விழியும்,
தொண்டையங் கனிவாயும், வெண்மூர லும்,ஞான
சுதைதங்கு கும்ப தனமும்,
துடியொத்த இடையும், ஒரு பிடியொத்த நடையும்,
சூலஞ் சுமந்த கரமும், [முச்
பண்டைநாள் சிவனோடு வாதாடி நடமிட்ட
பாதார விந்த மலரும்,
பாலனேன் கண்டுகளி கூரவே, திருவுளம்
பாலிக்க வேண்டும், அம்மா !
தெண்டிரை யுடுத்தபூ மண்டலத் தேவந்த
தேவபுரி யொத்த புரியாம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே !
தேவியழ கம்மை உமையே ! 10

## 9. கோவில் வழிபாடு

### 1

37. கோவில் முழுதுங்கண்டேன் - உயர்
கோபுரம் ஏறிக்கண்டேன்,
தேவாதி தேவனையான் - தோழி !
தேடியுங் கண்டிலனே. 1

38. தெப்பக் குளங்கண்டேன் - சுற்றித்
தேரோடும் வீதிகண்டேன்,
எய்ப்பில்வைப் பாம்அவனைத் - தோழி !
ஏழையான் கண்டிலனே. 2

39. சிற்பச் சிலைகண்டேன் – நல்ல
சித்திர வேலைகண்டேன்,
அற்புத மூர்த்தியினைத் – தோழி !
அங்கெங்கும் கண்டிலனே. 3

40. பொன்னும் மணியுங்கண்டேன் – வாசம்
பொங்கும் பூமாலைகண்டேன்,
என்னப்பன் எம்பிரானைத் - தோழி !
இன்னும்யான் கண்டிலனே. 4

41. தூப மிடுதல் கண்டேன் – தீபம்
சுற்றி எடுத்தல்கண்டேன்,
ஆபத்தில் காப்பவனைத் - தோழி !
அங்கேயான் கண்டிலனே. 5

42. தில்லைப் பதியுங்கண்டேன் - அங்குச்
சிற்றம் பலமுங் கண்டேன்,
கல்லைக் கனிசெய்வோனைத் – தோழி !
கண்களாற் கண்டிலனே. 6

## 2

43. கண்ணுக் கினியகண்டு - மனத்தைக்
காட்டில் அலையவிட்டு,
பண்ணிடும் பூசையாலே - தோழி !
பயனொன்றில்லை, அடி ! 7

44. உள்ளத்தில் உள்ளான், அடி! - அதுநீ
உணர வேண்டும், அடி !
உள்ளத்தில் காண்பாய்எனில் - கோயில்
உள்ளேயுங் காண்பாய், அடி ! 8

# இலக்கியம்

## 10. கவிதை

45. வண்டி அற்புதப் பொருளாம் – வண்டி
மாடும் அற்புதப் பொருளாம் ;
வண்டி பூட்டும் கயிறும் – என்றன்
மனத்துக் கற்புதப் பொருளாம். 1

46. வண்டல் கிண்டி உழுவோன் – கையில்
வரிவில் ஏந்தி நின்ற
பண்டை விஜயன் போல – இந்தப்
பாரில் அற்புதப் பொருளாம். 2

47. பறக்கும் குருவி யோடென் – உள்ளம்
பறந்து பறந்து திரியும் ;
கறக்கும் பசுவைச் சுற்றி – அதன்
கன்று போலத் துள்ளும். 3

48. ஈயும் எனக்குத் தோழன் – ஊரும்
எறும்பும் எனக்கு நேசன் ;
நாயும் எனக்குத் தோழன் – குள்ள
நரியும் எனக்கு நண்பன். 4

49. கல்லின் கதைகள் எல்லாம் – இரு
காது குளிரக் கேட்பேன் ;
புல்லின் பேச்சும் அறிவேன் – அதைப்
புராண மாக விரிப்பேன். 5

50. அலகில் சோதி யான – ஈசன்
அருளி ருலே அமையும்
உலகில் எந்தப் பொருளும் – கவிக்கு
உரிய பொருளாம், ஐயா ! 6

51. உள்ளத் துள்ளது கவிதை – இன்பம்
உருவெ டுப்பது கவிதை ;
தெள்ளத் தெளிந்த தமிழில் – உண்மை
தெரிந்து ரைப்பது கவிதை. 7

## 11. இலக்கிய பஞ்சகம்

52. வள்ளுவர் தந்த திருமறையைத் – தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே – என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே. 1

53. பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து – கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே – நூலின்
நன்னயம் முற்றுந் தெளிகுவமே. 2

54. தேனிலே ஊறிய செந்தமிழின் – சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் – நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே. 3

55. கற்றவர் மெச்சும் கலித்தொகையாம் – இன்பக்
கற்பனை சேருங் களஞ்சியத்தை
முற்ற அளந்து தெரிவோமே – காதல்
மூழ்கும் துறைகண்டு வாழ்வோமே. 4

56. பண்டை இயற்கை வளங்களெல்லாம் – பத்துப்
பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து,
மண்டல மெங்கும் கமழும் அருந்தமிழ்
வாசம் நுகர்ந்து மகிழ்வோமே. 5

## 12. திருவள்ளுவர்

57. இம்மை மறுமையின் - பயன்கள்
எவருமே யடையச்
செம்மை நெறியினை - விளக்கும்
தெய்வ நூல் செய்தோன். 1

58. வழுக்கள் போக்க வந்தோன் - நல்ல
வாழ்வை ஆக்க வந்தோன் ;
ஒழுக்கம் காட்ட வந்தோன் - தமிழுக்கு
உயிரை ஊட்ட வந்தோன். 2

59. தொன்மை நூல்களெல்லாம் - நன்கு
துருவி ஆராய்ந்து,
நன்மை தீமைகள் வகுத்த
நாவலர் கோமான். 3

60. எதை மறந்தாலும் - உள்ளம்
என்று மே மறவா
பொது மறை தந்த - தேவன்
பொய் சொல்லாப் புலவன். 4

61. அறிவின் எல்லை கண்டோன் - உலகை
அளந்து கணக்கிட்டோன் ;
தறியில் ஆடை நெய்தோன் - தமிழில்
தரும நூல் நூற்றோன். 5

62. சாதி ஒன்றேயாம் - தமிழர்
சமயம் ஒன்றேயாம்
நீதி ஒன்றேயாம் - என்று
நிலை நிறுத்தி நின்றோன். 6

### வெண்பா

63. வையம் புகழ்ஞானி வள்ளுவன் மக்களெலாம்
உய்யும் படிமுப்பால் ஓதினான்—ஐயமின்றி
இம்மை மறுமை யிரண்டுக்கும் நேர்வழியைச்
செம்மையிற் கண்டு தெளிந்து. 7

64. ஜாதி மதபேதம் சற்றேனும் மின்றி நடு
நீதி நிலைகண்ட நீள்புகழோன்—கோதிலாச்
செந்தமிழ்ச் செல்வன் திருவள் ளுவன்பாதம்
சிந்தையிற் கொள்வோம் தினம். 8

65. புத்தகம் நூறு புரட்டிக் களைப்புற்றுச்
சித்தம் கலங்கித் திகைப்பதேன் ?—வித்தகன்
தெய்வப் புலவன் திருவள் ளுவன்சொன்ன
பொய்யில் மொழியிருக்கும் போது. 9

66. நாலா ரணப்பசுவை நாடிக் கறந்தளித்த
பாலாகு மென்றுபா ராட்டுமே—நூலாய்ந்து
வள்ளுவன் தந்த மறுவில் திருக்குறளை
உள்ளுவந் தோது முலகு. 10

## 13. திருக்குறள்

### வெண்பா

67. மக்களுக்கு மாநிலத்தில் வாழ்க்கை வழிகளெலாம்
சிக்கலறக் காட்டிநலம் செய்நூலாம்—மிக்க புகழ்ச்
செந்தமிழ்ச் செல்வத் திருக்குறளை நெஞ்சமே
சிந்தனை செய்வாய் தினம். 1

### வேறு

68. சங்கப் பலகையிலே - அன்று
தனிய மர்ந்த நூலாம் ;
பங்கய நான் முகனே - தமிழில்
பகர்ந்த மாமறையாம். 2

69. ஆதி மனுநூலைத் - திருத்தி
அமைத்த நன்னூலாம் ;
நீதி எடுத்தோதப் - புவியில்
நிகரி லாநூலாம். 3

70. புத்தகக் காட்டினிலே - புகுந்து
புத்தி மயங்குவதேன் ?
பத்தியோ டிந்நூலை - நிதமும்
படித்தல் போதுமையா ! 4

71. ஓதி அறம் தெரிவீர் – பொருளின்
உண்மை உணர்ந்திடுவீர் ;
காதலின் காட்சியெல்லாம் - நன்கு
கண்டு களித்திடுவீர். 5

## 14. கம்பன்

72. ஆரியம் நன்குணர்ந் தோன் – தமிழின்
ஆழம் அளந்துகண் டோன் ;
மாரி மழைபோலக் - கவியின்
மழைபொ ழிந்திடு வோன். 1

73. அயன்ப டைப்பினையும் - திருத்தி
அழகு செய்திடு வோன் ;
நயம்தெ ரிந்துகதை - நடத்தும்
நாட கக்கவி ஞன். 2

74. இந்திர சாலமெல்லாம் - கவியில்
இயற்றிக் காட்டிடு வோன் ;
மந்திரச் சொல்லாலே - உள்ளம்
மயங்கச் செய்திடு வோன். 3

75. உலக உண்மைகளை - எவரும்
உணரக் கூறிடு வோன் ;
அலகி லாக்கலைகள் - உறையும்
ஆலய மாகிடு வோன். 4

76. பண்டைத் தமிழ்மொழியைப் - படித்துப்
பக்குவம் செய்துவைத் தோன் ;
கண்டின் சுவையெல்லாம் - சொல்லில்
கனியக் காட்டிடு வோன். 5

77. எவரும் போற்றிடவே - தமிழில்
இராம கதைபுனைந் தோன் ;
புவனம் உள்ளளவும் - அழியாப்
புகழ் பரந்திடு வோன். 6

78. விருத்தப் பாவினிலே - கருத்தை
விளங்கச் செய்தளித் தோன் ;
திருத்தம் பெற்றநடை - தமிழில்
தெரியக் காட்டிநின் றோன். 7

79. அணி யணியாக - அணிகள்
அடுக்கி வைத்திடு வான் ;
மணி மணியான - பொருள்கள்
வாரி வழங்கிடு வான். 8

80. பண்ணுக் கிசைவாக - விருத்தம்
பாடி அளித்திடு வான் ;
எண்ணும் கருத்துடனே - சந்தம்
இசையச் செய்திடு வான். 9

81\. தீது நன்மையெல்லாம் - ஆய்ந்து
தெளியச் சொல்லிடு வான்,
வாதி பிரதிகளின் - வழக்கை
வரைந்து காட்டிடு வான். 10

82\. அரக்கர் நெஞ்சறி வான் - முனிவர்
அகமும் கண்டறி வான் ;
குரங்கின் உள்ளறி வான் - வேடன்
குணமும் நன்கறி வான். 11

83\. நாடகக் காட்சி யெல்லாம் - கவியில்
நன்கு காட்டிடு வான் ;
பாடகர் போற்றிடவே - இனிய
பண்கள் தந்திடு வான். 12

84\. மூவர் முடிவேந்தர் - போற்றும்
முத்தமிழ்ப் பாவேந் தன்,
தேவி அருள்பெற்ருன் - தமிழ்த்தாய்
செய்தவத் தால்பிறந் தான். 13

85\. நன்று செய்தவள்ளல் - சடையன்
நாமம் இப்புவியில்
என்றும் நின்றிடவே - கவியில்
இடம் அறிந்தளித் தோன். 14

86\. புவி யரசரெல்லாம் - நிதமும்
புகழ்ந்து பாராட்டும்
கவியரசர் தொழும் - பெரிய
கம்ப நாடாள் வான். 15

87\. கம்பன் கவிவாழ்க ! - இராம
கதை நிதம் வாழ்க !
அம்புவி மீதெங்கள் - அருமை
அமுதத் தமிழ் வாழ்க ! 16

### வெண்பா

88. எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து—நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்தவைத்த
கம்பன் கவியே கவி. 17

89. உள்ளம் மகிழ உரைநா அமுதூறக்
கொள்ளும் இருகாதும் குளிரவே—தெள்ளரிய
செந்தமிழ்க் கம்பத் திருநாடன் செய்நூலுக்கு
எந்தநூ லாகும் இணை. 18

90. பாரில் பெயரோங்கு பன்மொழிக்கும் நாணுது
நேரில் நிமிர்ந்து தமிழ் நிற்பதுதான்—சீருயர்ந்து
ஏறுபுகழ்க் கம்பன் இராமகதை யால்வந்த
வீறுகொண் டென்று விளம்பு. 19

## 15. கவியமுதம்

### வெண்பா

91. அம்புவிக்கு வாய்த்த அருட்கவி, ஐயமின்றி
உம்பரமு தொத்த உயிர்க்கவி,—கம்பனும் தன்
மந்திரச் சொல்லால் வனைந்தகவி, என்றேனும்
வெந்திடுமோ, தீயால்? விளம்பு. 1

### வேறு

92. ஓலை எரியும் தாளெரியும்
உள்ளத் தெழுதி வைத்துநிதம்
காலை மாலை ஓதுகவி
கனலில் வெந்து கரிந்திடுமோ? 2

93. சிந்தை மகிழ விழாக்கண்டு
தேர்ந்த புலவர் முன்வந்து
சந்த மெழவே பாடுகவி
தழலில் வெந்து நீருமோ ? 3

94. உள்ளத் துவகை பொங்கியெழ
உரைகள் சொல்லப் பொருளேறித்
தெள்ளத் தெளிந்த கவியமுதம்
தீயில் வெந்து பொடியாமோ ? 4

## 16. ஔவை

95. ஔவைக் கிழவி நம் கிழவி,
அமுதின் இனிய சொற்கிழவி,
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி. 1

96. நெல்லிக் கனியைத் தின்றுலகில்
நீடு வாழும் தமிழ்க்கிழவி,
வெல்லற் கரிய மாந்தரெல்லாம்
வியந்து போற்றும் ஒருகிழவி. 2

97. கூழுக் காகக் கவிபாடும்
கூனக் கிழவி ; அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும்
மறவோம் மறவோம் மறவோமே ! 3

## 17. அமரகவி

98. ஊரறிய நாடறிய உண்மை யெல்லாம்
ஒருவரையும் அஞ்சாமல் எடுத்து ரைத்தோன்,
ஆரமுதம் அனையகவி பாடித் தந்தோன்,
அமரகவி யென்றெவரும் புகழப் பெற்றோன்,
சீருயரும் தமிழ்மக்கள் செய்த வத்தால்
தென்னாடு சிறக்க வந்த சுப்ரமண்ய
பாரதியார் பெயர்போற்றி ஏத்து வோமே
பாமாலை புனைந்தவற்குச் சாத்து வோமே.

## 18. பாரதியும் பட்டிக்காட்டானும்

[பட்டிக்காட்டான் பட்டணம் போனான்; பாரதி பாடலைப் பண்ணோடு கேட்டான்; அதில் அவன் மனம் ஈடுபட்டது; சில தினங்களில் ஊருக்குத் திரும்பினான்; அங்கே தன் நண்பர்களுக்கு அப்பாடல்களின் அருமை பெருமைகளை உணர்ந்த மட்டில் விவரித்துக் கூறுகிறான்.]

### வெண்பா

99. உள்ளக் கருத்தையெலாம் உள்ளபடி யானிந்த
வெள்ளைக் கவியில் விளம்பினேன் — தெள்ளுதமிழ்
வெண்பாப் புலியும் விகட கவியுமெனைக்
கண்பார்த்துக் காத்தல் கடன். 1

### வேறு

100. பாட்டுக் கொருபுலவன் பாரதி, அடா! - அவன்
பாட்டைப் பண்ணோடொருவன் பாடினான், அடா!
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனே, அடா! - அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாய், அடா! 2

101. சொல்லுக்குச் சொல்லழகும் ஏறுமே, அடா! - கவி
துள்ளும் மறியைப்போலே துள்ளுமே, அடா!
கல்லும் கனிந்துகனி யாகுமே, அடா! - பசுங்
கன்றும்பால் உண்டிடாது கேட்குமே, அடா! 3

102. குயிலும் கிளியும்பாட்டில் கூவுமே, அடா! - மயில்
குதித்துக் குதித்துநடம் ஆடுமே, அடா!
வெயிலும் மழையுமதில் தோன்றுமே, அடா! - மலர்
விரிந்து விரிந்துமணம் வீசுமே, அடா! 4

103. அலைமேலே அலைவந்து மோதுமே, அடா! - அலை
அழகான முத்தையள்ளிக் கொட்டுமே, அடா!
மலைமேலே மலைவளர்ந் தோங்குமே, அடா! - அதை
வனங்கள் அடர்ந்தடர்ந்து சூழுமே, அடா! 5

104. விண்ணிலொளிரு மீன்கள் மின்னுமே, அடா! - விண்ணில்
விளங்கும் மதிநிலவு வீசுமே, அடா!
கண்ணுக் கினியசோலை காணுமே, அடா! - அதில்
களித்திள மான்கள்விளை யாடுமே, அடா! 6

105. தேனும் தினையும்பாவில் உண்ணலாம், அடா! - மிகத்
தித்திக்கும் முக்கனியும் உண்ணலாம், அடா!
கானக் குழலிசையும் கேட்கலாம், அடா! - ஊடே
களிவண்டு பாடுவதும் கேட்கலாம், அடா! 7

106. நாட்டு மொழியுமவன் பாட்டினிசையில் - மிக்க
நல்ல கற்கண்டினிமை சொட்டுமே, அடா!
ஏட்டிலிம் மந்திரந்தான் கண்டவருண்டோ? - ஈதவ்
ஈசன் திருவருளென் றெண்ணுவாய், அடா! 8

107. உள்ளந் தெளியுமொரு பாட்டிலே, அடா! - மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலே, அடா!
கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலே, அடா! -
[ஊற்றுய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலே, அடா! 9

### வேறு

108. 'கரும்புத் தோட்டத்திலே' - எனுங்கவி
காதைச் சுடுகுதடா!
இரும்பு நெஞ்சமுமே - நீராய்
இளகி யோடுதடா! 10

109. 'செந்தமிழ் நாட்டின்' - முதன் மொழி
செவியிற் சேருமுன்னே,
அந்தமில் லாமல் - உள்ளத்தில்
அமுதம் ஊறுதடா! 11

110. 'பாப்பாப் பாட்டி'லே - நெஞ்சைப்
பறிகொ டுத்தேனடா!
சாப்பா டேதுக்கடா! - சீனி
சர்க்கரை ஏதுக்கடா! 12

111. அன்னை 'பாஞ்சாலி - சபதம்'
அறைதல் கேட்டேனடா!
முன்னைக் கதையெல்லாம் - கண்ணின்
முன் நடந்ததடா! 13

112. 'வந்தே மாதர'த்தைப் - பாடவே
வாய்தி றந்தவுடன்,
சந்தேக மில்லை - ஒருபுதுச்
சக்தி தோன்றுதடா! 14

113. 'எங்கள் நாடு' தான் - பூபாள
இசையி லேறிடுமேல்,
கங்கை யாறுபோல் - உள்ளத்தில்
களிப்பொ ழுகுதடா ! 15

114. 'சின்னஞ் சிறுகிளி' - கனவில்
தினமும் காணுதடா !
கன்னங் குழியவே - முத்தமும்
கனிந்த ளிக்குதடா ! 16

115. 'கண்ணன் காதலன்' - எனக்கொரு
களிய முதமடா !
விண்ண முதமுமே - அதனை
வெல்ல மாட்டாதடா ! 17

116. 'குயிலின் பாட்டி'லே - காதல்
கொப்பு ளிக்குதடா !
செயல்ம றந்தேனடா - லாகிரி
சிரசிற் கொண்டதடா ! 18

117. 'சுதந்திரப் பாட்டில்' - உள்ளம்
துடிது டிக்குதடா !
பதமெ ழும்புதடா ! - கையும்
படப டக்குதடா ! 19

118. 'தொண்டு செய்யுமடிமை' - என்னும்
சுடுச ரம்ஓடி,
மண்டையைத் தாக்குதடா ! - நெஞ்சம்
மடியப் பாயுதடா ! 20

119. பெண்டு பிள்ளைகளின் - பெருமை
பெரித றிந்தேனடா !
சண்டைகள் செய்ததெல்லாம் - எண்ணித்
தலைக விழ்ந்தேனடா ! 21

120. ஏழை துயரெல்லாம் - அவனும்
எடுத்த டுக்கையிலே,
மூளை கலங்குதடா ! - விம்மி
மூச்சும் முட்டுதடா ! 22

121. பாவின் நயமெல்லாம் - யானும்
பகர வல்லேனே ?
ஆவின் பாற்சுவையை -நாழி
அளந்து காட்டிடுமோ ? 23

## 19. பாரதி மண்டபம்

### வெண்பா

122. தேவருமே இங்குவந்து செந்தமிழைக் கற்றினிய
பாவலராய் வாழமனம் பற்றுவரே—பூவுலகில்
வானுயரும் பாரதியார் மண்டபத்தை எட்டப்பன்
மாநகரில் கண்டு மகிழ்ந்து. 1

### வேறு

### திறப்பு விழா

123. பாரதத்தாய் செய்ததவப் பயனாய் வந்த
பாவலன் சுப்பிரமணிய பாரதிக்குச்
சீருயரும் எட்டய்ய புரத்திற் கண்ட
திருக்கயிலை யனையமணி மண்டபத்தைப்
பேருவகை தருசர்வ ஜித்தில் கன்னி
பிறந்த இரு பானேழில் திறந்து வைத்தான்,
தாரணியில் வங்கவள நாட்டை யாளும்
சக்ரவர்த்தி ராஜகோ பால மாலே. 2

## 20. சுந்தரன் பாமாலை

[அறிஞர் பெருந்தகையும் பேராசிரியருமாகிய ராவ்பகதூர் சுந்தரம் பிள்ளை அவர்கள் இகவாழ்வை நீத்து, 1947 ஏப்பிரல் மாதத்தோடு ஐம்பது ஆண்டுகள் நிறைந்தன. இந்நிறைவு நாளின் நினைவுக்குறியாகப் பின்வரும் கவிதைகள் பாடப் பெற்றன.]

### வெண்பா

124. ஆரா அமுதம் அனைய தமிழ்வளர்த்த
பேரா சிரியர் பெருமானைச்—சீராரும்
வஞ்சிமா மன்னர் மதித்தகுண சுந்தரனை,
நெஞ்சமே! நித்தம் நினை. 1

### வேறு

125. தாலம் புகழும் திருஞான
சம்பந் தப்பேர் முனிவாழ்ந்த
கால மதனை ஆராய்ந்து
கற்றோர் மெச்சக் கணித்திட்டோன்,
ஆலப் புழைமா நகருடைய
அறிஞன் பெருமாள் அரும்புதல்வன்,
சீலஞ் சிறந்த சுந்தரனைச்
சிந்தை மகிழ்ந்து போற்றுவமே. 2

126. தில்லைப் பெருமான் அருள்பெற்றுச்
செல்வன் நடரா ஜனைப்பெற்றோன்,
நெல்லை இந்து கலாசாலை
நிறுவித் தலைமை தாங்கிநின்றோன்,
சொல்லி லமுதம் கனிந்துசுவை
சொட்டச் சொட்டக் கவிதருவோன்,
நல்லன் பஹதூர் சுந்தரனை
நாளும் நாளும் போற்றுவமே. 3

127. ஊக்கம் குன்றி உரம்குன்றி
ஓய்ந்த தமிழர்க் குணர்வூட்டி,
ஆக்கம் பெருக, அறிவோங்க,
ஆண்மை வளரச் செய்து, உலகில்
மீக்கொள் புகழைப் பெற்றெழுந்த
விறலோன் நமது சுந்தரனைப்
பாக்கள் புனைந்து மகிழ்ந்துநிதம்
பாடி இனிது போற்றுவமே. 4

128. தேடி வைத்த செல்வமெல்லாம்
திரைகொண் டோட வருந்திமுகம்
வாடி மெலிந்த தமிழணங்கு
மகிழ்ந்து மகிழ்ந்து கூத்தாட,
நாடும் அரிய மனோன்மணிய
நாட கத்தைச் செய்தளித்த
நீடு புகழோன் சுந்தரனை
நித்தம் நித்தம் போற்றுவமே. 5

129. வையம் புகழும் திருவஞ்சி
வளநா டதனை முடிசூடிச்
செய்ய முறைசெய் தரசாண்ட
சேர மன்னர் சரிதமெலாம்
ஐயம் இன்றிச் சிலையிலெழுத்து
ஆய்ந்து சொன்ன பேரறிஞன்,
துய்ய சீலன் சுந்தரன்பேர்
சொல்லி நாளும் போற்றுவமே. 6

130. ஆடும் தில்லை அம்பலன்
அடிகள் மறவா அன்புடையோன்,
பாடித் திருவா சகத்தேனைப்
பருகிப் பருகி இன்புறுவோன்,

கோடைப் பதிசுந் தரமுனியைக்
குருவாய்க் கொண்ட குணசீலன்,
ஈடி லாத பேரறிஞன்,
எங்கள் பெரியன் சுந்தரனே. 7

வேறு

131. சித்திரம் வரைந்து காண்போம் ;
சிலைகண்டு தொழுது நிற்போம் ;
சத்திரம் கட்டி வைப்போம் ;
தருமங்கள் பலவும் செய்வோம் ;
வித்தகன் சுந்த ரன்பேர்
மெய்ம்மையாய் விளங்க வைத்தல்,
இத்தமிழ் நாட்டில் வாழும்
எம்மனோர் கடமை யன்றோ ? 8

வேறு

132. எம்மொழியும் ஈடாகா திம்மொழிக் கென்றுலகம்
செம்மையுறக் கண்டு தெளிந்திடவே—நம்மினிய
செந்தமிழின் தெய்வச் சிறப்பெல்லாம் யாருரைத்தார்
சுந்தரனைப் போலத் தொகுத்து. 9

133. சிந்தை கவரும் சிவகாமி நற்சரிதம்
செந்தமிழில் சுந்தரன் செய்தனனால்—முந்தவரு
மூலத்தை வெல்லும் மொழிபெயர்ப்பென் றேஎவரும்
சாலப் புகழ்ந்திடவே தான். 10

134. ஆசிரியன் பேர்விளங்க ஹார்வி புரங்கண்ட
மாசிலா மாணவர் மாணிக்கம்—பேசுபுகழ்ச்
சுந்தரன் வந்துதித்த தொல்குலம் இந்நிலத்துச்
சந்ததம் வாழ்க, தழைத்து! 11

## 21. ஆறுமுக நாவலர்

### வெண்பா

135. புண்ணியநாள் நாளெல்லாம் போற்றுநாள், செந்
[தமிழ்த்தாய்
எண்ணியெதிர் பார்க்கும் இனியநாள்,—மண்ணுலகில்
மேவுமுயர் சைவம் விளங்கிடுநாள், ஆறுமுக
நாவலர்கோன் தோன்றியநல் நாள். 1

### வேறு

136. ஆடும் தில்லை யம்பலவன்
அடிகள் மறவா அன்புடையோன்,
பீடு பெறவே செந்தமிழைப்
பேணி வளர்த்த பெரும்புலவன்,
நீடு சைவம் இவ்வுலகில்
நிலவச் செய்த குருநாதன்,
நாடு புகழும் ஆறுமுக
நாவ லன்பேர் மறவோமே. 2

137. இல்லா ஏழை எளியவருக்கு
இரங்கும் இனிய குணசீலன்,
கல்லா தவரின் கல்நெஞ்சும்
கனியப் பேசும் கனிவுடையோன்,
வல்லா ரறிஞர் செல்வரறம்
வளர்க்கும் ஈழ வளநாட்டான்,
நல்லார் போற்றும் ஆறுமுக
நாவ லன்பேர் மறவோமே. 3

# சரித்திர கவிதை

## 22. அன்பின் வெற்றி

[தமிழ் நாட்டிலுள்ள ஆண்டாள் சரித்திரம் போலவே வடநாட்டிலே மீராபாய் என்னும் பக்தையின் சரித்திரம் வழங்கி வருகிறது. ஆண்டாள் பாடிய பாசுரங்களை யொப்ப ஹிந்தி மொழியில் மீராபாய் பாடிய பாடல்கள் பிரபலமாக வழங்கி வருகின்றன. கீழ்வரும் பாடல்கள் மீராபாயின் பாடல்களைத் தழுவிப் பாடப்பட்டனவாகும்.]

### 1

[ராஜபுதனத்திலுள்ள ஒரு சிற்றரசனுக்குப் புதல்வியாக மீராபாய் 1601-ஆம் ஆண்டில் பிறந்தாள். சிறு குழந்தையாக இருந்தபோது அவள் வைத்து விளையாடிக்கொண்டிருந்த கிருஷ்ண விக்கிரகத்தைச் சுட்டி, 'இவரே உன் மாப்பிள்ளை' என்று தாயார் விளையாட்டாகச் சொன்னதைக் கருத்திலே கொண்டு, மீராபாய், கண்ணனையே தன் நாயகனுக வரித்து, அவனிடத்திலே அளவற்ற அன்பு செலுத்தி வந்தாள். சாது ரவிதாஸ் என்ற ஒரு பக்தர் பூஜித்துவந்த கிரிதர கோபால விக்கிரகத்தைப் பெற்று, அதை அன்போடு பூஜித்து ஆடியும் பாடியும் பஜனை செய்துவரும் நாளில், கிரிதரகோபாலன் தன்னை மணந்ததாக ஓரிரவிலே கனுக்கண்டு, பொழுது புலர்ந்த பின் தாயினிடம் தன் கனவைக் கூறுகிருள்.]

138. அன்னையே! தாயே! அழகன் ஜகதீசன்
என்னை மணக்க இரவில் கனுக்கண்டேன் ;
நென்னல் இரவுகண்ட நீண்ட கனுமுழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன் ; கேளம்மா ! 1

139. ஆல மரங்கள் அடர்ந்து வளர்ந்தவொரு
சோலையும், அந்தச் சோலை நடுவாக
நீல மணிநீர் நிறைந்த குளமொன்றும்,
காலை எழுமுன் கனுக்கண்டேன் ; அம்மா ! நான். 2

140. நங்கையர் கூடி நலங்கனிந்து, என்மீது
குங்குமம் பூசிக் குளிர்சந் தனம்பூசி,
மங்கள மாக மஞ்சள் மிகப்பூசி,
அங்குநீ ராட்டக் கனுக்கண்டேன்; அம்மா! நான். 3

141. தோரணம் நாட்டித் துழாய்மாலை தொங்கவிட்டுப்
பூரண கும்பம் பொலிவாக முன்வைத்துத்
தாரணி போற்றத் தகுமோர் புரோகிதர்வந்து,
ஆரணம் ஓதக் கனுக்கண்டேன்; அம்மா! நான். 4

142. செய்தற் கரிதாம்அத் திருமணப் பந்தரின்கீழ்,
வையம் அளந்து வளர்ந்த வடிவழகன்,
ஐம்பத் தறுகோடி ஆட்கள் நடுவேஎன்
கையைப் பிடிக்கக் கனுக்கண்டேன்; அம்மா! நான். 5

143. முன்செய் தவப்பயனால் முகுந்தன் கிரிதரனே
அன்பு நிறைந்திடுமென் அகமுடையா னுகவந்தான்;
இன்ப மணமும்நேற் றிரவிலே யானது அம்மா!
துன்பம் ஒழிந்ததம்மா! சுகமும் பிறந்ததம்மா! 6

2

[மீராவின் அழகையும் பாட்டையும் பற்றிய புகழ் நாடெங்கும் பரவிற்று. மேவாட் மகாராணுவின் மூத்த குமாரனு போஜராஜன் அவள் புகழைக் கேட்டு, அவளைப் பார்க்கவும் அவள் பாட்டைக் கேட்கவும் விரும்பி, தன் தலை நகராகிய சித்தோரினின்றும் புரப்பட்டு, மாறுவேடத்தோடு சென்று, அவளுடைய ஹரிபஜனைக்காகக் காத்திருந்தான். எளிய உடையோடு தோன்றி மீராபாய் நந்தகுமாரன் புகழைப் பாடுகிருள்.]

வேறு

144. நித்தம் நித்தம் நீராடில்
நெடுமால் அருளைப் பெறலாமேல்,
தத்தும் தவளை மீன்களும்அத்
தனிப்பே றடைய வேண்டாவோ? 7

145. காயும் கனியும் அருந்துவதால்
கண்ணன் கழலைப் பெறலாமேல்,
ஆயும் கிளைவாழ் குரங்குகளும்
அப்பேறடைய வேண்டாவோ ? 8

146. வாடும் புல்லைத் தின்பதனால்
மாயன் கிருபை பெறலாமேல்,
ஆடும் மாடும் மான்களும்அவ்
அரும்பே றடைய வேண்டாவோ ? 9

147. பெண்ணின் இன்பம் துறப்பதனால்
பெருமான் பாதம் பெறலாமேல்,
மண்ணில் எல்லா அலிகளும்அம்
மாபே றடைய வேண்டாவோ ? 10

148. பாலை நிதமும் குடிப்பதனால்
பரமன் அடியைப் பெறலாமேல்,
ஞால மீது சிசுக்களும்அந்
நற்பே றடைய வேண்டாவோ ? 11

149. உண்மை யன்பை உடையவரே
உலகை யளந்த பெருமானை,
அண்மை யாகக் கண்டிடுவர் ;
அல்லார் காணார், காணாரே. 12

## 3

[மீராவின் பாட்டிலும் அவள் அழகிலும் ஈடுபட்ட போஜ ராஜன் அவளை மணந்து, தன் நகருக்கு அழைத்துச்செல்கிறான். கிரிதரகோபால விக்கிரகத்தையே துணையாக உடன் கொண்டு செல்கிறாள் மீரா. சக்தி வழிபாட்டைக் குல தருமமாகவுடைய பரம்பரையில் வந்த அவளது மாமியார் மீரா செய்யும் விஷ்ணு பூஜையைப் பொறுக்காது, விக்கிரகத்தைப் பிடுங்கி எறிகிறாள். அப்போது, வருத்தத்தோடு மீரா பாடுகிறாள்:]

## வேறு

150. கண்ணனைக் காணுமல் காதல்கைம் மீறியது,
பெண்ணின் நலமிழந்தேன், பெரும்பித்தி யாகி
[விட்டேன் ;
புண்ணைப் பொறுத்தவரும் புண்செய் தவருமல்லால்,
மண்ணில் அதன் வருத்தம் மற்ருேர் அறிவாரோ ? 13

151. நஞ்சினை யுண்டு நலியு மவர்போல,
விஞ்சு மதன்கொடுமை வேறெவரும் காண்பாரோ ?
நெஞ்சத் துயரமெல்லாம் நீங்க, முகில்வண்ணன்
அஞ்சல் அளித்தென்னை ஆட்கொள்வ தெந்நாளோ?

152. அன்பர் படுக்கையுமவ் வாகாய மீதேயாம் ;
என்றன் படுக்கையுமிங்கு ஈட்டிகளின் மேலேயாம் ;
வன்பில் விதிஎனக்கு வகுத்தவழி ஈதானுல்,
இன்ப நலமெல்லாம் எவ்வா றடைவதம்மா ! 15

153. நீடும் மனத்துயரை நீக்கும் மருத்துவனை,
நாடும் நகர்ப்புறமும் நான்கு திசையுமுள்ள
காடும் மலையிடமும் கானற் பெருவெளியும்
தேடி யலைந்தலுத்தேன்; தெரியநான் கண்டிலனே. 16

154. தள்ளற் கரியாள், தமியள் இவளென்று, என்
உள்ளங் கவர்ந்த ஒருவன், எதிர்நின்று
வள்ளத் தமுதம் வழங்க வரினல்லால்,
எள்ளத் தனையும் என்துயரம் நீங்கிடுமோ ? 17

## 4

[மீராவின் துயரத்தைக் கண்ட போஜராஜன் அவள் விருப்பத்தை நிறைவேற்றக் கருதி, அரண்மனையிலேயே கிரிதாரிக்கு ஒரு கோயில் கட்டுவித்தான். கும்பாபிஷேக தினத்தன்று மீரா வந்து பஜனை செய்கிருள்:]

### வேறு

155. வானெங்கும் மழையிருண்டு கவிந்தது ; அன்பர்,
வந்தின்று மனையகத்தே தங்கு கின்றார் ;
ஆனசிறு சிறுதுளியாய்த் தூற்றித் தூற்றி,
ஆனந்தப் பேரேரி நிறைந்தது அம்மா !
ஈனமறப் பலநாளின் பிறகிந் நாளே,
என்விழிகள் அவர் முகத்தைக் கண்ட அம்மா !
யானுமுளம் பித்தேற இன்னும் கைவிட்டு
ஏகுவரோ ! என்று மிக நடுங்கி னேனே. 18

## 5

[ஹரிபஜனையில் ஈடுபட்டிருந்த மீரா தன் நாயகனிடம் அன்பு செலுத்த இயலவில்லை. இதனால் போஜராஜன் கவலை யுற்றிருக்கிறான். இதனிடையில், ஒரு நாள் மீரா நைவேத்தி யத்தை விக்கிரகத்தின் முன் வைத்து, அதை உண்ணும்படி வேண்டுகிறாள் :]

156. விதம்விதமாய்ப் பண்டங்கள் செய்து வைத்தேன் ;
விண்ணமுத மெனக்கறிகள் சமைத்து வைத்
இதமுறவே என்மீதில் இரங்கி, நீஇவ் [தேன் ;
இராஜவிருந் துண்டருள வேண்டும் ; ஐயா !
பதமலரை முடியணிந்து பணிந்து நின்றேன் ;
பகவானே ! கிரிதரனே ! பாரில் என்றும்
சதமெனவே நம்பிவரும் அடியா ருள்ளம்
சலியாது காத்தாளும் தேவ தேவே ! 19

## 6

[விக்கிரகம் உண்ணுதிருப்பதைக் கண்டு மீரா வருந்தி மெய் சோர்ந்து கிடக்க, விக்கிரகம் பிறகு நைவேத்தியத்தை உண்கிறது. கண்ட மீரா ஆனந்தமாய் விக்கிரகத்தோடு பேசி விளையாடிக் கொண்டிருக்கிறாள். இதைக் கண்ட போஜ ராஜன் ஐயுற்று, 'யாரிடம் பேசுகிறாய் ? ' என்று அவளை வினவ, அவள் கிரிதரனே தன் நாயகன் என்று, கிரிதரனைக் காட்டி வருணிக்கிறாள் :]

## வேறு

157. நந்த குமரன் வடிவழகை
நானும் கண்ட நாள்முதலா,
இந்த உலகம் மேலுலகம்
இரண்டும் வேம்பே ஆனதம்மா !
முந்து மயிலின் தோகை, அவன்
முடியின் மணிபோல் ஒளிவிடுமே ;
சந்தத் திலகம், ஈரேழு
தலமும் அடிமை கொண்டிடுமே. 20

158. மீனை வண்டை மானை, அவன்
விழிகள் மறக்கச் செய்திடுமே ;
கானிற் படரும் கோவையும், அக்
கனிவா யிதழைக் காட்டிடுமே ;
ஈன மறுநல் மாதுளைவித்து,
இலங்கும் பல்லுக் கிணையாமே ;
யானம் மூக்குக் குவமையினை
எங்கே கண்டு கூறுவனே ! 21

159. அம்பொற் குழைகள் மிசையாட
அரைஞாண் சதங்கை இசைபாட,
நம்பன் கண்ணன் அழகியவோர்
நடனாய் வந்து நடிக்கின்றான் ;
உம்பர் தொழும் அவ் வுத்தமனின்
உவமை காணா உறுப்பழகுக்கு,
இம்பர் எளியேன் அர்ப்பணமாய்
என்னை இன்று வைத்தேனே. 22

## 7

[இதைக் கேட்டு, போஜராஜன் கவலையிலாழ்கிருன். தேவி அவன் கனவிலே தோன்றி, காலக்கிரமத்தில் மீரா அவனிடம் அன்புடையவளாவாளென்றும், அதுவரையில் பொறுத்திருக்க வேண்டுமென்றும் கூறுகிருள். அவன் ஒருவாறு தேறி, தானும் விஷ்ணு சேவையில் ஈடுபடுகிருன். இடையில், மீரா மதுயாமினி விரதத்தை மேற்கொண்டு தெருக்களில் பஜனை செய்யத் தீர்மானிக்கிருள். அவள் மைத்துனியாகிய ஊதாபாய் வெகுண்டு தடுத்தும் மீரா கேட்காமல் உறுதியாயிருந்து பாடுகிருள் :]

### வேறு

160. என்றுமே கிரிதரனை யன்றி, வேறிங்கு
ஏதுமொரு துணையறியேன் ; எழுந்து முன்னம்
குன்றுயர்த்த கோமானே வணங்குந் தெய்வம் ,
குலப்பெருமை குடிப்பெருமை எல்லாம் [விட்டேன் ;
நன்றுதருந் திருக்கூட்டம் நாடிச் சார்ந்தேன் ;
நாணிழந்தேன் ; எவரையும் நான் மதிக்க [மாட்டேன் ;
துன்று கண்ணீர் விட்டு, அன்புக் கொடிவ ளர்த் [தேன் ;
சுகமென்னுங் கனியையது தந்தது ; அம்மா ! 23

161. பத்தரெலாம் இதுகண்டு மனம கிழ்ந்தார் ;
பாமரரே அறியாது வருந்தி நின்ருர் ;
நித்தமுமே மீரா நின் அடிமை யாளுள் ;
நீ அவளை ஆண்டருள வேண்டும் ; ஐயா !
அத்தியிடர் காத்தபெருங் கருணை யாளா !
அரவணைமேல் துயில்கொள்ளும் ஆதி நாதா !
சித்தமிசை குடிகொண்ட ஞான ரூபா !
தேவகியின் திருமைந்தா ! தேவ தேவா ! 24

---

161. அத்தி - யானை ; கஜேந்திரன்.

## 8

[மீராவின் செயல்களால் வெறுப்புற்ற போஜராஜன் அவளை நாட்டைவிட்டு வெளியே அனுப்பிவிடுகிறான். காட்டின் வழியே மீரா பாடிக்கொண்டு செல்கிறாள் :]

162. எத்திசையும் மேகங்கள் எழுந்து மின்னி,
இடிமுழங்கிப் பெருமழையும் பெய்யக்கண்
[டோம் ;
தத்திவரும் குளிர்வாடை வீசக் கண்டோம் ;
தவளையொடு சாதகமும் கத்தக் கண்டோம் ;
சித்தமகிழ் பூங்குயிலும் கூவக் கண்டோம் ;
ஸ்ரீநந்த குமரன்வர இன்னுங் காணோம் ;
பத்தியொடு பணிகின்றேன் ; கிரித ரா ! உன்
பாதமலால் வேறுதுணை அறியேன் ; ஐயா ! 25

## 9

[காட்டு வழியே சென்று தன் தந்தையின் இல்லமடைந்து, அங்கிருந்து தீர்த்த யாத்திரை செய்கிறாள். கூர்ஜர தேசத்தில் சாது ரவிதாசரைக் கண்டு பணிகிறாள். கணவனை வழிபடுமாறு அவர் கூறிய அறிவுரைகள் பயன்பெறவில்லை. அவர் முன்னிலையில் மீரா பகவானைத் துதிக்கிறாள் :]

163. காசியிலே இறப்பதனால் பயனென்று இல்லை ;
காஷாயம் தரிப்பதொரு வேஷ மேயாம் ;
ஆசையினை வேருடனே அறுக்க வேண்டும் ;
அழியுமுடல் அபிமானம் அகற்ற வேண்டும் ;
பேசுலகில் அழியாத பொருளொன்று இல்லை ;
பெரியவர்க்கும் சிறியவர்க்கும் மரணம்
பாசமுறு சம்சாரம், அந்தி யோடு [ஒன்றே ;
பறந்தகலும் பறவையினை யாட்டே யாமால். 26

164. முத்திநெறி நாடாது, யோகி யாகி
மூச்சடக்கி இருப்போர்கள், பின்னும் பின்னும்
இத்தரையில் வந்துபிறந்து இறத்தல் திண்ணம் ;
இவ்வுண்மை எந்நாளும் பொய்ப்ப தில்லை ;
பத்தியொடு கைகூப்பிப் பணிகின் றேன் ; உன்
பாதமலால் வேறுதுணை யொன்றும் இல்லை ;
நித்தியனே ! யமபாசம் அண்டாது, என்னை
நீஆண்டு காத்தருள வேண்டும் ; ஐயா ! 27

## 10

[ரவிதாசர் அவள் பாடிய பாடலின் கருத்தை அவளுக்கு விளக்கிக் கூறி, ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதே கடமை என்று மீண்டும் போதிக்கிறார். அவள் அதை உணர்ந்தும், அவள் மனம் சம்சாரபந்தத்தில் கட்டுப் படவில்லை. கண்ணனுடைய பிரிவை எண்ணி வருந்திப் பலமுறை பாடுகிறாள் :]

165. இரவுபகல் எப்பொழுதும் உன்னைக் காணாது,
இருக்கமனம் வருவதிலை ; ஐயா ! நீதான்
வரும்வழியில் முகம்வைத்து, மேடை நின்று,
மாலையாய்க் கண்ணீரும் வடித்து நிற்பேன் ;
' உரியகுலம் குடியாவும் மாயை ' என்னும்
உண்மையினை உள்ளபடி உணர்ந்து கொண்
[டேன் ;
குருமொழியில் மனப்பேயை அடக்கி, உன்றன்
குரைகழலே தஞ்சமெனக் கும்பிட் டேனே. 28

166. கண்ணுமுனைக் காணுமல் கலக்கங் கொள்ளும் ;
கணமேனும் உள்ளத்தில் அமைதி யில்லை ;
உண்ணுதற்கும் பசியில்லை; உறக்க மில்லை ;
ஓரிரா ஓர்யுகமாய்க் கழியுது; ஐயா !
நண்ணிஎனை வாள்போல அறுக்கும் இந்த
நலிவையெலாம் யாவரிடம் சொல்லி நிற்பேன்?
எண்ணிஎண்ணி நைந்துருகும் என்னை யாள,
எந்நாளிங் கெழுந்தருள்வாய்? எம்பி ரானே! 29

## 11

[ஒரு முறை சமாதிநிலையில் கண்ணனுடைய தரிசனம் கிடைக்கப் பெற்றபோது பாடுகிறாள்:]

### வேறு

167. கார்முகிலின் மேனிபெறும் நந்தகுமரா ! – என்றன்
 கண்களிலே குடியிருப்பாய்; நந்தகுமரா !
மார்பினிலே வைஜயந்தி மாலையணியும் – உன்றன்
 வடிவினிலே மயங்கிநின்றேன்; நந்தகுமரா !
ஆரமுத மூறுமிதழ் மீதிலமரும் – குழல்
 அழகினுக்கோர் அளவுமுண்டோ? நந்தகுமரா !
சேருமணி யாடரைஞாண் பாதசதங்கை – ஒலி
 செய்திடவே வந்தருள்வாய்; நந்தகுமரா !
பாரும் விண்ணும் பணிந்துதொழும் நந்தகுமரா !–
 [என்றும்
 பத்தரையாள் ஈசன்நீயே! நந்தகுமரா ! 30

## 12

[சமாதியில் கண்ட கண்ணன் திருமுகம் மீராவுக்குத் தன் கணவனை ஞாபகப்படுத்திற்று. அப்பொழுதே தன் கடமையை உணர்ந்து, சித்தோருக்குத் திரும்பினாள். பத்து வருஷகாலம் போஜராஜன் அவளோடு கூடி இல்லறம் நடத்தினான். பின்னர் ஒருசமயம் போருக்குச் சென்ற விடத்து, போரில் உயிர் துறந்தான். அவன் தம்பி உதய சிம்மன் ராணாவானான். மீராவின் விஷ்ணு பக்தியைக் கண்டு வெறுப்படைந்து, அவளைக் கொல்ல முயன்றான். அவன் செய்த முயற்சிகள் பயனற்றுப் போகின்றன. அவன் தன்னைக் கொல்ல முயன்றதையும் கிரிதரனுடைய கருணையையும் நினைந்து மீரா பாடுகிறாள்:]

### வேறு

168. தணியா அரவின் கூடையொரு
சாளக் கிராமம் ஆயிடுமே!
அணியார் கிண்ணத் தருநஞ்சும்!
அமுதாய் இனிமை தந்திடுமே!
திணியார் சூலப் படையுமலர்ச்
சேக்கை யாக மாறிடுமே!
மணியார் வண்ணன் அடியருளம்
மலையா தென்றும் காப்பானே. 31

## 13

[மறுபடியும் நாட்டைவிட்டுச் சென்ற மீரா இறுதியில் பிருந்தாவனத்துக்கு வந்து சேர்கிருள். அங்குள்ள பழைய கண்ணன் கோயில் அடைத்துக் கிடக்கிறது. அதைத் திறக்கச் செய்ய ஒருவராலும் இயலவில்லை. மீராவே அது திறக்கும்படி பாடவல்லவள் என்பதையுணர்ந்த ஒருவர் அவளைக் கோயிலுக்கு அழைத்துச் செல்ல, அவள் அங்கே பாடுகிருள்:]

### வேறு

169. ஆளடிமை யாகஎனை அமர்த்திக் கொள்வாய்;
அழகாக நந்தவன வேலை செய்வேன்;
நாள்விடிய எழுந்துன்னை நமஸ்க ரிப்பேன்;
நலமிகவே நின்கதைகள் பாடி நிற்பேன்;
மீள்கூலி யாயுனது காட்சி போதும்,
மேற்செலவுக் குன்நாம செபமே போதும்;
நீள்செல்வம் பத்தியலால் வேருென் றில்லை;
நித்தியனே! நின்மலனே! நிகரில் லோனே! 32

170. பொருவரிய யோகியர், மா தவத்தின் மிக்கோர்,
புள்ளுயர்த்தோன் அடிமறவாப் பத்திச் செல்
பெருமைதரு மாபிருந்தா வனத்தில் இன்று [வர்,
பேறுபல பெற்றிடவே கூடி நின்ருர் ;
அருமறைக்கும் எட்டாத ஆதிநாதன்,
அரையாமத் தன்புநதிக் கரையில் வந்து,
கருதரிய கண்காட்சி தருவான் ; சற்றும்
கலங்காம லிருப்பாய்என் ஏழை நெஞ்சே! 33

## 14

[பாட்டு முடியவும் கதவு திறக்கிறது. கண்ணனைத் துதித்துக் கொண்டு மீரா அங்கே இருந்துவருகிருள். அவள் பிரிவினுல் சித்தோர் ராஜ்யம் க்ஷீணமடைந்தது எனக் கருதிய ராணு அவளை அழைத்து வருமாறு பக்தர்களை அனுப்புகிருன். அவள் திரும்பிச் செல்ல மனமின்றி, தன்னை ஏற்றுக் கொள்ளும்படி கண்ணனை வேண்டுகிருள்:]

வேறு

171. என்றும் எனைநீ ஏற்றுக்கொள் ;
எனக்குத் துணைவே றெவருமில்லை ;
கன்று பசியும் எனக்கில்லை ;
கண்ணில் உறக்கம் சிறிதுமில்லை ;
துன்றும் உடலும் குறுகி, ஒரு
துரும்பாய்த் தேய்தல் கண்டிலையோ ?
நன்று தருவாய்; எனைக்கூடி,
நடுவிற் பிரியா தருள்வாயே. 34

## 15

[விக்கிரகம் இரண்டாய்ப் பிளந்து, மீராவைத் தன்னுள் அடக்கிக் கொண்டது. இவ்வாறு மீரா தன் அறுபத்தேழாம் வயதில் பரமபதம் அடைந்தாள்.]

## 23. ஓர் இராணியின் சாபம்

[இன்றைக்கு 270 வருடங்களுக்குமுன் திருவிதாங்கூர் இராச்சியத்தை உமையம்மை இராணி என்றொரு மகாராணி ஆண்டு வந்தார். அவருக்கு ஆறு ஆண் மக்கள் இருந்தனர். இராஜத் துரோகிகளாகிய மாடம்பிமார், எட்டு வீட்டுப் பிள்ளைமார் முதலியோர் அவருள் ஐந்து மக்களைச் சதியாக ஒரு குளத்துக்குக் கொண்டுபோய்த் தண்ணீரில் அமிழ்த்திக் கொன்றுவிட்டார்கள். ஏககாலத்தில் ஐந்து குழந்தைகளையும் பிரேதங்களாகக் கண்ட இராணி மனமெரிந்து, அப்பாதகரைச் சபிக்கின்றாள். சாபம் பலித்ததென்பது திருவிதாங்கூர்ச் சரித்திரத்தால் நன்கு விளங்கும். ஸ்ரீ பத்மநாபன் இராணியின் குலதெய்வமாம்:]

172. மக்காள் ! மக்காள் ! வளர்த்தபைங் கிளிகாள் !
வஞ்சி நாடாள வந்த மகிபர்காள் !
பாவியென் மடியும் பக்கமும் இருந்தீர் !
இக்கண மன்றோ இறங்கிச் சென்றீர் !
எமனும் இதற்குள் எங்கிருந் திறங்கினன் ?
உயிரிழந் தீரோ ? உறங்குகின் றீரோ ?
ஐம்பொறி கெட்டென் அறிவும் ஓய்ந்திட
ஐவரும் குளத்தில் ஆழ்ந்து போனீரோ ?
ஒருகுலைக் காயும் ஒன்றாய் உதிர்ந்ததோ ?
வஞ்சனை ! வஞ்சனை ! மாடம் பிகளும்
எட்டுவீட் டாரும் இயற்றிய வஞ்சனை !
இரக்கம் சிறிதும் இல்லா அரக்கர் !
‘கொட்டா ரம்,தீக் கொளுத்திய நீசர்
மாமன் ஆதித்த வர்மனை விஷத்தால்
மாளச் செய்தமா பாதகர் ! ஐயோ !

---

172:13. கொட்டாரம் - அரண்மனை.

நாடும் இவரால் காடாய் விட்டதே!
புலிசூழ் வனத்தொரு புல்வாய் ஆனேன்.
நாடிருந் தென்ன ? நகரிருந் தென்ன ?
அணிதேர் புரவி ஆளிருந் தென்ன ?
உண்மையில் உற்றார் ஒருவரும் இல்லை, இன்று
எவரும் துணையிலா ஏழையாய் நின்றேன்.
எமன்வாய்த் தவறிய இவ்வொரு மகற்காய்
உயிர்கொண்டிருந்தேன் ; உயிர்கொண்டிருந்தேன்.
கொடியர் ! கொடியர் ! அறவே கொடியர் !
ஏதும் ஒருதயை இலாச்சண் டாளர் !
பச்சைப் பசலைகள் பாலகர் என் செய்தார் ?
நினைக்கும் போதென் நெஞ்சில் மூள்தீ;
ஐயோ ! ஐயோ ! அறையற் பாலதோ !
பதும நாபா ? பாற்கடல் வாசா !
அரவணை மேல்கண் அயர்ந்தே போனையோ!
துரியோ தனர்க்கும் துணையாய் விட்டையோ!
எட்டுவீட் டாதி இராட்சசப் பேய்காள் !
என்மனம் சுடும்இவ் வெரிபோய் உங்கள்
சுற்றமும் குலமும் சுடும்சுடும். மேலுமிவ்
வினைத்திரள் எல்லாம் வேல்திர ளாய்உம்
மனத்தில் ஊடுருவி வாட்டுதல் திடமே.

## 24. இரக்ஷகர்

173. அன்னியர் ஆட்சியிலே - யூதர்
அடைந்த துன்பமெலாம்
பன்ன எளிதோ ? அம்மா ! - நினைக்கில்
பதைக்குது உள்ளம் அம்மா ! 1

174. நீசர் சண்டாளர் – சற்றும்
நெஞ்சினில் அச்சமில்லார்
ஈச னுக்குரிய – பீடத்தில்
ஏறி யிருந்துகொண்டார். 2

175. உண்ண உணவுமின்றி – உழைப்புக்கு
ஓய்வொரு நாளுமின்றிக்
கண்ணீர் சொரிந்து நின்றார் – யூதர்
கலங்கித் தட்டழிந்தார். 3

176. அல்லும் பகலுமே – துயரில்
ஆழ்ந்து மூழ்கிடினும்,
நல்ல காலம்வரும் – வருமென
நம்பி நாள்கழித்தார். 4

177. " இருள் ஒதுங்கிடவே – கதிரோன்
எழுந்து கிளர்வதுபோல்,
அருள் இறைமகனும் – நம்மை
ஆள வந்திடுவான். 5

178. உண்மை ஒளிவீசும்; – அப்போது
உலகில் நீதியோங்கும்;
அண்மையி லேநாமும் – நன்மை
அடைவோம்" என்றிருந்தார். 6

179. " அருங்கு ணச்செல்வன் – புவியில்
அவத ரித்திடுநாள்
நெருங்கி வந்ததிதோ! – மிகவும்
நெருங்கி வந்ததிதோ! 7

180. வருவீர் வருவீரே - எவரும்
வருவீர்" என்றுநலம்
மருவு காலிலிமா-நகரிலோர்
வார்த்தை கேட்டதம்மா! 8

181. சின்னாள் சென்றிட ஓர் - அற்புதத்
தீர்க்க தரிசிதோன்றி,
எந்நா டும்அறியச் - சிங்க
ஏறுபோ லேஎழுந்து : 9

182. " விடுவீர் எப்பொருளும் - விடுவீர்
விட்டுவந் தென்வழியைத்
தொடர்வீர் தொடர்வீரே" - என்று
சொல்மு ழக்கஞ்செய்தான். 10

183. பூமியை ஆளுதற்குத் - 'தேவ
புத்திரன் வந்துதித்தான்;
க்ஷேமம் பிறக்குமென - யூதர்
சித்தை களித்திருந்தார். 11

184. "ஈசன் நாமத்தை - அனுதினம்
ஏத்திப் புகழவேண்டும்;
தாச தாசனாய்ப் - பணிந்து
தருமம் காக்கவேண்டும். 12

185. உன்னுயி ரைப்போல - இந்த
உலகில் உயிரையெல்லாம்
மன்னும் அன்பொடுநீ - என்றும்
மதித்து வாழவேண்டும். 13

186. மேவும் எனதாட்சி - அந்த
விண்ணுல காட்சியேயாம் ;
ஏவல் இடம்பொருளில் – எனக்கிங்கு
ஏதும் மயக்கமில்லை.'' 14

187. என்னும்இப் பொன்னுரைகள் - நாட்டில்
எங்கும் எடுத்துரைத்தான் ;
மன்னுயிர் காத்திடவே - மண்ணில்
வந்து பிறந்தமகன். 15

188. ஏழை படும்பாட்டை - அவனும்
எண்ணி எண்ணிநைவான் ;
ஏழையொ டேழையாக - உலகில்
எங்கும் அலைந்திடுவான். 16

189. கால்முடம் நீக்கிடுவான் - குருட்டுக்
கண்களும் காணவைப்பான் ;
சாலப் பெருநோயும் - கையால்
தடவிப் போக்கிடுவான். 17

190. தேச விவகாரம் - அவனும்
செவியிற் கொள்வதில்லை ;
காசு பணத்தை அவன் –என்றுமே
கைகளால் தொட்டதில்லை. 18

191. பக்கத்தில் உள்ளவர்கள் - தேச
பக்தர் புரோகிதர்கள்
மிக்க பழிசுமத்தி - அவனுளம்
வெந்திடச் செய்து விட்டார். 19

192. “யூதரின் மன்னவன்யான் - எனவந்து
ஓதுகின்றான்; இவனை
நீதிசெய் வீர்”எனவே - மன்றத்தில்
நிறுத்தி வழக்காடினார். 20

193. ஏசுவினைச்சிலுவை - மரத்தில்
ஏற்றிக் கொல்வதென்றே
நாசகா லர்கூடி - விதியங்கே
நாட்டி விட்டார் ஐயோ! 21

194. “மன்னுயிர் காத்திடவே - இங்கு
வந்து பிறந்தமகன்
தன்னுயிர் காக்கவொண்ணாது - இன்று
தயங்கி நிற்கின்றான்! 22

195. முழக்கம் செய்துவந்தான் - வழக்கை
முடித்து நிற்கின்றான்;
ஒழுக்கம் காட்டவந்தான் - இங்கே
உயர்வு பெற்றுவிட்டான்!” 23

196. என்று பற்பலரும் - அவனை
ஏளனம் செய்து நின்றார்;
ஒன்றும் உரையாமல் - உரவோன்
உள்ளம் அடங்கிநின்றான். 24

197. "யாதும் அறியாதார் – அவர்பிழை
யாவும் பொறுத்திடுவாய்;
நாதனே!" என்றீசன் – அருளை
நயந்து வேண்டிநின்றான். 25

198. விண்ணையே நோக்கி நின்றான் – எதனை
வேண்டி நின்றனனோ?
எண்ணிய எண்ணமெல்லாம் – இங்கே
யாவர் அறிவர் அம்மா! 26

199. "உன்னையே நம்பி நின்றேன் – உதவிக்கு
ஒருவரை யும்காணேன்;
என்னைக்கை விட்டனையோ? – ஈசா!"
என்று வருந்தி நின்றான். 27

200. தெய்வ உதவியெதும் – அந்நாள்
தெரிய வந்ததில்லை;
செய்தவிண் ணப்பமெல்லாம் – வீணாய்ச்
சிதைந்து போனதையோ! 28

201. சரணம் நீயென்றே – தலையைத்
தாழ்த்து நின்றதலால்,
மரண வேளையிலும் – ஈசனை
மறந்த தில்லை அவன். 29

202. ஆவி பெற்றனனோ? - இன்றும்
அம்புவி வாழ்பவனோ?
யாவர் அறிந்திடுவார்? - அறியினும்,
யாவரே கூறவல்லார்?

# மழலை மொழி

---

## 25. முத்தந் தா

203. கண்ணே ! மணியே ! முத்தந் தா,
கட்டிக் கரும்பே ! முத்தந் தா ;
வண்ணக் கிளியே ! முத்தந் தா,
வாசக் கொழுந்தே ! முத்தந் தா. 1

204. தேனே ! பாலே ! முத்தந் தா,
தெவிட்டாக் கனியே ! முத்தந் தா ;
மானே ! மயிலே ! முத்தந் தா,
மடியில் வந்து முத்தந் தா. 2

## 26. தாலாட்டு

205. ஆராரோ ? ஆராரோ ?
ஆரிவரோ ? ஆராரோ ? 1

206. மாமணியோ ? முத்தோ ?
மரகதமோ ? மன்னவர்தம்,
தாம முடிமீது
தயங்கும் வயிரமதோ ? 2

207. முல்லை நறுமலரோ ?
முருகவிழ்க்குந் தாமரையோ ?
மல்லிகைப் பூவோ ?
மருக்கொழுந்தோ ? சண்பகமோ ? 3

208. தெள்ளமுதம் உண்டு,
தெவிட்டாக் கனிஉண்டு, எம்
உள்ளங் குளிர
உரையாடும் பைங்கிளியோ ? 4

209. கற்கண்டு, சீனி,
கனியுங் கனிந்தொழுகு
சொற்கொண்டு எமக்குச்
சுகமளிக்கும் பூங்குயிலோ ? 5

210. நெஞ்சிற் கவலையெலாம்
நீங்கத் திருமுகத்தில்,
புஞ்சிரிப்பைக் காட்டி, எம்மைப்
போற்றும் இளமதியோ ? 6

211. பல்லக்கில் அம்மான்
பவனி வரும்பொழுது,
மெல்ல மடியிருந்து
விளையாடும் பைங்கிளியோ ? 7

212. பூமாலை வாடும், மணம்
பொன் மாலைக் கில்லையென்று,
பாமாலை வைத்தீசன்
பாதம் பணிபவனோ ? 8

213. பாலமுதம் உண்டுதமிழ்ப்
பாமாலை பாடி, இந்தத்
தாலம் புகழவரும்
சம்பந்தன் நீதானோ ? 9

---

212. பாமாலை வைத்துப் பணிந்தவர் – அப்பர்.

214. கொன்றையணிந் தம்பலத்தில்
கூத்தாடும் ஐயனுக்கு,
வன்றொண்ட ஞக
வளர்ந்தவனும் நீதானே ? 10

215. கல்லைப் பிசைந்து
கனியாக்குஞ் செந்தமிழின்
சொல்லை மணியாகத்
தொடுத்தவனும் நீதானே? 11

216. பூவில் அயனும், இந்தப்
பூமீது வள்ளுவர் தம்
பாவின் நயம்உணரப்
பாலகனாய் வந்தானே ? 12

217. கம்பன் கவியின்
களியமுதம் உண்டிட, மால்
அம்புவியில் வந்திங்கு
அவதாரம் செய்தானே ? 13

218. தேவாரப் பாகும்,
திருவா சகத்தேனும்,
நாவார உண்ண எம்மான்
நன்மகவாய் வந்தானே ? 14

219. ஆக்கம் பெருக,
அறம்வளர, நாட்டையெலாம்
காக்கும் பெருமான்
கருணைத் திருவுருவோ ? 15

---

214. வன்றொண்டர் - சுந்தரர்.

215. செந்தமிழின் சொல்லை மணியாகத் தொடுத்தவர் - மாணிக்கவாசகர்.

219. அறம் வளரக் காக்கும் பெருமான்- புத்தர்.

220. புள்ளி மயிலோடு
புனங்காத்து நிற்கும் அந்த
வள்ளி மணவாளன்
மதலையாய் வந்தானோ ? 16

221. ஆயர் பதியில்
அற்புதங்கள் செய்து நின்ற,
மாயவனே இங்கெமக்கு
மகவாகி வந்தானோ ? 17

222. நாலா யிரக் கவியின்
நல்லமுதம் உண்டிட, மால்
பாலாழி நீங்கியொரு
பாலகனாய் வந்தானோ ? 18

223. பெண்கள் சிறுவீட்டைப்
பேணா தழித்து, அவர்தம்
கண்கள் சிவக்கவைக்கும்
கண்ணபிரான் நீதானோ ? 19

224. ஆரடித்தார் நீ அழுதாய்,
அடித்தாரைச் சொல்லி அழு ;
சீரெடுத்த செல்வச்
சீமான் திருக்குமரா ! 20

225. பாலை விரும்பினையோ ?
பணிகாரம் வேண்டினையோ ?
சோலைப் பசுங்கிளியே !
சுந்தரமே ! சொல்லி அழு. 21

226. சப்பாணி கொட்டித்
தளர்ந்தனையோ ? அல்லதுன்றன்
கைப்பாவைக் காகக்
கலங்கி அழுதனையோ ? 22

227. தித்திக்கும் தேனும்
திணைமாவும் கொண்டுன்றன்,
அத்தை வருவாள்,
அழவேண்டாம் ; கண்மணியே ! 23

228. மாங்கனியும், நல்ல
வருக்கைப் பலாக்கனியும்,
வாங்கியுன் அம்மான்
வருவார் ; அழவேண்டாம் ! 24

229. கண்ணுறங்கு, கண்ணுறங்கு ;
கண்மணியே ! கண்ணுறங்கு ;
ஆராரோ ஆராரோ ? 25
ஆரிவரோ ? ஆராரோ ?

## 27. அரசே எழுந்திரு

230. அப்பா எழுந்திரையா !
அரசே எழுந்திரையா !
கொக் கொக்கோ என்று
கோழி அதோ கூவுது பார் ! 1

231. கா கா கா என்று
காகம் பறக்குது பார் !
கிழக்கு வெளுக்குது பார் !
கிரணம் பரவுது பார் ! 2

232. பூ மலர்ந்த ரோஜா
புதிய மணம் வீசுது பார் !
வந்து வந்து வண்டு
வட்டம் சுழலுது பார் ! 3

233. கறவைப் பசுவை அதன்
கன்று சுற்றித் துள்ளுது பார் !
பால் குடிக்க வேண்டாமோ ?
பழம் தின்ன வேண்டாமோ ? 4

234. பாடங்களெல்லாம்
படித்திட வேண்டாமோ ?
சீக்கிரம் பள்ளிக்குச்
சென்றிட வேண்டாமோ ? 5

235. காலையும் ஆச்சுதையா !
கண்விழித்துப் பாரையா !
அப்பா எழுந்திரையா !
அரசே எழுந்திரையா ! 6

## 28. காலைப் பாட்டு

236. அருணன் உதித்தனன் ; அம்புஜம் விண்டது ;
அளிகளும் மொய்த்தன ; பாராய் !
அம்மா! நீ எழுந்தோடி வாராய் ! 1

237. பசிய புல் நுனியில் பதித்தவெண் முத்தமோ ?
பனித்துளி தானோ ? நீ பாராய் !
பைங்கிளி ! எழுந்தோடி வாராய் ! 2

238. பொழுது விடிந்தது ; பொற்கோழி கூவிற்று ;
பூஞ்செடி பொலிவதைப் பாராய் !
பொன்னே ! நீ எழுந்தோடி வாராய் ! 3

239 காகம் கரைந்தது ; காலையும் ஆயிற்று ;
கனியுதிர் காவினைப் பாராய் !
கண்ணே ! நீ எழுந்தோடி வாராய் ! 4

## 29. காக்காய்

240. காக்காய் ! காக்காய் ! பறந்து வா ;
கண்ணுக்கு மை கொண்டு வா. 1

241. கோழீ ! கோழீ ! கூவி வா ;
குழந்தைக்குப் பூக் கொண்டு வா. 2

242. வெள்ளைப் பசுவே ! விரைந்து வா ;
பிள்ளைக்குப் பால் கொண்டு வா. 3

## 30. கோழி

### சேவற் கோழி

243. கோழீ ! கோழீ ! வா வா !
கொக்கோ கோ என்று வா ;
கோழீ ! ஓடி வா வா ;
கொண்டைப் பூவைக் காட்டு வா. 1

244. குத்திச் சண்டை செய்யவோ ?
குப்பை கிண்டி மேயவோ ?
கத்திபோலுன் கால்விரல்
கடவுள் த்ந்து விட்டனர் ! 2

245. காலை கூவி எங்களைக்
கட்டில் விட்டெ ழுப்புவாய் ;
வேலை செய்ய ஏவுவாய் !
வெற்றி கொண்ட கோழியே ! 3

## பெட்டைக் கோழி

246. கோழீ ! கோழீ ! வா வா ;
கூரை விட் டிறங்கி வா ;
கோழீ ! முட்டை இட வா ;
கூட்டில் அடை காக்க வா. 4

247. பெட்டைக் கோழீ ! வா வா ;
பிள்ளைகளைக் கூட்டி வா ;
குட்டை நெல்லைக் கொட்டி னேன் ;
கொத்திக் கொத்தித் தின்ன வா. 5

248. வஞ்சமாய்ப் பருந்ததோ
வானில் வட்டம் போடுது,
குஞ்ச ணைத்துக் காப்பாயோ ?
கூட்டில் கொண்டு சேர்ப்பாயோ ? 6

## 31. நாய்

249. வீட்டு வாசல் காப்பவன்,
வேட்டை யாட வல்லவன்,
ஆட்டுக் கிடைப் பாண்டியன்,
அன்பு மிக்க தோழன். 1

250. உண்ட சோற்றை எண்ணி
உயிரும் விடத் துணிபவன்,
மண்ட லத்தில் நாய்போல்
வாய்த்த துணை உண்டோ ? 2

## 32. கிளியை அழைத்தல்

251. பச்சைக் கிளியே ! வா வா ;
பாலும் சோறும் உண்ண வா ;
கொச்சி மஞ்சள் பூச வா ;
கொஞ்சி விளை யாட வா. 1

252. கவலை யெல்லாம் நீங்கவே,
களிப் பெழுந்து பொங்கவே,
பவழ வாய் திறந்து நீ
பாடுவாயோ தத்தம்மா ! 2

253. வட்ட மாயுன் கழுத்திலே
வான வில்லை ஆரமாய்,
இட்ட மன்னர் யாரம்மா ?
யான் அறியக் கூறம்மா ! 3

254. பையப் பையப் பறந்து வா,
பாடிப் பாடிக் களித்து வா ;
கையில் வந்தி ருக்க வா,
கனி யருந்த ஓடி வா. 4

255. பவழக் காரத் தெருவிலே
பவழங் காண வில்லையாம் ;
எவர் எடுத்துச் சென்றனர் ?
எனக் கறிந்து சொல்வையோ ! 5

256. பங்கஜாட்சி கையிலே
பவழங் காண வில்லையாம் ;
எங்கும் உன்னைத் தேடினர்,
எடுத்த துண்டோ தத்தம்மா ? 6

257 அரசர் மார்பில் ஆரத்தை
ஆரோ கொண்டு போனாராம் ;
திருடிச் சென்றார் எவரம்மா ?
தெரியு மானாற் சொல்லம்மா ! 7

## 33. கூண்டுக் கிளி

### சிறுவன்

258. பாலைக் கொண்டு தருகின்றேன்,
பழமும் தின்னத் தருகின்றேன் ;
சோலைக் கோடிப் போகவழி
சுற்றிப் பார்ப்ப தேன்கிளியே ? 1

259. காட்டி லென்றும் இரைதேடிக்
களைத்தி டாயோ ? உனக்கிந்தக்
கூட்டில் வாழும் வாழ்வினிலே
குறைகளேதும் உண்டோ சொல் ? 2

### கிளி

260. சிறையில் வாழும் வாழ்வுக்குச்
சிறகும் படைத்து விடுவானோ ?
இறைவன் அறியாப் பாலகனோ ?
எண்ணி வினைகள் செய்யானோ ? 3

261. பாலும் எனக்குத் தேவையில்லை,
பழமும் எனக்குத் தேவையில்லை ;
சோலை எங்கும் கூவிநிதம்
சுற்றித் திரிதல் போதுமப்பா ! 4

## 34. பசு

262. பச்சைப்புல்லைத் தின்று வெள்ளைப்
பால்தர நீ என்ன
பக்குவஞ் செய்வாய்? அதனைப்
பகருவையோ? பசுவே!
உச்சியுடல் நக்கி, ஈன்ற
உடனுனது கன்றை,
உயிரெழுப்பும் மாயம் எதோ?
உரைத்திடுவாய், பசுவே! 1

263. வாய்க்கினிய பால்தருவாய்;
வயற்குர மும்தருவாய்;
வண்டிகட்டக் காளையும் நீ
வளர்த்தளிப்பாய், பசுவே!
தாயில்லாப் பிள்ளைகட்குத்
தாயாவாய்; நோயால்
தளர்பவர்க்கு மருத்துவச்சி
தானுவாய், பசுவே! 2

## 35. பால்

264. அம்மா பாலைக் கறந்திடுவாள்,
பாலைக் காய்ச்சி ஆறவைப்பாள்;
ஆறின பாலில் உறைவிடுவாள்,
உறைவிட்ட பால் தயிராகும்;
தயிரைக் கடைந்தால் மோராகும்,
மோரில் வெண்ணெய் படர்ந்துவரும்;
வெண்ணெயை உருக்கினால் நெய்யாகும்,
நெய்யில் அப்பம் சுட்டிடலாம்;
நீயும் நானும் தின்றிடலாம்.

## 36. பசுவும் கன்றும்

265. தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு – அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி. 1

266. அம்மா என்குது
வெள்ளைப் பசு – உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி. 2

267. நாவால் நக்குது
வெள்ளைப் பசு – பாலை
நன்றாய்க் குடிக்குது
கன்றுக் குட்டி. 3

268. முத்தம் கொடுக்குது
வெள்ளைப் பசு – மடி
முட்டிக் குடிக்குது
கன்றுக் குட்டி. 4

## 37. பொம்மைக் கலியாணம்

269. பொம்மைக்கும் பொம்மைக்கும் கலியாணம்,
பூலோகமெல்லாம் கொண்டாட்டம் ;
பாவைக்கும் பாவைக்கும் கலியாணம்,
பகலும் இரவும் வேலையாம்.

கொட்டகை போடுது சிலந்தி ;
குறடு கட்டுது கறையான் ;
கோலம் போடுது நண்டு.

கண்ணுக்குமை, காக்கை கூட்டுது ;
கழுத்துக்காரம், தத்தை கட்டுது ;
கொண்டைக்குப்பூ, கோழி வளர்க்குது.

குயில்கள் இனிய குரலிற் பாடும் ;
மயில்கள் நல்ல நடனம் ஆடும்.

வண்டினம் எல்லாம் வந்து கூடி,
வாய்க்கினிய அமுதம் வைக்கும்.

ஊராரே ! நீர் வாரீரோ ?
வந்து மணமும் காணீரோ ?
கண்டு வாழ்த்திப் போகீரோ ?

## 38. எலிக் கலியாணம்

270. எலிக்கும் எலிக்கும் கலியாணம் ;
இரவிலே சுப முகூர்த்தமாம்.

வீட்டெலி வந்தது, காட்டெலி வந்தது,
வெள்ளெலி வந்தது, முள்ளெலி வந்தது,
குண்டெலி வந்தது, சுண்டெலி வந்தது.

எங்கெங்கு முள்ள எல்லா எலிகளும்
கூட்டமாய்க் கூடிக் குதிலுள் நுழைந்தபின்,
நல்ல விருந்தேழு நாளாய் நடந்தது.

மங்கல மாக மணமும் நடந்தது ;
வாழ்க வாழ்கவே ! மணமக்கள்
வாழ்க வாழ்கவே !

## 39. புலிக் கூடு*

271. பந்தம் எரியுதோடி ! - கண்களைப்
பார்க்க நடுங்குதடி !
குந்தம்வாள் ஈட்டியெல்லாம் - கூடவே
கொண்டு திரியுதடி ! 1

272. வாயைப் பிளக்குதடி ! – கையுறை
வாளும் உருவுதடி !
பேயைப் படைத்தபின்னே - இதனையும்
பிரமன் படைத்தான் அடி ! 2

273. வாலை முறுக்குது பார் - வால்நுனி
வட்டஞ் சுழலுது பார் ;
சாலப் பதுங்குது பார் - நம்மீது
சாடவும் நோக்குது பார். 3

274. இடித்து முழங்குதடி ! – தொண்டையும்
இரும்பாலே செய்ததோடி !
அடுத்து நெருங்காதேடி ! - அதுமிக
ஆங்காரம் கொள்ளுதடி ! 4

275. கூட்டில் அடைத்திடினும் - இரையினைக்
கொண்டு கொடுத்திடினும்,
காட்டில் வளர்ந்த குணம் - புலிகளும்
காட்டா திருக்குமோடி ! 5

276. புன்னைப் புதுமலரும் - குவளையின்
பூவுங் கலந்ததுபோல்,
மின்னி மிளிரும் உடல் - கொடியஇவ்
வேங்கைக்கும் வேண்டுமோடி ! 6

---

*இது வில்லியம் ப்ளேக் என்பவர் ஆங்கிலத்தில் செய்த பாடலைப் பின் பற்றி எழுதப்பட்டது.

277. மானைப் படைத்த தெய்வம் - புலியையும்
வளர்த்து விடலாமோடி ?
தேனைப் பழித்த சொல்லாய் ! – எனக்கு நீ
தெரிந்துரை செய்வாயோடி ? 7

## 40. பாண்டியாடுதல்

278. பாங்கி தோழி பங்கஜம் !
பாண்டி யாட வாராயோ ?
பாட்டி எனக்குப் பரிசளித்த
பல்லாங் குழியைப் பாரிதோ ! 1

279. மாமா நேற்று வாங்கித்தந்த
மாணிக்கத்தைப் பாரிதோ !
அத்தை தந்த கட்டிமுத்தின்
அழகை வந்து பாரிதோ ! 2

280. சேரருக்கு மங்களங்கள்
செப்பி விளை யாடலாம் ;
சோழருக்குச் சோபனங்கள்
சொல்லி விளை யாடலாம். 3

281. பாண்டியர்க்குப் பல்லாண்டு
பாடி விளை யாடலாம் ;
உண்ணும் பாண்டி யாடலாம் ;
ஓய்ந்துவிட்டால் நிறுத்தலாம். 4

282. கட்டும் பாண்டி யாடலாம் !
களைத்துவிட்டால் நிறுத்தலாம் ;
எய்யாப் பாண்டி யாடலாம் !
எய்த்துவிட்டால் நிறுத்தலாம். 5

283. பசும் பாண்டி யாடலாம் ;
பசித்தவுடன் நிறுத்தலாம் ;
பாங்கி தோழி பங்கஜம் !
பாண்டி யாட வாராயோ ? 6

# இயற்கை இன்பம்

---

## 41. இயற்கை

284. வானம் கறுத்தால் மழை பெய்யும்,
மழை பெய்தால் மண் குளிரும் ;
மண் குளிர்ந்தால் புல் தழைக்கும்,
புல் தழைத்தால் பசு மேயும் ;
பசு மேய்ந்தால் பால் சுரக்கும்,
பால் சுரந்தால் கன்று குடிக்கும் ;
கன்று குடித்து மிஞ்சியதைக்
கறந்து கொண்டு வந்திடலாம் ;
காப்பியில் விட்டுக் குடித்திடலாம்.

## 42. வசந்தம்

285. மின்னி மேகம் பரவுது,
மெல்ல மெல்லத் துளிக்குது ;
என்ன சொல்லித் துளிக்குதென்று
இயம்பு கின்றேன் கேளம்மா ! 1

286. 'மண்ணில் கொஞ்ச நாட்களாய்
மறைந்து றங்கும் செடிகளே !
கண்ம லர்ந்து வாருங்கள் ;
காலை யாச்சு' தென்குது. 2

287. 'பட்டு டுத்து வாருங்கள் ;
பணிகள் பூண்டு வாருங்கள் ;
பொட்ட ணிந்து சீக்கிரம்
புறப்ப டுங்கள்' என்குது. 3

288. 'வாசச் செப்பைத் திறவுங்கள் ;
வாரி யெங்கும் வீசுங்கள் ;
ஈசன் பாத பூசனைக்கு
எழுந்தி ருங்கள்' என்குது. 4

289. 'வாட்ட மெல்லாம் நீங்கவே
வசந்த காலம் வந்தது ;
மீட்டும் நன்மை காணலாம் ;
விரைந்தெ ழுங்கள்' என்குது. 5

## 43. ஆறு

290. கல்லும் மலையும் குதித்துவந்தேன் – பெருங்
காடும் செடியும் கடந்துவந்தேன் ;
எல்லை விரிந்த சமவெளி – எங்கும்நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்துவந்தேன். 1

291. கட்டும் அணையேறிச் சாடிவந்தேன் – அதன்
கண்ணறை தோறும் நுழைந்துவந்தேன் ;
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன் – மடைச்
சீப்புகள் மோதித் திறந்துவந்தேன். 2

292. காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன் – அதில்
கண்குளி ரப்பயிர் கண்டுவந்தேன் ;
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன்–அங்கென்
ஆசை தீரவிளை யாடிவந்தேன். 3

293. ஏருத மேடுகள் ஏறிவந்தேன் – பல
ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன் ;
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன் – மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன். 4

294. ஆயிரம் காலால் நடந்துவந்தேன் – நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்துவந்தேன் ;
நேயமுறப் புன்செய்க் காட்டிலும் – அங்கங்கு
நீரை இறைத்து நெடுகவந்தேன். 5

295. பஞ்சை அரைத்துநூல் நூற்றுவந்தேன் – சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்துவந்தேன் ;
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரில் – குழாய்
நீராகவும் சென்று பாய்ந்துவந்தேன். 6

296. மாங்கனி தேங்கனி வாரிவந்தேன் – நல்ல
வாச மலர்களும் அள்ளிவந்தேன் ;
தீங்கரும் பாயிரம் தள்ளிவந்தேன் – மிகத்
தேனும் தினையுமே சேர்த்துவந்தேன். 7

297. அல்லும் பகலும் அலைந்துவந்தேன் – எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன் ;
நில்லும் எனக்கினி நேரமில்லை – இன்னும்
நீண்ட வழிபோக வேண்டும் அம்மா ! 8

## 44. கடல்

[கற்களும் பாறைகளும் அடர்ந்த கடற்கரையில், கடல் கொந்தளிப்பாயிருந்த தருணத்தில், மணலிலே விளையாடிக் கொண்டிருந்த குழந்தை கடலை நோக்கிக் கூறியது.]

298. எல்லை அறியாப் பெருங்கடலே ! – நீதான்
இரவும் உறங்காயோ? கடலே !
அல்லும் பகலும் அலைகடலே ! – உனக்கு
அலுப்பும் இலையோ ? கருங்கடலே ! 1

299. உருண்டு திரண்டு வருங்கடலே ! – உடைந்து
ஓடிப் போவதேன் ? கடலே !
வெருண்டு மதிகெட் டாய்கடலே ! – பாறை
விலகிப் போகுமோ ? கடலே ! 2

---

290 - 297. இவை, குட்ரிச் (Goodrich) என்பவர் எழுதிய ஆங்கிலப் பாடல்களைத் தழுவிச் செய்யப்பட்டவை.

300. பொங்கு திரைகளோ? கடலே! - அவை
புரவி நிரைதாமோ ? கடலே !
எங்கும் உனதொலியோ ? கடலே ! - அன்றி
இடியின் முழக்கமோ ? கடலே ! 3

301. ஓடம் எடுத்தெறியும் கடலே ! - தயை
உனக்குச் சற்றிலையோ ? கடலே !
ஆடல் வீடிதனைக் கடலே ! - நீயும்
அழிப்ப தழகாமோ ? கடலே ! 4

302. மலையை வயிற்றடக்கும் கடலே ! - எண்ணில்
மகர மீனுலவும் கடலே !
விலைகொள் முத்தளிக்கும் கடலே ! - சிப்பி
விளையா டற்குதவும் கடலே ! 5

303. மழைக்கு மூலமும்நீ, கடலே ! - அதை
வாங்கி வைப்பதும் நீ, கடலே !
வழுத்து மகிமையெலாம், கடலே ! - எவர்
மதித்து முடிக்கவலார், கடலே ! 6

## 45. சந்திரன்

304. மீனினம் ஓடிப் பரக்குதம்மா ! - ஊடே
வெள்ளி ஓடமொன்று செல்லுதம்மா !
வானும் கடலாக மாறுதம்மா ! - இந்த
மாட்சியி லுள்ளம் முழுகுதம்மா ! 1

305. முல்லை மலர்ப்பந்தல் இட்டனரோ ? - தேவர்
முத்து விதானம் அமைத்தனரோ ?
வெல்லு மதியின் திருமணமோ ? - அவன்
விண்ணில் விழாவரும் வேளையிதோ ? 2

306. அம்புயம் வாடித் தளர்ந்ததம்மா ! - அயல்
ஆம்பலும் கண்டு களிக்குதம்மா !
இம்ப ருலகின் இயல்பிதம்மா ! – மதிக்கு
இன்னார் இனியாரும் உண்டோ அம்மா ! 3

307. மாற்றம் உலகின் இயற்கையென - இங்கு
மாந்தரும் கண்டு தெளிந்திடவோ,
போற்றும் இறைவன் இம் மாமதியம் – விண்ணில்
பூத்து நிலவ விதித்தனனே ! 4

308. அம்புலிக் கூட்டில் முயல்வருமோ ? – ஈதோர்
அண்டப் புளுகோ ? அறியேன் அம்மா !
பம்பி யெழுமலை அங்குளதும் - மேலைப்
பண்டிதர் கண்ட கனவே அம்மா ! 5

309. கூனக் கிழவி நிலவினிலே – ராட்டில்
கொட்டை நூற்கும்பணி செய்வதைஇம்
மாநிலம் கண்டு மகிழ்ந்திடவே – காந்தி
மாமதி யோங்கி வளருதம்மா ! 6

310. சின்னஞ் சிறுவில்லாய்க் கண்டதம்மா ! – பின்னர்
செம்பொற் குடம்போலே தோன்றுதம்மா !
என்ன அதிசயம் பாராயம்மா !- ஈதோர்
இந்திர சாலமோ ? கூறாயம்மா ! 7

311. வளர்ந்து வளர்ந்து பெருகுதம்மா !- உடல்
வட்டந் திருந்தி வருகுதம்மா !
தளர்ந்து தளர்ந்துபின் போகுதம்மா !- கண்ணில்
சற்றுந் தெரியாமல் ஆகுதம்மா ! 8

312. பாலாழி மீது படர்ந்தவெண்ணெய் - ஒரு
பந்தா யுருண்டு திரண்டதுவோ ?
மேலா யுலகில் ஒளிசெயவே ! – ஈசன்
விண்ணக மிட்ட விளக்கிதுவோ ! 9

313. இரவைப் பகலா யியற்றுதம்மா ! - வெப்பம்
இல்லா திளைப்பெல்லாம் ஓட்டுதம்மா !
அரவம் விழுங்கினும் அஞ்சாதம்மா - எங்கள்
ஆண்டவன் சூடும் மணியேஅம்மா ! 10

314. பொன்மரம் காய்த்த கனியிதுவோ ? - இந்தப்
பூமகள் ஆடும் கழங்கிதுவோ ?
கன்மன முங்களி கொள்ளக் - கவினொளி
காட்டி விளங்கும் மதியிதுவோ ? 11

315. கண்ணுதல் உள்ளக் கருணையதோ ? - கொற்கைக்
காவலர் கண்ட புகழதுவோ ?
மண்ணகஞ் செய்திடு புண்ணியமோ ? - இன்று
வானகம் வந்து நிலவுதம்மா ! 12

## 46. வெண்ணிலா

316. மீன்கள்கோடி கோடிசூழ வெண்ணிலாவே ! - ஒரு
வெள்ளியோடம் போலவரும் வெண்ணிலாவே ! 1

317. பானுவெங் கதிர்குளிக்கும் வெண்ணிலாவே ! - நித்தம்
பாற்கடலும் ஆடுவையோ ? வெண்ணிலாவே ! 2

318. ஆம்பல்களி கூரவரும் வெண்ணிலாவே ! - உனக்கு
அம்புயம்செய் தீங்கெதுவோ ? வெண்ணிலாவே ! 3

319. இரவையும்நண் பகலாக்கும் வெண்ணிலாவே ! - [உன்னை
இராகுவும் விழுங்கிடுமோ ? வெண்ணிலாவே ! 4

320. வளர்ந்து வளர்ந்துவந்த வெண்ணிலாவே ! - மீண்டும்
வாடிவாடிப் போவதேனோ ? வெண்ணிலாவே ! 5

321. கூகைஆந்தை போலநீயும் வெண்ணிலாவே ! - பகல்
கூட்டினில் உறங்குவாயோ ? வெண்ணிலாவே ! 6

322. பந்தடிப்போம் உன்னையென்று, வெண்ணிலாவே ? -
[நீயும்
பாரில்வர அஞ்சினையோ ? வெண்ணிலாவே ! 7

323. பளிங்குபோலும் உன்னுருவில் வெண்ணிலாவே ! -
[கறை
பற்றியே இருப்பதேனோ? வெண்ணிலாவே ! 8

324. பூமியின் உருநிழலோ ? வெண்ணிலாவே ! - அது
போகாக் குறுமுயலோ ? வெண்ணிலாவே ! 9

325. குன்றும் குகைகளுமோ ? வெண்ணிலாவே ! - அன்றிக்
கூனக் கிழவிதானோ ? வெண்ணிலாவே ! 10

326. ஆழியும்நீ வரக்கண்டு வெண்ணிலாவே ! - குதித்து
ஆடுவதெக் காரணமோ ? வெண்ணிலாவே ! 11

327. ஆதாரம் ஒன்றில்லாமல் வெண்ணிலாவே ! - நீயும்
அந்தரத்தில் நிற்பதேனோ? வெண்ணிலாவே ! 12

328. சுற்றித் திரிவதும்ஏன்? வெண்ணிலாவே ! - உனக்குச்
சொந்த இடம் ஒன்றிலையோ? வெண்ணிலாவே ! 13

329. அண்டிவாராய் நீயெனினும், வெண்ணிலாவே ! -
[இன்னும்
அகன்றெங்கும் போய்விடாதே, வெண்ணிலாவே! 14

330. பறக்கச் சிறகிருந்தால், வெண்ணிலாவே ! - உன்றன்
பக்கம்வந்து சேருவேனே, வெண்ணிலாவே ! 15

331. பால்போல் நிலவெறிக்கும் வெண்ணிலாவே !
[என்றன்
பாங்கில்விளை யாடவாராய் ! வெண்ணிலாவே ! 16

332. பாங்கில்விளை யாடவந்தால், வெண்ணிலாவே !-நல்ல
பால்தருவேன், பழந்தருவேன், வெண்ணிலாவே ! 17

333. துன்பமிகத் தாமடைந்தும், வெண்ணிலாவே ! –
[பிறர்க்குச்
சுகமளிப்பார் உன்போலுண்டோ ? வெண்ணி
லாவே ! 18

334. இருள தனை விழுங்கவல்ல வெண்ணிலாவே!-உன்னை
இருள்விழுங்கும் சூழ்ச்சியெதோ ? வெண்ணிலாவே!

## 47. மலர்கள் – I

335. பூமகளின் புன்னகைபோல்
பூத்திடு வோமே ! – கம்பன்
பாமணக்குந் தமிழினைப்போல்
பரிமளிப் போமே! 1

336. வண்ணவண்ணச் சேலைகட்டி
மகிழ்ந்திருப் போமே! – இந்த
மண்ணகமும் விண்ணகமாய்
மாறச் செய்வோமே ! 2

337. மங்கையர்க்கும் ஆடவர்க்கும்
மணமுடிப்போமே ! – மன்னர்
தங்கமுடிமீதும் நாங்கள்
தங்கி வாழ்வோமே ! 3

338. கரும்பினிலும் இனியரசம்
கருதி வைப்போமே ! – அதை
விரும்பிவரும் நண்பருக்கு
விருந்தளிப் போமே ! 4

339. ஈசனருள் வேண்டிநிதம்
இணையடி போற்றி – நல்ல
வாசமெழு தூபதீபம்
வழங்கி நிற்போமே ! 5

## 48. மலர்கள் - II

340. மண்ணிலிருந்து பொருள்வரினும் - அதை
மாற்றி மணம்பெறச் செய்திடுவோம் ;
கண்ணுக் கினிய நிறங்களெல்லாம் - விண்ணிற்
காணுங் கதிரிடம் பெற்றிடுவோம். 1

341. வண்டின் வரவெதிர் பார்த்துநிற்போம் - நல்ல
வாசனை வீதியில் வீசிநிற்போம் ;
உண்டு களிக்க மது அளிப்போம் - சற்றே
உட்காரப் பீடமும் இட்டுவைப்போம். 2

342. மங்கைய ரோடு குமரரையும் - மனம்
வாய்த்த மணஞ்செய்து வாழவைப்போம் ;
தங்கமும் பொன்னும் மணிகளுமே - எம்மைத்
தாழ்ந்து வணங்கமேல் தங்கிடுவோம். 3

343. ஈசன் அடியில் பணிந்திருப்போம் - அவர்
ஏந்து முடிமீதும் ஏறிநிற்போம் ;
பூசனை செய்யும் அடியவரின் - உள்ளம்
பொங்கு களிப்பெலாம் காட்டி நிற்போம். 4

344. மன்னருங் கண்டெதிர் வந்திடுவர் - கட்டி
மார்போ டணைத்து மகிழ்ந்திடுவர் ;
இந்நிலத் தின்பம் பெருகிடவே - நாங்கள்
என்றும் உயிர்வாழ்ந் திருப்போமம்மா ! 5

## 49. சூரியகாந்தி

345. ஆகாய வீதியுலாவி வருமிந்த
ஆதித்த னேஉன தன்பனடி !
வேகாமல் வெந்து வெயிலில் உலர்ந்துநீ,
விண்ணிலே கண்ணாக நிற்பதேனோ ? 1

346. பொன்னிற முண்டு, பொலிவுண்டு, கண்டுணப்
போற்ற இனிய வடிவுமுண்டு;
என்ன அரிய வரம்பெற, இன்னும்நீ,
இத்தவம் செய்வது, பூமகளே! 2

347. காயும் கதிரவன் மேனியை நோக்க – உன்
கண்களும் கூசிக் கலங்காவோ?
நேயம் மிகுந்தவர் காய வருத்தம்
நினைப்பதும் இல்லையோ? சொல், அடியே! 3

348. காலையி லேகதிர் வீசிவர – நிதம்
கண்டு களித்து மகிழ்ந்திடும்நீ,
மாலையி லேமுகம் வாடித் தளர்ந்திட,
வந்த வருத்தமும் ஏதடியே? 4

349. செங்கதிர் செல்லும் திசையது நோக்கி, – உன்
செல்வ முகமும் திரும்புவதேன்?
மங்கையே உன்மண வாளனுகில் – அவன்
வார்த்தை யொன்று சொல்லிப்
[போகானோ? 5

350. ஆசை நிறைந்தஉன் அண்ணலை நோக்கிட,
ஆயிரங் கண்களும் வேண்டுமோடி?
பேசவும் நாவெழ வில்லையோடி? – கொஞ்சம்
பீத்தற் பெருமையும் வந்ததோடி? 6

351. மஞ்சள் குளித்து முகமினுக்கி – இந்த
மாயப் பொடிவீசி நிற்கும்நிலை
கஞ்ச மகள்வந்து காணிற் சிரிக்குமோ?
கண்ணீர் உகுக்குமோ? யாரறிவார்? 7

352. உன்பெயர் சூரிய காந்தியென்றூர் – அதன்
உண்மையும் இன்றே அறிந்துகொண்டேன்;
இன்பம் அளித்திடும் பூவுல கத்துனக்கு
யாரும் இணையில்லை, இல்லையம்மா! 8

## 50. கிளி

353. தேமலர்ச்சோலையிலே - வாசமெழு
தென்றல் உலாவையிலே,
மாமண மங்கையைப்போல் - பெரிது
மகிழ்ந்துநீ தங்கிணையோ ? 1

354. பச்சிலையும் கனியும் - நிறைந்து
படர்ந்து வளர் ஆலின்
உச்சியிற் சென்றிருந்தால் - எப்படியான்
உன்னையும் கண்டிடுவேன் ? 2

355. நாடும்என் உள்ளத்திலே - குடிபுகும்
நாயகி கையமர்ந்து,
பாடி அமுதளிக்கும் - அழகிய
பைங்கிளி நீயலவோ ? 3

356. பூனைகள் இங்குவரா - வேடர்தம்
பொறியின் பயமும்இல்லை ;
யானுனைக் காத்திடுவேன் - இறங்கிநீ
என்கையில் வந்திடாயோ ? 4

357. வட்டமா யுன்கழுத்தில் - ஒருநாளும்
வாடாத ஆரமதை
இட்டவர் ஆரடியோ ? - எனக்கும்
இயம்புவையோ ? கிளியே ! 5

358. மாணிக்க மூக்கழகும் – மரகத
வர்ண வடிவழகும்
காணக்கண் ணாயிரந்தான் – இருப்பினும்
கண்டு முடிந்திடுமோ ? 6

359. கத்திரி போலவெட்டிக் – கனியினைக்
கௌவி யெடுத்தோடச்
சித்திர வாயளித்த – கடவுள்
திருவருள் சற்றோ அம்மா ! 7

360. சாய்ந்து தலைவணங்கி – இனிய
தமிழைநீ கற்குமுறை,
ஆய்ந்த புலவருமே – எழுதி
அயர்ந்துகை சோர்வார், அம்மா ! 8

361. பறக்கச் சிறகிருந்தும் – மரக்கிளை
பற்றிநீ ஏறுவதேன் ?
திறத்தை உலகினுக்கு – மிகவும்
தெரிவிக்கவோ ? கிளியே ! 9

362. காட்டுத் தினைக்கதிரைப் – பறித்துநீ
கண்டித் தருந்தாமல்,
கூட்டுக் கெடுத்தோடும் – குறிப்பெது
கூறுவையோ ? கிளியே ! 10

363. ஒற்றை யொருகாலில் – நின்றுகனி
உண்ணும் அரியவித்தை
கற்றதும் யாவரிடம்? – அவரைநீ
காட்டுவையோ ? கிளியே ! 11

364. கானத் தினைப்புனத்தில் - குறமகள்
காவலிற் கொள்ளையிடல்
ஈனச் செயல்அல்லவோ ? குலத்துக்கு
இழுக்கமும் வந்திடாதோ ? 12

365. செம்பவழ வாயைத் - திறந்துநீ
செப்பும் மொழிகேட்கில்,
உம்பர் அமுதமெல்லாம் - செவியகத்து
ஓடி யொழுகும், அடி ! 13

366. கொம்பிற் கொலுவிருந்து - களித்துநீ
கூவுங் குரல்வருமேல்,
பம்பி யெழுஞ்சோலை - எனக்குப்
பரம பதம்அடியோ ! 14

367. உண்ணும் கனியிலெழும் - சுவையினை
உள்ளம் களிகொளவே,
பண்ணிற் கலந்திடநீ - தெரிந்துசெய்
பக்குவம் ஏதடியோ ? 15

368. பேசும் மரகதமே ! - உனைத்தினம்
பேணி வளர்த்திடுவேன் ;
ஆசை யமுதமொழி - அளிக்கநீ
அண்டையில் வந்திடாயோ ? 16

369. பண்ணுக் கிசைந்ததம்மா ! - பழத்தொடு
பாலுங் கலந்ததம்மா !
மண்ணுக் கமுதமம்மா ! - உனதுசெவ்
வாய்மொழி, தத்தையம்மா ! 17

370. மாணிக்கச் செப்பினிலே - அமுதை
வடித்துச் சுவைபெருக்கி,
பேணி யுனக்களித்த - பிரமன்
பெரியன், பெரியன், அம்மா ! 18

371. சின்னஞ் சிறுபள்ளியில் - உனக்கொரு
சிங்காரப் பெஞ்சுமிட்டுத்
தின்னக் கனியளித்துப் - பாலபாடம்
செப்புவன் வா, கிளியே ! 19

372. கண்ணுக் கினிமையாகி - எனதிரு
காதும் குளிரச்செய்யும்
வண்ணப் பசுங்கிளியே ! - குயிலும் உன்
மாதவஞ் செய்ததுண்டோ ! 20

373. பாலுக்குச் சீனியைப்போல் - பசுந்தமிழ்ப்
பாடலுக் கின்னிசைபோல்,
சோலைக்குப் பைங்கிளியே ! - உனது
துணையும் இனிதேஅம்மா ! 21

374. உள்ளக் களிப்பெழுந்து - வெளியில்வந்து
உன்னுருக் கொண்டதுவோ ?
மெள்ளப் பிடித்துநெஞ்சில் - அணைத்திட
வேட்கை மிகுதேஅம்மா ! 22

## 51. சரத் காலம்

375. பொன்னொளியும் மரகதத்தின் பொலிவும் செந்நெற்
புலங்காட்ட, அதன்மீது நிழலை வீசும்
பன்னரிய சரற்கால மேகந் தன்னைப்
பரிதிவிரைந் தெழுந்தோடி வெருட்டிச் செல்ல,
தன்னைமறந் தொளிமயக்கில் மயங்கி வண்டு
சாருமலர்த் தேன்மறந்து சுழன்று பாட,
மன்னுகுளம் நதிக்கரையில் வாழுந் தாரா
மனங்களித்துக் குரலெழுப்பித் திரியும் மாதோ!

376. நீலநெடு வான்முகட்டைத் தாக்கி நிற்போம்;
நிரந்தோடி வெளியிடத்தைக் கொள்ளை
[கொள்வோம்;
வேலையிது காலையெதும் செய்ய வேண்டாம்;
வீட்டினுக்கு யாவருமே திரும்ப வேண்டாம்;
மேலெழுந்த பெருவெள்ள நுரையே போல,
விளங்கும் எழிற் சிரிப்பினொளி மிதக்குதம்மா!
சீலமிகு சோதரரே! கூடி இன்று,
தெம்மாங்கு பாடிவிளை யாடு வோமே! 2

377. விரித்துவிடு பாய்காற்றுப் பிடித்து ஓடம்
விரைந்துகுதித் தோடியழ கமையக் கண்டேன்;
பெருத்தநிதி யிருக்குமிடம் பாடக் கேட்டேன்;
பெறும்வழிகள் அறிந்தாசை பெரிதும்
[கொண்டேன்!

திருத்தமுறச் சுடரொளிதான் முகத்தில் வீசத்
திரண்டுபுயல் பின்வர, மாலுமியும் நின்ருன் ;
கருத்தொடதைப் பாடுவன்யான், களிப்பி
[லொன்ருய்க்
கண்ணீரும் புன்னகையும் கலந்தது அம்மா ! 3

378. உள்ளமதை ஆகாயம் பரவ விட்டேன் ;
உன்கரமும் என்கனவில் தீண்டப் பெற்றேன் ;
மெள்ளஉன்றன் முகமறைக்கும் திரையை நீக்கி,
விழிகளையான் கண்டுதொழக் கருணை செய்வாய்!
கள்ளவிழும் வனத்திலெழும் இசையூ டெம்மைக்
களிப்பொடுநீ வரவேற்கும் குறிப்பைக் கண்
[டேன் ;
வள்ளலுன்றன் திருக்கழலின் ஒலிஎன் னுள்ளம்
மலியநிறைந் தானந்தம் அளிக்கு தையா ! 4

375-378: இவை ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூர் பாடிய 'தோட்டக்காரன்' என்ற நூலிலுள்ள 'சரத் கால விழா' என்னும் கவியின் கருத்தையொட்டி எழுதப்பெற்றவை.

# காட்சி இன்பம்

## 52. கடிகாரம்

[கடிகாரம் வாங்கித் தரும்படி கேட்டுக்கொண்ட தன் மகளிடம் ஏழையான ஒருதாய், "மகளே, நேரத்தை அறிவதற்கு இயற்கையிலேயே அநேக லக்ஷியங்களிருக்க நமக்கு வேறு கடிகாரமும் வேண்டுமா?" எனக் கூறுகிருள்.]

379. சேவற் கோழியுண்டு காகமுண்டு - வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு ;
மேவு பொன்னே ! அதி காலை தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டுமோடி ? 1

380. செங்கதிர் பொங்கி வருவதுண்டு - நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு ;
மங்கையே ! காலைப் பொழுதை யுணர்ந்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி ? 2

381. தன்னிழல் தன்னடி யாவதுண்டு - சுடர்
தானும் தலைநேர் எழுவதுண்டு ;
இன்னமு தே!பகல் உச்சியி தென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி ? 3

382. விண்மணி ஆழியில் வீழ்வதுண்டு - வாசம்
வீசும் மந்தாரை மலர்வதுண்டு ;
கண்மணியே ! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி ? 4

383. முல்லை யரும்பு விரிவதுண்டு – ஆம்பலின்
மொட்டுகள் மெல்ல அவிழ்வதுண்டு ;
மெல்லியலே ! மாலை வேளை யறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி ? 5

384. அம்புலி நட்சத் திரங்களுண்டு – கணக்கு
ஆக்கி யறிய வழிகளுண்டு ;
இன்பமே ! நேரம் இரவில் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி ? 6

385. கம்மென வாசம் கமழ்பாரி சாதம் – இக்
காவில் மலர்ந்து சொரிவதுண்டு ;
அம்மையே ! நள்ளிர வீதென்று சொல்லிட
ஆர்க்கும் கடிகாரம் வேண்டுமோடி ? 7

386. காலை மாலை எந்த வேளையும் – சூரிய
காந்தி மலர்தானே காட்டிடாதோ ?
வேலை யெழுந்த திருவே ! உனக்கினி
மேலும் கடிகாரம் வேண்டுமோடி ? 8

387. சுற்றுப் பொருளெல்லாம் உற்றுநோக்கி – அவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய் !
பெற்ற முத்தே ! இந்த உண்மை அறிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி ? 9

## 53. ஸைக்கிள்

388. தங்கையே, பார் ! தங்கையே, பார் !
ஸைக்கிள் வண்டி இதுவே பார் ! 1

389. சிங்கார மான வண்டி,
சீமையிலே செய்த வண்டி. 2

390. இரும்பாலே செய்த வண்டி,
எங்கெங்கும் ஓடும் வண்டி. 3

391. மாடில்லை, குதிரை யில்லை,
மாயமதாய்ப் பறந்திடும், பார் ! 4

392. தீயில்லை, புகையும் இல்லை,
தீவிரமாய்ச் சென்றிடும், பார் ! 5

393. காலாலே மிதிப்பதனால்,
கடும்விசையில் போயிடும், பார் ! 6

394. ஒன்றன்பின் ஒன்றாக
உருளும்பை தாக்களைப், பார் ! 7

395. அக்காளும் தங்கையும் போல்
அவைபோகும் அழகைப் பார் ! 8

## 54. ஆகாய விமானம்

396. கப்பல் என்றுமே – மெல்லக்
கடலில் நீந்துவதாம்;
தப்பித் தப்பியே – ரயிலும்
தரையில் ஊருவதாம். 1

397. வானமீ தெழுவேன் – அங்கே
வட்டம் சுற்றிடுவேன் ;
கானம் மலையெல்லாம் – யான் ஓர்
கணத்தில் தாண்டிடுவேன். 2

398. இடைவிடாது தபால் – உலகில்
எங்கும் கொண்டுசெல்வேன் ;
சடைவி லாமலே – பலரைத்
தாங்கியும் போவேன். 3

399. நன்மை செய்யவந்தேன் – அதை
நன்குண ராமல்,
வன்மைப் போரில்எனை – இழுத்து
மாட்டி விட்டார், ஐயோ ! 4

---

394. பைதா - சக்கரம்.

400. தீவினை செய்ய - என்னைத்
தினமும் ஏவுகிறார் ;
பூவுலக மெல்லாம் - சுட்டுப்
பொசுக்கச் சொல்லுகிறார் ; 5

401. அன்பைக் கொன்றுவிட்டார் ; - மனிதர்
அரக்கர் ஆகிவிட்டார் ;
துன்பம் செய்திடவே - இன்று
துணிந் திறங்கிவிட்டார். 6

402. ஆசைப் பேயெங்கும் - தலைவிரித்து
ஆடு கின்றதையோ !
நாச காலம்ஐயோ - புவியும்
நரக மாகுதையோ ! 7

403. காட்டில் ஓநாயும் - நரியும்
கடுவா யும்புலியும்
நாட்டு நாகரிகம் - கண்டு
நகைக்க லாச்சுதையோ ! 8

404. சாந்த மூர்த்தியின் - அகிம்சா
தருமம் மேற்கொண்டு
மாந்தர் இவ்வுலகில் - நன்றாய்
வாழ்வ தெந்நாளோ ? 9

## 55. சுசீந்திரம்

405. ஆற்றங் கரையுண்டு
அழகான சோலையுண்டு ;
நந்த வனமுண்டு
நன்செய்கள் சூழவுண்டு ;
சத்திரங்கள் உண்டு
தமிழ்க் கல்விச் சாலையுண்டு ;
தெப்பக் குளமுண்டு
தேரோடும் வீதியுண்டு ;

---

404. சாந்த மூர்த்தி - காந்தியடிகள்.

மாளிகைகள் உண்டு
மடங்கள் பல உண்டு ;
நான்கு மதில்கள் உண்டு
நடுவிலொரு கோவிலுண்டு ;
கோபுர வாசலுண்டு
கொடிமரம் இரண்டுண்டு ;
சித்திரையும் மார்கழியும்
திருவிழாக் காட்சி உண்டு ;
பார்த்திடக் கண்கள்
பதினுயிரம் வேண்டும் ;
தொன்னகரம் ஆன
சுசிந்தைச் சிறப்பெல்லாம்
என்னொரு நாவால்
எடுத்துரைக்க ஏலாதே.

## 56. கைத்திறன்

406. வெயில்வரினும் மழைவரினும் விரிகுடையாம் கையே ;
வெயர்வைவரின் ஆற்றுசிறு விசிறியதாம் கையே ;
துயிலவொரு மகவைத்தொட்டில் இட்டசைக்கும் [கையே ;
துரிதமுடன் எழுதவொரு தூவிகொளும் கையே! 1

407. இனியசெந்நெற் புலம்உழுதற் கேர்பிடிக்கும் கையே ;
இன்னிசைகள் எழுப்பவீணை ஏந்துமெழிற் கையே ;
கனியுதிர்ப்பக் கல்லெறியும் கவண்பிடிக்கும் கையே ;
கண்களிப்பப் படமெழுதிக் காட்டும் என்றன் [கையே ! 2

408. தானதர்மம் செய்யஎதும் தளர்விலதாம் கையே ;
தளர்பவரைக் கண்டுதலை தாங்கஎழும் கையே ;
பானம்செய்தற் கேற்றவொரு பாத்திரமாம் கையே ;
பையரவைப் போலவந்து பயமுறுத்தும் கையே ! 3

409. மலரெடுத்து நல்லசெண்டு மாலைகட்டும் கையே ;
வாய்க்கினிய பண்டமெலாம் வைத்துதவும் கையே ;
சலமதனில் ஓடம்விடச் சலிப்பிலதாம் கையே ;
தரையில் மோட்டார் ரயில்நடத்தச் சமர்த்துள
[தாம் கையே! 4

410. கோபுரம் சேர் கோயிலொடு குடிசைகட்டும் கையே ;
குளங்கிணறு குட்டையெலாம் குழித்துதவும் கையே;
ஆபரணம் பணிமணிகள் ஆய்ந்துசெய்யும் கையே ;
ஆடைகள்பா வாடைகளும் ஆக்குமெழிற் கையே! 5

411. மல்லயுத்தம் செய்வதற்கு வந்துநிற்கும் கையே ;
வாள்பிடித்து வகைவகையாய் மரம்அறுக்கும்
[கையே ;
நெல்லைக்குத்தும் அரிசிதீட்டும் நொய்கொழிக்கும்
[கையே ;
நேயரொடு பாண்டியாடி நிதம்ஜெயிக்கும் கையே! 6

412. நாடியசீர் நாடடைய ராட்டுருட்டும் கையே ;
நல்லகதர் நெய்யமிகு வல்லமைகொள் கையே ;
பாடியவாய் தேனூறும் பாரதியார் பாடல்
பண்ணமையப் பாடுதற்குப் பாணிகொட்டுங் கையே!

413. அழைப்பதற்கும் அகற்றுதற்கும் அபிநயிக்கும் கையே ;
ஆக்குதற்கும் அழிப்பதற்கும் ஆற்றல்பெறும் கையே;
உழைப்பதற்கும் ஊட்டுதற்கும் ஊக்கமுறும் கையே ;
உதவுதற்கும் ஏற்பதற்கும் உரிமைகொளும் கையே! 8

414. மக்களைத்தம் ஒக்கல்வைத்து வளர்த்திடுமென் கையே ;
வண்ணமலர் தலைக்கணிந்து வாசமூட்டுங் கையே ;
தக்கபெரி யோர்க்குமிகத் தான்வணங்கும் கையே ;
தரணியிலுன் திறமையெலாம் சாற்றல்எளி தலவே! 9

# கதைப் பாட்டு

## 57. ஊகமுள்ள காகம்

415. தண்ணீர் கிடையாமல் – காகமொன்று
தவித்த வேளையிலே,
மண்ணாற் செய்தஒரு – சாடியினை
வழியிற் கண்டதம்மா ! 1

416. சாடியின் மீதிருந்து – தலையைச்
சரித்து நோக்கிடவே,
சாடியிலே தூரில் – சற்றே
தண்ணீர் தெரிந்ததம்மா ! 2

417. காகம் உடன்எழுந்து – சிறுசிறு
கற்கள் பொறுக்கிவந்து,
ஊகமாய்ச் சாடியினுள் – அவற்றை
ஒவ்வொன்றாய் இட்டதம்மா ! 3

418. இட்டிட வேநீரும் - மேலே
எழுந்து வந்ததம்மா !
சட்டமாகக் குடித்துக் – காகம்
தளர்ச்சி தீர்ந்ததம்மா ! 4

419. ஊக்க முடையவர்க்குத் – துன்பம்
உலகில் இல்லை அம்மா !
ஆக்கம் பெருகும் அம்மா ! – இதைநீ
அறிய வேண்டும் அம்மா ! 5

## 58. நெற்பானையும் எலியும்

420. பாட்டியின் வீட்டுப் பழம்பானை – அந்தப்
பானை ஒருபுறம் ஓட்டையடா !
ஓட்டை வழியொரு சுண்டெலியும் – அதன்
உள்ளே புகுந்துநெல் தின்றதடா! 1

421. உள்ளே புகுந்துநெல் தின்றுதின்று - வயிறு
ஊதிப் புடைத்துப் பருத்ததடா !
மெள்ள வெளியில் வருவதற்கும் - ஓட்டை
மெத்தச் சிறிதாகிப் போச்சுதடா ! 2

422. பானையைக் காலை திறந்தவுடன் - அந்தப்
பாட்டியின் பக்கமாய் வந்தஒரு
பூனை எலியினைக் கண்டதடா ! - ஓடிப்
போய்அதைக் கௌவியே சென்றதடா ! 3

423. கள்ள வழியினிற் செல்பவரை - எமன்
காலடி பற்றித் தொடர்வானடா !
உள்ள படியே நடப்பவர்க்குத் - தெய்வம்
உற்ற துணையாக நிற்குமடா ! 4

## 59. அப்பம் திருடின எலி

424. செட்டியார் வீட்டில் அடுக்களையில் - சென்ற
தீபா வளியன் றிரவுதனில்,
வட்டியில் அப்பம் இருந்ததம்மா ! - அதை
வாசத்தி னால்அறிந் தோர்எலிதான், 1

425. 'நெய்யினில் சுட்ட பணிகாரம் - இது
நேர்த்தியாய்ச் சுட்ட பணிகாரம்,
பையப் பையக்கடித் துண்பதற்கும் - வெகு
பக்குவமான பணிகாரம். 2

426. 'யார்க்கும் கிடையாப் பெருநிதியாம் - இதை
யான்இன்று பெற்றதென் பாக்கியமே ;
பார்க்கும் பொழுதேநீர் வாயினிலே - ஊறிப்
பாய்கின்றதே பசி யாகின்றதே. 3

[அப்போது வேறு சில எலிகள் சத்தமிடக் கேட்டு :]

427. 'என்ன சத்தம் ! ஓ ! ஓ ! தம்பிமார்கள் - கூடி
இங்கு விளையாட வந்தனரோ ?
அன்னவர் ஓடி வருமுன்னமே - யானும்
அப்பத்தைக் கொண்டு மறைந்திடுவேன். 4

428. ' ஏதும் ஒருபொடி யாகிலும் - யான் அவர்க்கு
ஈந்திடேன் ; முற்றுமே தின்றிடுவேன் ;
ஓதிய தானம் தனக்குப்போக - மீதி
உள்ளவர் அல்லவோ செய்திடுவார் ?' 5

429. என்று சொல்லி அந்த அப்பத்தினை - வாயில்
ஏந்திக் கடித்திழுத் தோடிடவே,
கன்றப் பசித்த இளைஞரெல்லாம் - வந்து
கால்கடுக்கத் தேடிப் போயினரே. 6

430. ஆரும் அறியாத மூலையிலே - அந்த
அப்பத்தை அவ்வெலி கொண்டுவைத்துக்
கூரிய பல்லால் கறம்பி ஒருபொடி
கூடச் சிதறாமல் தின்றதம்மா ! 7

431. மட்டுக்கு மிஞ்சிப் புசித்ததனால் - மூச்சு
வாங்கி வருந்தி வயிறூதி,
கட்டப் படுவதைச் சுற்றத்தார் எல்லோரும்
கண்டொரு பண்டிதர்க் காளும்விட்டார் ! 8

432. பண்டிதர் வந்துகை பார்த்தனர் ; அவ்வெலி
பண்டம் முழுதையும் உண்டகதை
விண்டதும் கேட்டு, குறிகளும் நோக்கி,
விதிப்படி ஆய்ந்து விளம்பினரே : 9

433. 'அப்பம் முழுதும்நீ தின்றனையே - அதை
அன்பிற் குரியஉன் தம்பியர்க்கும்
ஒப்பவே பங்கிட் டளித்திருந்தால் - துன்பம்
ஒன்றும்வந் துன்னை அணுகாதே. 10

434. ‘அன்றியும் உன்தம்பி மாரும் கடும்பசி
ஆறிக் களித்திருப் பார்கள் அன்ரே ?
இன்றினிச் செய்வதென் இவ்வுலகம் - விட்டு
யாத்திரை போவது திண்ணம்’ என்ருர். 11

435. ஆன தனுலே கிடைத்த பொருளை - நாம்
ஆகும் மட்டும்பகுத் துண்ணவேண்டும் ;
ஈனமாந் தன்னயத் தால்வருந் துன்பமே ;
இன்பம் அளிக்கும் பொதுநயமே. 12

436. அளவு கடந்திடில் ஆரமுதும் - விஷம்
ஆகும் என்றுநம தான்ருேர்கள்
உளபடியே சொன்ன வாக்கியத் துண்மையை
உள்ளத்திற் கொள்ளுங்கள்,தோழர்களே ! 13

## 60. ஔவையும் இடைச்சிறுவனும்

437. வேனிற் பருவத்திலே - ஒருநாள்
வெய்யில் வேளையிலே
ஞானத் தமிழ்க்கடலென் - றிந்த
நாடு புகழும்ஔவை, 1

438. தூரம் மிகநடந்து - களைத்துச்
சோர்ந்து, வரும்வழியின்
ஓரத்தில் ஓர்நாவல் - நிழலில்
ஒதுங்கிச் சற்றுநின்ருள். 2

439. அந்தமர மீதோர் - சிறுவன்
ஆநிரை மேய்க்க வந்தோன்,
சிந்தை மகிழ்ந்து நல்ல - கனிகள்
தின்று நிற்றல் கண்டாள். 3

440. "நாவ றளுதப்பா ! - நாலைந்து
நாவற் கனிபறித்து,
தா"வென வேண்ட - அவனும்,
" தருவேன்" என்று சொல்லி, 4

441. " சுட்ட கனிவேண்டுமோ ? - அன்றிச்
சுடாத கனிவேண்டுமோ ?
இட்டமுள்ள கனியைப் - பாட்டிநீ
இயம்பெ" னக் கேட்டான். 5

442. கூறிய அம்மொழியால் - உள்ளம்
குழப்ப மெய்தியப்பால்
தேறி அவளும், " அப்பா ! - சுட்ட
தீங்கனி தா " என்றாள். 6

443. மெத்தப் பழுத்துலைந்து - கறுத்து
வெடித்த கனியாக,
பத்துப் பதினைந்து - ஒன்றாய்ப்
பறித்து மண்ணிலிட்டான். 7

444. ஒட்டிய மண்நீங்கக் - கனியெடுத்
தூதி நிற்கையிலே,
" சுட்ட கனியிதெ"னச் - சிறுவன்
சொல்லி மறைந்திட்டான். 8

445. மாடு மேய்ப்பவனும் – என்னை
மடக்கி விட்டானென்று
நாடு புகழும்ஔவை – அன்று
நாணித் தலைகுனிந்தாள். 9

446. கந்தன் முருகனே - ஔவையின்
கருவம் போக்குதற்கிவ்
விந்தை செய்தானென்று – புலவர்
விளம்பு கின்றாரம்மா ! 10

# உள்ளமும் உணர்வும்

---

## 61. குழந்தை*

447. எங்கே இருந்து வந்தாய்? குழந்தாய் ! – அதை
யானும் அறிந்திடச் சொல் குழந்தாய் !
எங்கும் நிறைவெளியில் இருந்தேன் – சற்றே
இங்கும் இருக்க வந்தேன், அம்மா ! 1

448. நீல மலர்போலும் விழிகள் – எங்கு
நீதேடிப் பெற்றாய் ? என் குழந்தாய் !
ஞாலம் இதற்கு வரும் வழியில் – வானம்
நன்கொடை தந்ததிவை, அம்மா ! 2

449. கண்ணில் ஒளிவிளங்கக் கண்டேன் – அந்தக்
காட்சியின் காரணம்என் ? குழந்தாய் !
விண்மீன் ஒளிசிறிது தங்கி – அங்கு
மின்னி விளங்குகின்ற தம்மா ! 3

450. நெஞ்சம் களிக்கவரும் குழந்தாய் ! – கண்ணில்
நீர்த்துளி நின்றகதை எதுவோ ?
வஞ்சப் புவியில் எனைத் தேடி – அது
வழியெதிர் வந்துநின்ற தம்மா ! 4

451. ஒளிரும் உன் நெற்றியிலே இந்த – மென்மை
உண்டான தெப்படி ? என் குழந்தாய் !
தளிரும் தழையைச் செய்யுங் கரமொன்று – அதைத்
தடவி அளித்ததுண்டு என் அம்மா ! 5

---

*இது மாக்டோனல்ட் என்பவர் செய்த ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.

452. பூவின் அழகுனது முகத்தில் – என்றும்
பொலிந்திடும் காரணம்என் ? குழந்தாய் !
தேவரும் கண்டறியாக் காட்சி – யானும்
தெளிவுறக் கண்டபலன், அம்மா ! 6

453. புன்னகை பூத்திடும் வேளை – ஒரு
புதுமையும் காண்பதேனோ ? குழந்தாய் !
முன்னம் அரம்பையர்கள் மூவர் – ஒன்றாய்
முத்தம் அளித்தகுறி, அம்மா ! 7

454. ஆசைக் குழந்தாய் ! இச் செவிகள் – உன்னை
அடைந்த வரலாறே துரையாய் ?
ஈசனும் பேசிடவாய் திறந்தான் – கேட்க
இவையும் எழுந்தன, என் அம்மா ! 8

455. இன்பச் சிறுகரங்கள் இவைதாம் – உனக்கு
எவ்வா றமைந்தன ? என் குழந்தாய் !
அன்பு வளர்ந்திவ்வுரு வாகி – என்னை
அண்டி அணைந்திருக்கு தம்மா ! 9

456. ஆவி குளிரவருங் குழந்தாய் ! – இந்த
அழகிய கால்கள் எங்கே கொண்டாய் ?
தேவப் பிறவிகளின் சிறகோடு – ஒரு
சிங்காரப் பெட்டியிலே கண்டேன். 10

457. இந்தக் கருவியெல்லாஞ் சேர – நீதான்
எவ்வா றமைந்தனை ? என் குழந்தாய் !
எந்தை இறைவன்உளங் கொண்டான் ; – உடன்
யானும் எழுந்துநின்றேன், அம்மா ! 11

458. மனமிக மகிழ்ந்திடக் குழந்தாய் ! – நீயென்
மடியினில் வந்தவகை எதுவோ ?
தினமும் நீ செய்தபெருந் தவத்தால் – அந்தத்
திருவருள் கூட்டிவைத்த தம்மா ! 12

## 62. முதல் துயரம்*

### பிள்ளை

459. முல்லை பூத்த தம்மா ! - இருவாட்சி
மொட்ட விழ்ந்த தம்மா !
மல்லி கைப்பூவும் - மலர்ந்துநல்
வாசம் வீசு தம்மா ! 1

460. தும்பி பாடு தம்மா ! - கிளிபயில்
சோலை தேடு தம்மா !
தம்பி எங்கே ? அம்மா ! - விளையாடத்
தனியே நின்றேன், அம்மா ! 2

461. படரும் முந்திரியில் - கனிமிகப்
பழுத் துதிரு தம்மா !
தொடரும் வேனிலும் - நமக்கிங்கே
தொடங்கி விட்ட தம்மா ! 3

462. சின்னஞ் சிறுபிஞ்சு - வெள்ளரியில்
செழித் திருக்கு தம்மா !
கன்னிக் காய்பறிக்கத் - தம்பியையும்
காணேமே, அம்மா ! 4

463. அம்பொன் மாலைகள் - செடிபல
அணிந்து நின்ற, அம்மா !
தம்பி இல்லாமல் - அழகவை
தருவ தில்லை, அம்மா ! 5

---

* இது பெலீஷியா ஹீமன்ஸ் என்ற அம்மையார் பாடிய ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.

464. புனைந்த சித்திரம்போல் – வண்ணாத்திப்
பூச்சி சுற்று தம்மா !
துணைவன் இல்லாமல் - யானும் அதைத்
தொடர்ந்து செல்லேன் அம்மா ! 6

465. வளர்த்த ரோஜாவும் - புதுமண
மகிழ்ச்சி காட்டு தம்மா !
அழைத்து வாராய், அம்மா ! - தம்பியும்
அறிந்திடானோ ? அம்மா ! 7

வேறு

**தாய்**

466. யார் அழைத்தாலும் - அவன் செவிக்கு
எட்ட மாட்டாதே ;
பாரில் நம்மை அவன் – இனிவந்து
பார்க்க மாட்டானே. 8

467. வாச மலரைப்போல் - வளர்ந்தவன்
வாடி விட்டானே ;
ஈசன் சன்னிதியில் - விளையாடி
இருக்கின்றான் அப்பா ! 9

468. குயிலைத் தேடானோ ? - கிளியொடு
கொஞ்ச வாரானோ ?
மயிலை நோக்கானோ ? - நம்மையெல்லாம்
மறந்தும் போனானோ ? 10

469. வேனிற் காலமெல்லாம் – நம்மையிங்கு
விட்டிருப் பானோ ?
யானும் என்னசெய்வேன் ! - தனித்தினி
இருப்ப தெப்படியோ ? 11

470. காலை மாலைதனில் – சிற்றோடைக்
கரையில், சோலைதனில்
சீலச் செல்வனோடு – சுற்றிநிதம்
திரிதல் போச்சுதையோ ! 12

471. இனிய கதையெல்லாம் – அவனைப்போல்
யாவர் சொல்வாரம்மா !
கனியைச் செந்தேனை – இனிஎந்தக்
காலம் காண்பேன், ஐயோ ! 13

## 63. தாய் கண்ட கனவு

['நான் என் மகன் உமரை அவன் இறந்த ஒன்பதாம் நாள் இரவு கனவிற் கண்டேன். அப்பொழுது அவன் ஊக்கமும் உற்சாகமுமுடையவனாகக் காணப்பட்டான். அவனைக் கண்டவுடன் முன் வழக்கம்போல், "கடவுளே உமரைக் காப்பாற்றுவாய்" என்று பிரார்த்தனை செய்தேன். ஆனால், அது அப்பொழுது அவனுக்குப் பிடிக்கவில்லை. கோபங்கொண்டு பின்வருமாறு கூறினான்:']

472. தங்கஒளி தந்தாய் – இன்று
சாம்ப லாகி நின்றாய்
மங்கி மாண்டவரை எண்ணி
வருந்த லேனோ ? அம்மா ! 1

473. ஆழ்ந்த நரகொன்று – நீயே
அமைத்து வைத்துக் கொண்டாய்;
வீழ்ந்து வீழ்ந்து நிதம் – அதனில்
வெந்து சாகின்றாய். 2

474. ‘கர்த்தனே என்றன் - மகனைக்
காத்த ருள்க!’ வென
எத்தனை நாளாய் - நீயும்
இரங்கு கின்று யம்மா ! 3

475. பேசா வுயிர்களை - ஈசன்
பேண மாட்டானோ ?
ஆசானும் நீயோ ! - அவனோர்
அறியாப் பாலகனோ ? 4

## 64. எனது சுகதுக்கங்கள்

### 1

476. வான வெளிதனிலே - கவிந்தெழு
மாலைப் பொழுதினிலே,
கூனப் பிறைவரவே - சிவன்திருக்
கோலம் தெளிவேன், அடி ! 1

477. முற்றிய ஆழியிலே – அலைவந்து
மோதி எறிகையிலே,
கற்றைக் கதிரெழவே – உமைதிருக்
காட்சி வியப்பேன், அடி ! 2

478. தாமரைப் பொய்கையிலே - கதிரொளி
தட்டுமவ் வேளையிலே,
பூமலர்ந் தோங்கிடவே - அரியென்று
போதம் நயப்பேன், அடி ! 3

479. மாமலைச் சாரலிலே - மதமிகு
வாரணக் கூட்டத்திலே,
காமலர் சிந்திடவே – கணேசர் என்
கண்முனே நிற்பார், அடி ! 4

480. மேட்டு நிலங்களிலே - தினைக்கதிர்
விம்மி விளைகையிலே,
காட்டு மயில் வரவே – குகனும் என்
காதல் விளைப்பார், அடி ! 5

## 2

481. காவுயர் சோலையிலே – பசுவொடு
கன்று களிக்கையிலே,
தாவிப் புலிவிழவே - வருந்துயர்
தாங்க முடியவில்லை. 6

482. புல்வளர் கானத்திலே – கலையினம்
பொங்கிக் குதிக்கையிலே,
கொல்கடு வாய்வரவே - நெஞ்சத்தில்
கூரம்பு பாய்ந்ததடி ! 7

483. குஞ்சரக் கூட்டத்திலே - ஒன்றையொன்று
குத்திப் பொருகையிலே,
வெஞ்சின மாவரவே - அதிலுள்ளம்
வெம்பி அழிந்ததடி ! 8

484. வானுயர் காவினிலே - மதுவினை
வண்டுகள் சேர்க்கையிலே,
கானவர் வந்திடவே - உதிரம்என்
கண்கள் சொரிந்ததடி ! 9

485. தேரைகள் ஓடையிலே - இனத்தொடு
சேர்ந்து மிதக்கையிலே,
நாரைகள் வந்திடவே – பாவிமனம்
நைந்து குழைந்ததடி ! 10

## 65. ரோஜாவே ஏன் வாடுகிறாய் ?

486. கள்ளன் வந்தான், கள்ளன் வந்தான்,
கதவை யுடைத்தான் - வீட்டுக்
கதவை யுடைத்தான் ;
கொள்ளை யிட்டென் பொருளை யெல்லாம்
கொண்டு போய்விட்டான் - ஐயோ !
கொண்டுபோய்விட்டான். 1

487. கத்தி கட்டிக் காத்து நின்ற
காவ லாளரைப் - பல
காவ லாளரை,
எத்தி விட்டுப் பறந்து சென்றான் ;
என்ன மாயமோ ? ஐயோ !
என்ன மாயமோ ? 2

488. காலையெழும் கதிரவனும்
கண்டதில்லையோ ? - இதைக்
கண்டதில்லையோ ?
ஓலமிட்டுங் கேட்கவில்லை ;
ஓடுகின்றானே - ஐயோ !
ஓடுகின்றானே. 3

489. பூவுலகில் வாழ்ந்ததினிப்
போதும், போதுமே - எனக்குப்
போதும், போதுமே ;
தேவர்திரு வடிபணியச்
செல்லுகின்றேனே - இதோ
செல்லுகின்றேனே. 4

## 66. மூன்று விஷயங்கள்*

490. கூவிப் பறக்கும் ஒரு – கிளியினைக்
கூட்டில் அடைத்து வைத்தால்,
தேவர் உலகமெல்லாம் – அதுசினத்
தீயை யெழுப்பிடுமே ! 1

491. மன்னிய சோலையிலே – ஒருகுயில்
வாடி வருந்து மெனில்,
கின்னரர் கிம்புருடர் – தளர்ந்துதம்
கீதம் இழப்பார் ஐயோ ! 2

492. சிட்டுக் குருவிக்கேனும் – ஒருசிறு
தீங்கினைச் செய்பவரை
நட்டநல் நண்பராக – உலகமும்
நம்பிக்கை கொள்வதுண்டோ ? 3

*இது பிளேக் என்பவர் பாடிய ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.

## 67. பறவையின் சிந்தனை - I*

[முட்டையிற் கருவா யிருந்தபொழுது முட்டையினள வாகவும், கூட்டிற் குஞ்சா யிருந்தபொழுது கூட்டினளவாக வும், சிறு பறவையானபொழுது தழை கொடிகளாகவும், பெரும் பறவையாகி வெளியில் சஞ்சரிக்கத் தொடங்கியபின் இன்னதென்று உண்மையறியாதபடி நீல நிறமாகவும், இவ் வுலகம் பறவைக்குத் தோன்றியது. அதுபோல, மனிதனும் பருவத்துக்கேற்ற அறிவுடையவனுயிருக்கிறுன். உலக அனுபவம் முதிரும்பொழுது உண்மை ஞானம் உதயமாகிறது. இப்பாடல்களிலே பறவை தனது அனுபவத்தைக் கூறு கிறது.]

### 1. முட்டைக் கரு

493. ஆதியில் ஒருசிறு வீட்டை அண்டியான்,
ஏதுமங் கொருகுறை யின்றி வாழ்ந்தனன் ;
ஓதுமிவ் வுலகுருச் சிறுத்து ருண்டவோர்
சோதிவெண் நீல்நிறத் தோடென் றெண்ணினேன்.

### 2. கூட்டில் குஞ்சு

494. வீடிது வீழ்ந்திட, வேறும் ஓரிடம்
கூடியே சிலதினம் குடியி ருந்தனன் ;
ஈடறு வையகம் உலகம் என்அனை
நாடிய காப்பகம் என்று நம்பினேன். 2

### 3. இறகு முளைக்கும் சிறு பறவை

495. கண்ணுறு பொருளவை காண ஓர்தினம்
எண்ணிஎன் கூட்டரு கிறங்கி நின்றனன்.
திண்ணிய உலகிலை தழையிற் செய்ததாம்
புண்ணிய மில்விழி பொருந்தினேன் என்றேன். 3

---

* இது ஒரு பழைய ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.
494. வையகம் - வைக்கோல் வீடு.

### 4. பறக்கும் பெரும் பறவை

496. முடிவினில் மரம் தழை முகடு தாண்டிவிண்
படுமெழில் நீல்நிறப் பரப்பைக் கண்டனன்;
தொடுமுல குண்மையில் எங்ஙன் தோன்றுமோ?
அடிமுடி அறிகிலன்; அறிவர் யாவரே? 4

## 68. பறவையின் சிந்தனை-II

### 1. முட்டைக் கரு

497. முற்றுங் கருவாகி - ஒருசிறு
முட்டையில் வாழ்கையிலே
சுற்றும்உல கெனக்கே - உருண்டவெண்
தோடா யிருந்ததம்மா! 1

### 2. கூட்டுக் குஞ்சு

498. குஞ்சுப் பருவத்திலே - பிறிதொரு
கூட்டில் இருக்கையிலே
விஞ்சும் உலகினையான் - உலர்ந்தபுல்
வீடாகக் கண்டேனம்மா! 2

### 3. இறகு முளைக்கும் சிறு பறவை

499. இறகு முளைக்கையிலே - பறந்திட
யானும் பழகையிலே
நிறையும் உலகெனக்குத் - தழைகொடி
நேரிட மானதம்மா! 3

### 4. பறக்கும் பெரும் பறவை

500. நீண்ட வெளிவரவே - உயர்ந்தவிண்
நீலந் தெரிந்த தம்மா!
ஆண்டவ னன்றிஎவர் - உலகை
அறிந்திட வல்லார்? அம்மா! 4

## 69. குதிரைகள் புலம்பல்

501. கற்றுத் தெளிந்தநல் மானிடரே ! - எம்மைக்
காக்கப் பிறந்த பெரியோரே !
சற்றும் அறிவிலா எம்மொழிக்குச் - செவி
சாய்க்கத் திருவுளம் கொள்வீரே ! 1

502. வளர்ந்து வரும்வாலை வெட்டி வெட்டித் - தேய்ந்த
மாறுபோல் ஆக்கிக் குறைத்திடும்நீர்,
தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை ஓட்டிடத்
தக்க உதவிகள் செய்வதுண்டோ ? 2

503. இரும்புக் கடிவாளம் மாட்டுவதேன் ? - வாயை
ஈசன் படைத்த திதற்காமோ ?
பெரும்புவி மீதினில் உங்களுக்கும் - இந்தப்
பேதைகள் செய்த பிழைகள் உண்டோ ? 3

504. வம்புகள் பேசிடும் வாயையன்றோ - பூட்டி
வைப்பது நீதி முறையாகும் ;
நம்பி யிருப்போர்க்குத் துன்பம் இழைப்பது
நல்லோர் பெரியோர் செயலாமோ ? 4

505. வெள்ளிப்பூண் கட்டிய சேணமிட்டால் - நெஞ்சு
வேதனை யில்லா திருந்திடுமோ ?
அள்ளி யிடும்பிடிப் புல்லுக்காக - எங்கள்
ஆவியைக் கொள்வ தழகாமோ ? 5

506. பக்கம் திரும்பியே பார்த்திடாமல் - எங்கள்
பார்வையைக் கட்டி மறைப்பதுமேன் ?
திக்கெலாம் தந்த பிரமனிலும் - நீவிர்
தீவிர புத்தி உடையவரோ ? 6

507. திண்ணிய லாடமும் கட்டுவதேன் ? - அதில்
தீயெழ எம்மையும் ஓட்டுவதேன் ?
புண்ணியம் நீர்செய்ய வேண்டாமையா ! - எம்
[மைப்
போக்கிலே விட்டிடில் போதுமையா ! 7

508. எண்ணிக்கை அற்றதோல் பட்டைகளைக் - கட்டி
எம்மீது இறுக்கி முறுக்கிவைப்பீர் ;
கண்ணுக் கழகவை ஆயிடினும் - எங்கள்
கண்டம் நெரிவ தறியீரோ ? 8

509. பற்றி முதுகினில் ஏறிக்கொள்வீர் - எம்மைப்
பட்சிகள் போலப் பறக்கச்செய்வீர்
சற்றும் இரக்கம் இலாதவரோ ? - நீங்கள்
சாத்திரம் கற்ற பயன் இதுவோ ? 9

510. ஈசன் அளித்தகால் இரண்டிருக்க - நீரும்
எங்கள் குறுக்கை முறிப்பதேனோ ?
தாசரைப் போல்வேலை செய்திடினும் - தயை
சற்றும் உமக்கு வருவதுண்டோ ? 10

511. கையில் சவுக்கொன்று போதாதென்றோ - இரு
காலிலும் முட்களைக் கட்டிக்கொண்டீர் ?
ஐயையோ ஏழையேம் ஆவி பறித்திட
ஆயிரம் கூற்றுவர் வேண்டுமேயோ ? 11

512. வண்டியில் கொண்டெமை மாட்டுகின்றீர் - காலை
மாலையெல்லாம் தட்டி ஓட்டுகின்றீர் ;
நொண்டினு லும்விட்டுப் போகமாட்டீர் - உடல்
நோவ அடித்து வெருட்டுகின்றீர். 12

513. மோட்டார் வண்டிவந்தும் மோட்சமில்லை - நாங்கள்
முன்செய்த தீவினைக் கென்செய்குவோம் ;
ஏட்டா லெழுத அடங்கிடுமோ - கஷ்டம்
யாரிடம் சொல்லி அழுதிடுவோம் ? 13

514. கோடிகோடி ஸைக்கிள் வந்திடினும்- எங்கள்
கூட்டத்துக் கேதுமோர் நன்மையுண்டோ ?
ஓடிஓடி உயிர் ஓய்ந்திடவோ - எம்மை
உண்டாக்கி விட்டான் உடையவனே ? 14

515. மேடு பள்ளங்களில் ஓடவேண்டும் - வெய்ய
வேனில் மழைகளில் ஓடவேண்டும் ;
காடு செடிகளில் ஓடவேண்டும் - இந்தக்
கஷ்டங்கள் யாரிடம் சொல்வோம், ஐயா ! 15

516. கொட்டகை கூடாரம் போட்டுக் கொள்வீர் - அதில்
கூத்தாடிக் கூத்தாடி ஓடச்சொல்வீர் ;
பட்டினியாக இறந்திடினும் - இந்தப்
பாடெவர் பட்டுப் பிழைப்பர் ? ஐயோ ! 16

517. ஆங்காரத் தாலும்பே ராசையாலும் - நீங்கள்
அண்டை அரசரைப் போர்க்கிழுத்தால்,
தாங்காத் துயரெலாம் தாங்கிச்சலித்து - யாம்
சாவதும் எங்கள் தலைவிதியோ ? 17

518. கால்இளைப் பாறியே நிற்கவொட்டீர் - வாயிற்
கௌவிய புல்லையும் தின்னவொட்டீர் ;
மூலை முடுக்கென்றும் எண்ணமாட்டீர் - எம்மை
மூச்சு விடாமல் துரத்துவீரே. 18

519. ஆழக்குக் காணம் அளித்திடுவீர் - அதற்கு
ஆயிரம் வேலையும் இட்டிடுவீர் ;
ஏழைக் கிரங்கெனும் நீதிமொழி - நீங்கள்
ஏட்டில் படித்ததை ஏன் மறந்தீர் ? 19

520. சித்தம் இரங்கிட வேண்டுகின்றோம் - எம்மை
க்ஷேமமாய்க் காத்திடக் கெஞ்சுகின்றோம் ;
புத்த முனியருள் போதனையை - என்றும்
போற்றுதல் உங்கள் கடனுமே. 20

## 70. குருட்டுப் பையன்

[கண் தெரியாததால் குருடர் மிக்க மனவருத்த முடையவராய் இருப்பரென்று நாம் எண்ணுகிறோம். ஆனால், பிறவிக் குருடர் பார்வை இன்னதென்று ஒரு பொழுதும் அறியப் போவதில்லை. ஆதலின், அவர் கண்ணில்லாமையை ஒரு குறையாக எண்ணாமல், பின்வரும் பாட்டிற் கூறியுள்ள குருட்டு வாலிபனைப் போல எண்ணவுங் கூடும்: இந்தப் பாட்டு 'காலே ஸிப்பர்' என்பவர் செய்த ஆங்கிலக் கவியைத் தழுவி எழுதப்பட்டது.]

521. இப்பிறப்பில் ஒருபொழுதும் எனக்கறிய முடியா
திருக்கும்ஒளி என்பதென்னை? இருவிழியின் அடையும்
ஒப்பரிய நன்மைகள் இக் கண்கெட்ட சிறியேன்
உணரும் வண்ணம் உரைத்திடுவீர் உற்றஉறவினரே!

522. அனுதினமும் கண்காட்சி அற்புதங்கள் பேசி,
அகங்களிப்பீர்; ஆதித்தன் சோதிமயம் என்பீர்;
எனதளவில் வெம்மையெனத் தோற்றுமிவன் செயலால்
இரவுபகல் மாறிவரல் எங்ஙன்அறி வேனே! 2

523. பாடிவிளை யாடுபொழு துறங்குபொழு தல்லால்
பகற்பொழு திராப்பொழுதிப் பகுப்பெனக்கு
[முண்டோ?
நாடியுணர்ந் திருக்கநிதம் கூடுமெனில் எனக்கிந்
நானிலத்தில் ஓயாத பகலாகும் அன்றோ? 3

524. மைபடியும் வானமென்றும், வில்லென்றும், வர்ண
வகையென்றும் மனமகிழ்ந்து வனப்புரைகள் தருவீர்!
ஐவகையிப் பொறியிருக்க வேறுபொறி யுறுமேல்,
அறியுலக மாட்சியெல்லாம் அளவிடவும் எளிதோ? 4

525. உலகிலெனக் குற்றபெருங் குறைநோக்கி நீவிர்,
உளம்வருந்தல் பன்முறைநெட் டுயிர்ப்பொடு கேட்டறி
[வேன்;
அலகிறந்த பொறுமையக மிருக்கஒரு நாளும்
அறியமுடி யாதகுறை அனுபவிப்ப தரிதோ? 5

526. ஒருகாலும் நீக்கமுடி யாதகுறை வந்தென்
உளத்திலெழும் பெருங்களிப்பை அழித்திடலாகாதே?
வருபாடல் இதுவழுத்து பொழுதேழைக் குருட்டு
வாலிபனு யிருப்பினுமோர் மகராசன் யானே. 6

# வையமும் வாழ்வும்

## 71. இயற்கை வாழ்வு

[தற்காலம் உலகில் காணும் பலவிதக் குழப்பங்களாலும், அநீதிகளாலும் புலவனுக்கு மனித வாழ்வில் வெறுப்பு உண்டாகிறது. ஒருநாள் அவன் தன் ஊருக்கு அருகிலுள்ள சோலையில் சென்று, பல விஷயங்களையும் எண்ணிக்கொண்டு படுத்திருக்கிறான். அப்பொழுது அங்குள்ள மரங்களில் தங்கி யிருக்கும் பறவைகள் ஆனந்தமாய்ப் பாடிக்கொண்டிருக் கின்றன. அதைக் கேட்டதும் அவன் உள்ளத்திலே பின் வரும் எண்ணங்கள் எழுகின்றன.]

527. பறந்து பறந்தெங்கும் – திரியும்
பறவை வாழ்வினைப்போல்,
சிறந்த வாழ்வேதும் – இந்தச்
செகத்தில் கண்டதுண்டோ ? 1

528. சாதிச் சண்டையில்லை – ஓயாச்
சமயச் சண்டையில்லை ;
வேத சாத்திரங்கள் – கூறும்
விதி விலக்கு மில்லை. 2

529. தோட்டி களுமில்லை – உயர்ந்த
தொண்டை மானுமில்லை ;
கோட்டை வீடுமில்லை – எளிய
குடி யிருப்புமில்லை. 3

530. குரு மடங்களில்லை – சீடர்
குழாங்கள் ஒன்றுமில்லை ;
ஒருவர் முன்னேவிழுந் – தொருவர்
உபச ரிப்பதில்லை. 4

531. பசுவைக் கொன்றுவிட்டுக் – கொன்ற
பாவம் நீங்கிடவே
பசுவின் தோற்செருப்புத் – தானம்
பண்ணு வதுமில்லை. 5

532. செக்கினை விழுங்கி - அதனைச்
சீரணம் செய்யச்
சுக்குக் கஷாயம் - குடிக்கும்
தொழில்கள் ஏதுமில்லை. 6

533. குடி கெடுத்துவிட்டுப் - பழிகள்
கோடி செய்துவிட்டுக்
கடவுளை வணங்கி - நிதமும்
கண்ணீர் விடுவதில்லை. 7

534. உரைத்த உரையெல்லாம் - மாறி
உரைத்திடு வாரில்லை ;
துரைத்த னமுமில்லை - தொடரும்
துன்பங் களுமில்லை. 8

535. நீதி மன்றமில்லை - முழங்கும்
நியாய வாதியில்லை ;
பாதி முதல்தனையும் - வழக்கில்
பறிகொ டுப்பதில்லை. 9

536. நாளைக் கில்லையென - இன்று
நைந்து நைந்துருகி,
மூளை கலங்கியே - இருந்து
முணுமு ணுப்பதில்லை. 10

537. உண்டிக் கலந்து போய்க் - கெஞ்சி
ஒரும னிதனையும்
அண்டி வாழவேண்டாம் - ஏழை
அடிமை யாகவேண்டாம். 11

538. அச்சக் கும்பிடில்லை - நடிக்கும்
அன்புக் கும்பிடில்லை ;
பிச்சை யெடுப்பில்லை - காட்டும்
பித்த லாட்டமில்லை. 12

539. இரப்ப வருமில்லை – சோம்பி
இருப்ப வருமில்லை ;
புரப்ப வருமில்லை – அவரைப்
புகழ வாருமில்லை. 13

540. பட்டுடை வேண்டாம் – வயிரப்
பணிகள் பூணவேண்டாம் ;
பொட்டிட வேண்டாம் – தலையில்
பூவும் சூடவேண்டாம். 14

541. வெற்றி தோல்வியில்லை – பணத்தால்
வெறியும் கொள்வதில்லை ;
கற்றறிந் தோமென்று – செருக்கும்
காட்டி நிற்பதில்லை. 15

542. வஞ்சம் சூதில்லை – ஈசன்
வகுத்த வழியன்றி,
நெஞ்சம் என்றுமே – வேறு
நெறியிற் செல்வதில்லை. 16

543. உள்ள துள்ளபடி – பேசி
உலகில் வாழ்ந்திடலாம் ;
கள்ளம் கபடுகள் – இன்றிக்
காலம் போக்கிடலாம். 17

544. புவியிற் பகலெல்லாம் – உணவு
பொறுக்கி உண்டிடலாம் ;
கவலை யற்றிரவில் நன்றாய்க்
கண்ணுறங் கிடலாம். 18

545. கனி கனிந்துதிரும் – சோலை
கண்டு தங்கிடலாம் ;
இனிய கீதங்கள் – பாடி
என்றும் வாழ்ந்திடலாம். 19

546. பகுத்தறி வெதற்கோ ? – பறவை
படைத்த நாள்ஈசன்
வகுத்தளித் திருக்கும் – இயற்கை
வாசனை போதாதோ ? 20

547. தேரும் பொதுவுடைமை – ருஷிய
தேசத்தி லுள்ளதெல்லாம்,
பாரிற் பறவைகளைக் – கண்டு
படித்த பாடமேயாம். 21

548. நமனை எண்ணியெண்ணி – உள்ளம்
நடுந டுங்கிடாமல்,
அமைதி கண்டிடலாம் – நித்ய
ஆனந்தம் பெற்றிடலாம். 22

## 72. குருவின் உபதேசம்

549. வாக்கி றந்த பொருள் – நமது
மனத்திற் கெட்டாப் பொருள் ;
யார்க்கும் அப்பொருளை – அளக்க
இயல மாட்டா தப்பா ! 1

550. ஒரு திரை நீங்கின் – மேலும்
ஒரு திரை வீழும் ;
ஒரு கணப் பொழுதும் – திரைதான்
ஒழிய மாட்டா தப்பா ! 2

551. 'ஆதி எது ?' என்று – வினவும்
அவன் ஓர் அறிவிலான் ;
'ஆதி இது ' என்று – கூறும்
அவனும் ஒரு மூடன் ! 3

552. மண்ணில் வாழ்வ துண்டு - பின்னால்
மரண மாவ துண்டு ;
நண்ணும் இன்ப துன்பம் - எந்த
நாளும் உண்டப்பா ! 4

553. நன்மை விதைத்திடில் - என்றும்
நன்மையே விளையும் ;
தின்மை விதைத்திடில் - அதுபோல்
தின்மையே விளையும். 5

554. கரும்பில் என்றுமே - வேம்பின்
கனி கனிவ தில்லை ;
விரும்பிடா வேம்பில் - கரும்பும்
விளைவ தொன்றுமில்லை. 6

555. பொய் களைந்திடுவோம் - மெய்யைப்
போற்றி நின்றிடுவோம் ;
செய் கடனை நிதம் - உலகில்
செய்து வாழ்ந்திடுவோம். 7

## 73. ஞானோபதேசம்*

### 1. ஞான தீபம்

556. மனமே ! நீயும் வருந்துவதேன் ?
மகிழ்ந்து தேவி திருநாமம்
தினமும் மறவா தன்போடு
தியானஞ் செய்து வாழ்வாயே ;
கனமா மணிசே கண்டியெலாம்
கணக ணென்று முழக்காது,
நினைவை ஒடுக்கி நிகழ்த்திடும் அந்
நிஷ்டைக் கேதும் நிகருண்டோ ? 1

*இது ஸ்ரீ ராமப்பிரசாத ஸேன் பாடிய வங்காளிப் பாடல்களைத் தழுவி அமைக்கப்பட்டது.

வேறு

557. மண்ணினைக் கல்லதனைச் - செம்பினை
வடிவஞ் செய்துவைத்துப்
பண்ணிடும் பூசையாலே - யாதுமோர்
பலன்அ டைவதுண்டோ ?
எண்ணிய எண்ணிலெழும் - உருவை
இதய கமலத்தில்
திண்ணமாய் ஏற்றிவைத்து - நிதமும்
செபங்கள் செய்வாயே. 2

வேறு

558. பூவும் வேண்டாமே - பழமும்
பொரியும் வேண்டாமே
மேவும் உள்ளன்பே - தேவி
விரும்பும் நல்லமுதாம். 3

559. குருடர் கூடிநின்று - கற்பூரம்
கொளுத்திக் காட்டுவதால்,
சிறிதும் நன்மையுண்டோ ? - இதனைச்
சிந்தனை செய்வாயே. 4

560. ஒளியை நோக்கிடவே - விளக்கின்
உதவி வேண்டுவதேன் ?
தெளிய உள்ளத்தில் - ஞான
தீபம் ஏற்றுவையே. 5

561. மேயும் ஆட்டினைப் - பிடித்து
வெட்ட வேண்டாமே ;
தீய குணமெல்லாம் - பலிநீ
செய்தாற் போதுமே. 6

## 2. ஞானப் பயிர்

562. வாழிஎன் மனமே ! - உழவின்
வழியறி யாயோ ?
பாழ்நில மெல்லாம் - உழுதால்
பயிர் செழித் திடுமே. 7

563. விரிசடைத் தேவி - பெயரால்
வேலிகட் டுவையேல்,
அரிய காலனுமே - வந்தங்கு
அணுக மாட்டானே. 8

564. என்றிவ் வுலகமெல்லாம் - நாசம்
எய்தி வீழ்ந்திடுமோ ?
இன்றோ நாளையோ ? - அதனை
யாவர் அறிகுவார் ? 9

565. இந்த நாளேநீ - வாழ்வோடு
இருக்கும் நாளாகும் ;
முந்திப் பயிர்செய்து - நல்ல
முதலெடுப் பாயே. 10

566. விரும்பி ஞானகுரு - தந்த
விதையை நீ விதைத்துப்
பெருகும் அன்புநீரைப் - பாய்ச்சிப்
பேணிக் காப்பாயே. 11

567. தனியே நிற்பாயேல் - மனமே !
தளர்ந்து போவாய் நீ ;
எனையும் கூடவே - துணையாய்
ஏற்றுக் கொள்வாயே. 12

வெண்பா

568. துன்பத்தில் நீயே துணையென்பேன் ; அன்றி, வரும்
இன்பத்தில் ஏதும்உனை எண்ணுகிலேன்—அன்
[பற்ற
பாவிஎனைப் போல் இந்தப் பாரில் ஒருவருண்டோ?
தேவிகா மாட்சியே செப்பு. 13

## 3. ஞானச் சேய்

569. மனைவி மக்களும் மாண்டு மறைந்தனர் ;
வாழ்ந்த வீடும் குடியும் இழந்தனன் ;
இனிய நட்பினர் யாவரும் ஏகினர் ;
ஏழை ஆண்டி ஏகாங்கியும் ஆயினேன் ;
எனையும் இந்நிலை கண்டனை, இன்னுமிங்கு
இன்ன லேதும் இழைத்திட உள்ளதோ ?
உனையும் அன்னை யென் றோதி அழைத்திடேன் ;
உலகெ லாந்தரும் தேவிகா மாட்சியே ! 14

வேறு

570. திண்ணமாய் வீடுதொறும் - இரந்து
திரியத் தேறி விட்டேன் ;
மண்ணிலே தாயில்லாப் - பிள்ளையும்
வளர்வ துண்டலவோ ? 15

571. எண்ணி உனைத்தேடி - அம்மா என்று
ஏங்கி அழுதுநின்றேன் ;
கண்ணுந் தெரிவதில்லை - உனக்குக்
காதும் கேட்பதில்லை. 16

572. தாய்இருக் கையிலே - மிகவே
தளர்ந்து வாடுமெனில்,
சேயினுக் கவளால் - உலகில்
சிறிதும் நன்மையுண்டோ ? 17

573. ஈன்ற பிள்ளைக்கே - கொடிய
எதிரி ஆவாயோ ?
ஆன்ற உலகிலே - தாயின்
அறமும் ஈதேயோ ? 18

574. பின்னும் பின்னும் எனைப் - பிறவிப்
பிணியில் இடுவையேல்,
என்ன செய்வதெனத் - தினமும்
எண்ணி நைவேனே. 19

## 74. போதனை

575. உள்ள துணர வேண்டுமெனில்
உள்ளம் தெளிய வேண்டுமப்பா !
கள்ளங் கபடாகா தப்பா !
கருணை பெருக வேண்டுமப்பா !
அள்ளி உண்ணும் உணவுக்காய்
அருமை கெடலா காதப்பா !
எள்ளத் தனையும் மரணபயம்
இல்லா திருக்க வேண்டுமப்பா ! 1

576. ஈச னிரங்கி அடியவருக்
கினிய காட்சி யளித்திடுநாள்
ஈச னடியார் யாவுமறந்து
ஈச னடியே கண்டிருப்பர் ;
ஈச னடியைக் கண்டவர்பின்
என்றும் மௌனம் கொண்டிருப்பர் ;
ஈச னடிகா ணாதவரே
எங்கும் முழங்கி அலைந்திடுவர். 2

577. என்றும் ஈசன் திருவடிகள்
இதய கமலம் சேர்ப்பீரேல்,
என்றும் கருணை ததும்பியெழும்
இனிய உரைகள் உரைப்பீரேல்,
என்றும் ஏழை எளியவருக்கு
இயன்ற உதவி புரிவீரேல்,
என்றும் என்றும் இவ்வுலகில்
இனிய வாழ்வு வாழ்வீரே ! 3

## 75. இராமகிருஷ்ண பரமஹம்ஸர்

578. ஓடும் பொன்னும் ஒன்றெனவே
உறுதி கண்ட உள்ளத்தான்,
ஏடும் குருவும் இல்லாமல்
யாவும் அறிந்த பேரறிஞன்,
ஈடில் அருள்மா முனிவன்ஸ்ரீ
இராம கிருஷ்ணன் திருநாமம்
நாடும் நகரும் போற்றிடயெந்
நாளும் வாழ்க வாழ்கவே ! 1

வேறு

579. பார்தனிலே வேதாந்தப் பயிர்வளர்த்தோன்,
பத்தினியைச் சோதரியென் றெண்ணி
[வாழ்ந்தோன் ;
கூர்மதியால் எக்கலையும் தானே கற்றோன்,
குணக்குன்றும் ராமகிருஷ்ண பரம ஹம்ஸன் ;
சீர்மிகுந்த மெய்ஞ்ஞானி தெரிந்துரைத்த
செம்மொழிகள் சிந்தையினின் சேர்த்தோ
பேர்பெருக நீடிந்த உலகில் வாழ்ந்து [ரென்றும்
பேரின்ப வாழ்வினையும் பெறுவர் மாதோ ! 2

580. பாரிலரும் புகழ்படைத்த பரம ஹம்ஸன்,
பாரதத்தாய் செய்ததவப் பயனாய் வந்தோன்;
நீரொழியப் பாலுண்ணும் நெறியில் ஆய்ந்து,
நிலையான உண்மைகளை நெஞ்சிற் கொண்டோன்
கூரியமா மதிவிவே கானந் தற்குக்
கோதிலா மெய்ஞ்ஞான குருவாய் நின்றோன்;
சீரியநம் ராமகிருஷ்ண தேவன் பாதம்
சென்னிமிசைக் கொண்டுநிதம் சேவிப்போமே! 3

வேறு

581. வங்கம் அளித்தமகான் வையம் புகழுமகான்
தங்கக் குணங்குடியாய்த் தங்குமகான் - மங்கையரைத்
தீண்டியறி யாதமகான் ஸ்ரீராம கிருஷ்ணனெனை
ஆண்டருள்க, நெஞ்சில் அமர்ந்து! 4

582. வேதா கமங்கள் விரித்த பொருளையெலாம்
ஓதா துணர்ந்த உரவோனை - மாதா என்று
இத்தலத்து மங்கையர்கள் யாவரையும் காண்போனை
நித்தமுமென் நெஞ்சே நினை. 5

583. எங்கும் நிறைபொருளாய் எப்பொருட்கும் [மேற்பொருளாய்த்
தங்கும் தனிப்பொருளின் தண்ணருளால் — பொங்கு [புகழ்
மாதவன் ராமகிருஷ்ணன் வாய்மலர்ந்த [பொன்மொழியைப்
போதுமென் நெஞ்சேநீ போற்று. 6

## 76. இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் தேவி பிரார்த்தனை

584. உன்னரு ளல்லால் - வேறிங்
கொருதுணை யுண்டோ ?
என்னை ஆண்டிடநீ - உள்ளம்
இரங்க வேண்டுமம்மா ! 1

585. மாசிலாத அன்பு - நெஞ்சில்
வளர வேண்டுமம்மா !
ஆசை வேரெல்லாம் - அடியோ
டழிய வேண்டுமம்மா ! 2

586. உலக மாயையிலே - சிக்கி
உழன்று நையாமல்,
அலகிலாத வுன்றன் - அருளால்
ஆள வேண்டுமம்மா ! 3

587. பொருளும் வேண்டாமம்மா ! - எனக்குப்
புகழும் வேண்டாமம்மா !
அருளே வேண்டுமம்மா ! - வேறோர்
ஆசை இல்லையம்மா ! 4

588. கோயில் என்னெஞ்சாய் - என்றும்
குடியிருப்பா யம்மா !
தாயின் அருளல்லால் - எனக்கோர்
தஞ்சம் வேறுண்டோ ? 5

589. சித்திகள் பெற்றரிய - செயல்கள்
செய்ய வேண்டாமம்மா !
பத்தியொ டுன்பாதம் - நிதமும்
பணிதல் போதுமம்மா ! 6

590. மாசிலாத அன்பை - உன்னை
மறக்க வொண்ணா அன்பை,
தாசனாகும் அன்பை - எனக்குத்
தந்தருள்வா யம்மா ! 7

591. காமம் அண்டாமல் - என்னைக்
காக்க வேண்டுமம்மா !
தீமை சாராமல் - உள்ளம்
தெளிய வேண்டுமம்மா ! 8

592. ஆன துணையிங்கே - பிள்ளைக்
காரு மில்லையென,
நானுரை யாமல் - நீயே
நன்க றிவாயம்மா ; 9

593. ஐம்புலச் சேட்டை - முற்றும்
அடங்க வேண்டுமம்மா !
நம்பியுன் பதமே - உள்ளம்
நாட வேண்டுமம்மா ! 10

594. ஏடு கண்டறியேன் - ஏட்டில்
எழுத்தும் கற்றறியேன் ;
பாடிப் பாடியுனைப் - போற்றிப்
பணிவ தெப்படியோ ? 11

595. உண்மை அன்பில்லை - ஞான
ஒளியும் நெஞ்சிலில்லை ;
அண்மை யாகவந்துன் - பாதம்
அடைவ தெப்படியோ ? 12

596. மண்ணில் உன்பிள்ளை - தனியே
வாடி நிற்பதை நீ!
கண்ணி லெந்நாளும் - தாயே
கண்டறியாயோ ? 13

597. மருளும் இவ்வுலகில் - ஏழை
வருந்தி வாடாமல்
அருட் பெருங்கடலே - உண்மை
அன்ப ளிப்பாயம்மா ! 14

## 77. சாரதா தேவி

வெண்பா

598. சிந்தனையில் போற்றிடுவோம் ; செந்தமிழில்
[பாடிடுவோம் ;
வந்தனைகள் செய்துவணங்கிடுவோம்–முந்துபுகழ்ப்
பாரதத்தாய் பெற்றபெரும் பாக்கியத்தால்
[வந்துதித்த
சாரதத்தாய் வாசமலர்த் தாள். 1

விருத்தம்

599. மண்ணில் வாழும் வாழ்நாளில்
மாலை யிட்ட மணவாளன்
கண்ணிற் கண்ட கடவுளெனக்
கருதி வாழ்ந்த மாதேவி
அண்ணல் ராம கிருஷ்ணுவின்
அருமை மனைவி சாரதையை
பண்ணில் பாடிப் புகழ்வோமே!
பாத பூசை செய்வோமே! 2

## 78. விவேகானந்தர்

600. சீர்பெருகு வங்கநிலம் சிறக்க வந்தோன்,
ஸ்ரீராம க்ருஷ்ணபதம் சிரமேற் கொண்டோன் ;
பார்புகழும் வேதாந்தப் பயிர்வ ளர்த்தோன்,
பாரதத்தின் பெருமையெங்கும் பரவச்
[செய்தோன் ;
வேர் பறிய எதிர்வாதம் விரித்துக் கூறி,
வீண்வாதம் செய்பவரை வென்று, வெற்றித்
தார்புனைந்த தவயோகி விவேகா னந்தன்
தாள்பணிந்து வாழ்வோமித் தரணி மீதே.

## 79. இராமதீர்த்தரின் போதனை

601. ஓய்ந்து சோம்பி உறங்கா தேயடா !
ஊக்கம் பெருக உழைத்துமுன் னேறடா !
வாய்ந்த தொழிலில் மலையா தேயடா !
மனமதில் ஒன்றி மகிழ்ச்சி கொள்ளடா ! 1

602. ஐயம் அடர்ந்துளம் அழியா தேயடா !
அமைதி எந்நாளும் அடைந்திருப் பாயடா !
நையப் பிரித்து நலியா தேயடா !
நாடி இணங்கி நல்லுருப் படுத்தடா ! 2

603. மன்னிய மாமூல் வழுத்தியென் பயனடா !
வாழ்நாட் கிசைய வாழ்வு வளரடா !
உன்னிப் பகட்டுரை உரைத்தென் பயனடா !
உள்ளத் துணர்ச்சி ஊன்றி உணரடா ! 3

604. கற்பனைக் குதிரை கடவுதல் ஒழியடா !
காரியம் பொருளிற் கண்டு தெரியடா !
விற்பனர் விதிகளை விளம்புதல் வீணடா!
வினையில் விளைந்த விவேகம் காணடா ! 4

605. உயிரிலா மேற்கோள் உரைப்ப தேனடா !
உற்றவாழ் வின்பயன் உணர்ந்திங் கெய்தடா !
வியனுல கத்தில் நலந்தரும் அனுபவ
வேதாந் தத்தின் மெய்ப்பொருள் ஈதடா ! 5

## 80. வாழ்க்கைத் தத்துவங்கள்

606. நாமே நமக்குத் துணையானல்,
நாடும் பொருளும் நற்புகழும்
தாமே நம்மைத் தேடிவரும் ;
சற்றும் இதற்கோர் ஐயமுண்டோ ? 1

607. நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு,
நேயம் கொண்ட நெறியோர்க்கு,
விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு,
வெல்லும் படைகள் வேறுளவோ ? 2

608. உள்ளந் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்,
பள்ளம் உயர்மே டாகாதோ ?
பாறை பொடியாய்ப் போகாதோ ? 3

609. சாதி சாதி என்றுநிதம்
சண்டை போட்டு, மண்டைகளை
மோதி மோதி உடைப்பதொரு
மூடச் செயலென் றுணரீரோ ? 4

610. வாட்டும் உலகில் வழுத்தரிய
வாழ்க்கைத் துணையாம் மங்கையரை
ஆட்டும் பொம்மை அடிமைகளாய்
ஆக்கி வைப்ப தழகாமோ ? 5

611. கால நதியின் கதியதனில்
கடவுள் ஆணை காண்பீரேல்,
ஞால மீது சுகமெல்லாம்
நாளும் அடைந்து வாழ்வீரே ? 6

## 81. வாழ்க்கை நிலையாமை

612. கருணையின்றி மனிதருள்ளம் கருங்கல் லான
காரணத்தி னல்வந்த கஷ்டந் தன்னை
வருணனையால் வேலையில்லாத் திண்டாட்டத்தால்
வந்தவினை வென்றுலகில் வழுத்து வாரால் ;
பொருளையெலாம், இறந்தவர்கள் யாவரேனும்
பொக்கணமாய்க் கட்டியெடுத் தோடினரோ ?
இருளை ஒளி என்பவர் முன் பேச்சும் உண்டோ ?
ஏழையுரை அம்பலத்தில் ஏறு மேயோ ? 1

613. ஏகாந்தம் யாவருக்கும் இசைய மாட்டாது ;
எந்நாளும் கூடியே வாழ வேண்டும் ;
சாகாத வரம்பெற்றோர் எவரும் இல்லை ;
தளர்ந்தவரைத் தாங்குவதே தரும மாகும் ;
ஆகாய மளவுயர்ந்து வளர்ந்து நின்ற
அரண்மனையும் அரைநொடியில் அழியுமென்று
பீகாரால் கொற்றுவால் அறியார் இந்தப்
பேருலகிற் பின்எதனுல் அறிவார் ? ஐயா ! 2

613. பீகார், கொற்று : பீகாரிலும் குவெட்டாவிலும் நேரிட்ட பூகம்பங்கள்.

## 82. நினைவும் முடிவும்

614. ‘ இருளும் அகலும் இரவியும் தோன்றும் ;
பொருவில் இத் தாமரைப் பூவும் மலரும் ;
மலரும் பொழுது இவ் வன்சிறை நீங்கி,
உலகில் எங்கும் உலவித் திரிந்து,
பூவெழு பற்பல புதுவனங் கண்டு,
நாவெழு சுவைதரு நறைமிக உண்டு,
வாழ்குவன்’ என்றொரு மதுகரம் இருப்ப,
தாழ்மத வேழமொன் றூழ்கயம் இறங்கிப்
பாசிலை பூவெலாம் பறித்து,
வீசி எறிந்து வெறிகொண் டதுவே.

## 83. சிதைந்த எண்ணம்

615. ‘மூடிக் கவியு மிருட்பகை நீங்கும் ; இம்
மூதுலகைத்
தேடிக் கதிரு முதிக்கும் ; கமலஞ்
சிரிக்கும் ’ எனக்
கூடிக் குவியு மலருறை வண்டுளங்
கொண்டமைய
ஆடிக்குடைந்து மதவேழம் ஓடை
யழித்ததுவே.

---

614, 615. வடமொழிப் பாடலொன்றைத் தழுவி எழுதப் பட்டவை.

## 84. புல்

[புல் தனது சரிதத்தைத் தானே கூறுகிறது.]

616. பசும்புல் என்பெயர்; பட்டபா டெல்லாம்
ஒருபெருங் கதையாம்; உரைப்பதும் எளிதோ ?
விரிவிடம் படுமொரு வீட்டின் முன்றிலில்
வளர்ந்தேன். அங்குள மனிதரோ கொடியர் ;
தத்தம் மக்களும் தாமுமே என்றும்
பெற்றுப் பெருகிப் பெருங்குடி யாகி
வாழக் கருதுவர்; வகுத்திட லென்? அவர்
வாயிற் படியில் வாடி வணங்கி
வயிற்றிற் கின்றிநா வறண்டு, 'தண்ணீர்
தண்ணீர்' என்று தவித்துத் தவித்து,
வாணா ளெல்லாம் வருந்தி நொந்தேன்.
குடிக்க நீரும் கொடுத்திலர் பாவிகள்.
விண்ணி லிருப்பினும் மண்ணில் யான்படும்
வருத்தமும் வாட்டமும் கண்டுஅவ் வானம்
அளித்த தமுதம் ; ஆர வுண்டனன் ;
விசும்பில் துளிகள் வீழி னல்லால்
பசும்புல் தலையிப் பாரிற் காணுமோ ?
மனிதரும் போற்ற வாழ்வமோ யாமும் ?
கேளீர் கதைஇனும் : கிடைத்த நீரை
அருந்திப் பலநாள் அயர்வும் நீங்கித்
தெளிந்து நிமிர்ந்தேன். சிறிதென் உடலில்
பச்சையும் பிடித்தது ; பார்த்தனர் பாவிகள்.
தரிக்கிலர் உள்ளம் ; தழைக்கும் தலையைக்
காலால் மிதித்தனர், கழுத்தையும் அறுத்தனர் ;
ஆட்டையும் மாட்டையும் அடித்து மேய்த்தனர்.

படர்ந்த இடமெலாம் பாழே யாக்கினர்.
இருந்த இடமும் இல்லா தியற்றினர்.
உயிரும் உடலும் குறுகி ஒருசிறு
வேராய்த் தரையுள் வெகுநா ளாக
ஒளித்திருந்தேன். அவ் வுறைவிடந் தேடி
வான்மழைத் தோழன் வந்தெனைக் கண்டு,
' மனிதன் செயலால் வலியிழந் தனையோ ?
என்துணை யிருக்க இடர்உனக் குண்டோ ?
அறிவிலி போலும்நீ ! அஞ்சேல், அஞ்சேல் ;
யாவையும் காப்பவன் ஈசன் ' என்றெலாம்
தேற்றிய மொழிஎனக்கு ஊற்றமும் உறுதியும்
பெரிதும் அளித்தது. பெயர்த்தும் மெலமெலத்
தலையெடுத் தேன். அதைத் தறுகணர் கண்டு,
பிடித்தனர் வெட்டினர் பிடுங்கி எறிந்தனர்.
சாணியைக் கரைத்துத் தலையில் கொட்டினர்.
துடைப்பங் கொண்டு துரத்தி யடித்தனர்
யாவும் சகித்தங் கிருந்தனன். என்செய்வேன் ?
தளர்ச்சி யுற்றிலேன், தகும்நற் காலம்
வருமெனச் சற்று மறைந்து தங்கினேன்.
ஐவரை விடயான் அதிபல சாலியோ ?
மறைந்து சின்னாள் வாழுங் காலை,
ஒருதினம் வீட்டில் உள்ளார் அனைவரும்
உறவினர் இருக்கும் ஓரூர் சென்றனர்.
வெகுநா ளாகியும் மீண்டிலர். யானும்,
இதுவே தருணம் என்று நினைத்து,
விரைவின் வளர்ந்து, விரும்பிய படியெலாம்
தழைத்துச் செழித்துச் சார்விட மெங்கும்
படர்ந்து பற்றிப் பல்கிளை யாகி,
வாய்ந்தஇவ் வித்தாம் மக்களைப் பெற்று
வாழ்ந்திருக் கின்றேன். மற்றவர் வாழும்

வீட்டையும் இடித்து விடும்வலி இந்நாள்
எனக்குண் டாயினும், இழிவென விடுத்தேன்.
இணங்கி யிருப்பவர் பிணங்கிப் பிரியவும்
பிணங்கிப் பிரிந்தவர் இணங்கிக் கூடவும்
செய்வினை என்போல் செய்ய வல்ல
மந்திர வாதியிவ் வையகத் துண்டோ?
செய்பிழை யாவும் தெரிந்து பொறுத்தேன்.
பொறுத்தவர் என்றும் பூமி யாள்வார்.
எனக்குச் சொந்த மில்லா இடமெதாம்?
புல்லே யாயினும் புல்லிய குணமிலை.
அற்பர் இகழினும் அறிவால் பொறுப்பேன்.
தலையில் மிதிப்பினும் தயவால் சகிப்பேன்.
முயற்சி கைவிடேன், முயற்சி கைவிடாத்
திறமுடை யோரைத் திருமகள்
பெரிதும் உவந்து பேணமுன் நிற்குமே.

## 85. மலையும் அணிலும்*

617. ‘அற்பத் திருடா !’ என்றெனை யழைத்த
வெற்பே ! யானும் விளம்பக் கேளாய்:
‘அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரு வண்மையும்’ உனக்கென்று
உரைமொழி முற்றும் உண்மையே. ஆயின்,
ஒருவகைப் பொருளின் ஒருல காமோ?
ஒருவெயில் மழையின் ஓராண்டு தேறுமோ?
பற்பல பொருளும் பற்பல பருவமும்
ஒன்றாய்க் கூடினே உலகாம், ஆண்டாம்.

*இது எமர்சன் என்பவர் செய்த ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.

ஆதலின், யானிவ் வகிலமீ துதித்தே
இருப்பதை இழுக்கா எண்ணவும் மாட்டேன்.
என்தொழில் இயற்றவும் யாவர் வேறுளார்?
உன்பெரும் உருவெனக் கில்லை. உனக்கும்,
என்சிறு வடிவில்லை. மேலும், என்றன்
உள்ளக் களிப்பில் உற்று நோக்கில்
எள்ளத் தனையும் உனக்கிலை யிலையே.
அணிற்பிள்ளை சாடி ஓடி அலைந்து
விளையா டற்கு விரிவிடம் பெறுவாய்.
ஐய மிதற்கிலை. அடலும் ஆற்றலும்
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்வொரு விதமாம்;
அறத்தொடும் முறையொடும் ஆழ்ந்த அறிவொடும்
அனைத்துமிவ் வுலகில் அமைக்க லாயின.
வனங்களை முதுகில் வகித்து நின்றிட
வல்லைநீ யாயின், மற்றிங் கெனைப்போல்
நெல்லைக் கொறிக்க நின்னா லாகுமோ?
யாவரே பெரியர்? யாவரே சிறியர்?
ஒன்றிற் பெரியர் ஒன்றிற் சிறியராம்;
ஒன்றிற் சிறியர் ஒன்றிற் பெரியராம்.
ஆதலின், அற்பர் ஆகா தவரென
ஓதுதல் மடமையின் சாதனை யாமே.

## 86. உத்தம ஜீவிதம்

618. கருத்திலெழும் அரியஉருக் கவின்கொளநற் சிலையிற்
கண்காணக் காட்டிடவே கைவருந்தி நாளும்,
அருத்தியொடு மெய்த்தளர்வும் அகத்தளர்வும் [பாராது
ஆமளவும் முயன்றிடுவர் தோமறுசிற் பியரே. 1

619. அருமையிலும் பெருமையிலும் அழகிய தன்மையிலும்
அகத்திலெழுந் தொளிர்வடிவம் புறத்தமைக்கச்
[சமைந்தே,
உரிமைபெறும் ஓவியமும் உருவாக்க வல்லார்
உறுதுயரும் படும்பாடும் உலகிலெவர் அறிவார்? 2

620. பெருமைபெறு திருக்கோயில் பெட்புறவே அமைக்கும்
பேராளன், அத்தளியின் பெரியசின கரங்கள்
ஒருமைகொள உயர்வானம் உறுமளவும் எழவே,
உயிர்வாழும் நாள்முழுதும் உதவிடினும் வருந்தான்.

621. இமையவரின் உலகுதனில் இருந்துவரு மருந்தாய்
இதயமிதில் எழுமினிய இறும்பூதின் மயமாய்
அமையவொரு கவிபாட அரியபெரும் புலவர்,
அடைவருத்தம் செல்காலம் அணுவேனும் மதியார். 4

622. கல்லுருவும் பொடியாகும்; காண்படமும் மங்கும்;
கண்களிக்கும் திருத்தளியும் மண்குளிக்கும்
திண்ணம்,
சொல்லினொரு நூருண்டு செல்லுவதும் அரிதாம்;
சொந்தமெனப் புலவர்தரு சந்தமுறு கவியே. 5

623. சீவிதத்தை விதியதனைத் திறமுறவே திருத்தும்
திவ்வியநற் சீவான்ம சிற்பியரும் யாமே;
மூவுலகில் எக்காலும் மூவாத பொருளில்
முயற்சியொடு பயிற்சிதரும் மொய்ம்புடையோர்
[யாமே.

624. ஆதலால் எந்நாளும் அழியாத பொருளாம்
ஆன்மாவை மேம்படுத்தி, அறநெறியில் நின்று,
தீதெலாம் அறவொதுக்கித் திருவருளும் பெற்றுச்
சிவஞானச் செல்வரெனத் தினம்வாழு வோமே. 7

---

620, 622. தளி - கோயில்.

## 87. அழியா உயிர்ப்பு*

625. ஓதற் கரியதாம் ஊழி காலப்
புழுதியில் அழியுமிப் புல்லாங் குழலினை
எறிந்தனன் காந்தனே ! இரங்கிநீ அதனை
எடுத்தனை நோக்கி, எளிய சிறிய இக்
கருவியுள் ஈறிலாக் காலம்என் ஆவி
தவழ்ந்திடும் என்னச் சாற்றினை. யானும்,
தேர்ந்தொரு செயலும் செய்திடா ததனை
அந்நாள் முதலாப் பின்னாள் என்றும்உன்
கையடைப் பொருளாய்க் காத்திட வைத்தனன்.
அற்புத மூர்த்தி ! நின் அருளால் இன்று அதில்
மன் உப சாந்தமும் வைராக் கியமும்
இடையீ டின்றி எதிரொலி செயுமே.
துன்பம் அடர்ந்து தொடருமிவ் வாழ்வில்
இன்ப வசந்தம் எழில்பெற வந்து
மலர்வது கண்டு மனம்மகிழ் வுறுமே.
சிற்பர்க் குயிராம் சிற்பனே ! உன்றன்
அழகிய வடிவம் அடியனேன் உடலச்
சிலையில் இனிது தெரியச் செய்தனை.
வையகம் போற்றுந் தெய்விக நண்ப ! நின்
பூரணக் காதலே பொங்குவ தென்னுளே.
அலைகளில் ஓரலை யானும் ஆயினேன்.
கவிதையஞ் செல்வி களிப்பொடு வந்தென்
நாவிலே நின்று நடம்புரி கின்றாள்.
உள்ளத் தமுதம் ஒழுகத்
தெள்ளிய கீதம்இச் செவிக்கமு தூட்டுமே.

*சுவாமி சுத்தானந்த பாரதியார் பிரெஞ்சு மொழியில் செய்த ஒரு கவியின் கருத்தையொட்டிப் பாடப்பட்டது.

## 88. உண்மை கண்டவர் யார் ?*

626. உரைக்கும் உண்மையென்று - பலநூல்
ஊன்றி ஆராய்ந்தேன் ;
திரைக்கு மேல்திரையே - கண்டு
திகைத்து நின்றுவிட்டேன். 1

627. வேறுவேறான - மதங்கள்
வேறு வேறாகக்
கூறு கின்றதனால் - உள்ளம்
குழம்பு கின்றதப்பா ! 2

628. 'கற்றைச் சடையனே - ஆதிக்
கடவுள், ஐயமிதில்
சற்று மேயில்லை' - என்று
சைவர் கூறுகின்றார். 3

629. 'ஆதி நாயகன் - உலகை
அளந்த மால்' எனவே
வாதம் செய்திடுவர் - கற்ற
வைணவப் பெரியார். 4

630. 'முக்குடை யோனும் - அருக
மூர்த்தி யேமுதல்வன் ;
தர்க்க மேதுமில்லை' - என்று
சமணர் சாதிப்பார். 5

631. காதல் நாயகனைக் - கனவில்
காணும் மங்கையர்போல்,
ஓது கின்றதல்லால் - உலகில்
உண்மை கண்டவரார் ? 6

---

*ஓர் ஆங்கிலக் கவியைத் தழுவி எழுதப்பட்டது.

632. மூல முதற் பொருளை - என்றும்
முடிவிலாப் பொருளை
ஞால மிசைக் கண்ணுல் - கண்ட
ஞானி யெவனு முண்டோ ? 7

## 89. ஒத்துழைப்பு

633. இம்மை வாழ்வுக்கும் - மறுமைக்
கினிய வாழ்வுக்கும்
செம்மை வழிசொல்வோம் - சற்றே
செவி கொடுப் பீரையா ! 1

634. எத்தனை ஜென்மங்களோ - முன்னம்
எடுத் தெடுத் தலுத்தோம் ;
எத்தனை ஜென்மங்களோ - இன்னும்
எடுக்கப் போகின்ருேம். 2

635. துன்பச் சுழியிலே - விழுந்து
சுழன்று ழலாமல்,
இன்ப வாழ்வடையும் - வழியை
எண்ண வேண்டுமையா ! 3

636. ஒருவர் வாழ்ந்திடலும் - உலகில்
ஒருவர் தாழ்ந்திடலும்
அரிய தெய்வத்தின் - செயலென்
றறைதல் வீணேயாம். 4

637. வீடு கட்டி வைத்துத் – தந்தை
வேண்டும் பொருள் வைத்தார் ;
கூடி வாழாமல் – மக்கள்
குத்திச் சாகின்றார். 5

638. ஈசன் மீதிலே – பழியை
ஏற்ற லேனையா !
நாச மாவதற்கு – மூலம்
நாமே தானையா ! 6

639. வைய மெங்குமே – காணும்
வாழ்வு தாழ்வெல்லாம்,
செய்வினைப் பயனும் – இதிற்
சிறிதும் ஐயமில்லை. 7

640. உலகம் முழுவதும் – நோக்கின்
ஒருடம் பேயாம் ;
அலகில் ஜீவரெலாம் – அதன்
அவயவங் களேயாம். 8

641. உடலு றுப்புகள்போல – உலகில்
ஒத்துழைப் போமேல்,
தடையி லாமலே – க்ஷேமம்
தழைத்து வருமையா ! 9

642. வறுமை அண்டாது – கொடிய
வழக்கும் வாராது ;
சிறுமை தருஞ் செயல் – ஏதும்
தீண்ட மாட்டாது. 10

643. எமனை அஞ்சாமல் - தீமை
யாது மில்லாமல்,
அமர வாழ்வுமிந்த - உலகில்
அடைய லாமையா ! 11

644. உலக க்ஷேமத்தைத் - தரும்
உண்மை யிதுவையா !
பலபல வேறு - சொல்லிப்
பயனென் றில்லையையா ! 12

# ச மூ க ம்

---

## 90. தைப் பொங்கல்

645. பொங்கல்! இன்று பொங்கல்!
புதுவருஷப் பொங்கல்!
மங்கலங்கள் பொங்க
மணையிலிடும் பொங்கல்! 1

646. சந்தனத்தைக் குழைத்துத்
தரையைமெழு கிடுவோம்;
சிந்துரத்தாற் கோலம்
சேர அதில் அமைப்போம். 2

647. எங்கள்கண பதியை
எழுந்தருளச் செய்வோம்;
மங்கலநற் பொருள்கள்
வரிசைகொள வைப்போம். 3

648. வாசமிக வீசும்
மலர் எடுத்து வருவோம்;
நேசமொடு தூவி
நின்றுதொழு திடுவோம். 4

649. இலைகள்விரித் திடுவோம்,
இளநீர்கள் வைப்போம்;
குலைகுலையாய்க் கனிகள்
கொண்டுவந்து வைப்போம். 5

650. பச்சைமஞ்சள் இஞ்சி
படைபடையாய் வைப்போம்;
இச்சைதரு கரும்பும்
இடையிடையே நடுவோம். 6

651. அகில் விறகை மாட்டி
அடுப்பில் எரி மூட்டி,
பகவன் அடி போற்றிப்
பானையேற்றி வைப்போம். 7

652. தங்கத்தினால் பானை,
தரளம்என அரிசி,
பொங்கலும்பால் பொங்கல்,
புத்தமுதப் பொங்கல் ! 8

653. பானையுமே பொங்கிப்
பால்வடியும் வேளை,
வானம்எழக் குரவை
வழங்கிவலம் வருவோம். 9

654. கடவுட்கமு தளிப்போம் ;
காகத்துக்கும் இடுவோம் ;
உடனிருந்தெல் லோரும்
உண்டுமகிழ்ந் திடுவோம். 10

## 91. பொங்கல் வாழ்த்துக்கள்*

655. புயலும் பருவ மழைபொழிய
பொருள்கள் எங்கும் விலைமலிய
வயலிற் பயிர்கள் வாய்த்துவர
மக்கள் உள்ளம் மகிழ்ச்சிபெற
அயனும் அரியும் தேடுமரன்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
பயிலும் அன்பால் ஒருநால்வர்
பாடும் கவிபோல் பொங்குகவே ! 1

*முதற் பாடல் 'கலைமகளி'லும், இரண்டாம் பாடல் 'கலைக் கதிரி'லும், அடுத்த மூன்று பாடல்கள் 'தினமணி கதிரி'லும், இறுதிப் பாடல் 'தினமலரி'லும், 1958–ஆம் ஆண்டு, பொங்கல் மலர்களில் வெளிவந்தன.

656. சாதி சமயம் பற்றிவரு
சண்டை ஓய்ந்து மறைந்திடவே,
நீதி யெங்கும் நிலவிடவே,
நெஞ்சிற் கருணை நிறைந்திடவே,
ஆதி இறைவன் ஆனந்தன்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
பூத லத்தில் காந்திமகான்
புகழே போலப் பொங்குகவே ! 2

657. வார வழக்கு வாராமல்
வயலிற் பயிர்கள் செய்திடவே,
ஈர நெஞ்சம் உடையவராய்
எவரும் உலகில் வாழ்ந்திடவே,
ஆரை அணியாய் அணிந்தபிரான்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
பாரில் பெரியோர் ஆசிதரும்
பாக்கி யம்போல் பொங்குகவே ! 3

658. நாடும் நகரும் சிறந்திடவே,
நன்செய் புன்செய் செழித்திடவே,
வீடும் குடியும் விளங்கிடவே,
விற்கும் பொருள்கள் மலிந்திடவே,
ஆடும் தில்லை யம்பலவன்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
பாடும் புலவர் நாவிலெழு
பாக்கள் போலப் பொங்குகவே ! 4

657. ஆரை - ஆத்தி மாலையை.

659. சந்தக் கவிகள் சரிதங்கள்
சாஸ்திரங்கள் பற்பலவும்
தந்து நித்தம் தமிழன்னை
தளரா தோங்கி வளர்ந்திடவே,
அந்தி வண்ணன் உமைபங்கன்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
புந்தி மகிழ்ந்து நல்லோர்செய்
புண்ணி யம்போல் பொங்குகவே ! 5

660. மாரி யெங்கும் பொழிந்திடவே,
மணியத் தீர்வை ஒழிந்திடவே,
ஊரும் நாடும் சிறந்திடவே,
உழவர் உள்ளம் குளிர்ந்திடவே,
ஆரும் பிறையும் அணிந்தபிரான்
அருளை வேண்டும் தைப்பொங்கல்
தேரும் அன்பால் அறஞ்செய்தோர்
செல்வம் போலப் பொங்குகவே ! 6

## 92. தீபாவளிப் பண்டிகை

### தொழிலாளி பாட்டு

661. பண்டிகை தீபாவளிப் பண்டிகையாம் - இந்தப்
பாரத நாட்டுக்கோர் பண்டிகையாம் ;
தண்டிகை மன்னவர், ஏழை எளியவர்,
சந்தோஷம் கொண்டாடும் பண்டிகையாம். 1

660. மணியத் தீர்வை - திருவிதாங்கூர் தேசத்தில் நெல்லாக வசூலிக்கும் ஒரு வரி.

662. ஆண்டிலோர் தீபா வளியாம், அடா! - அதை
ஆண்டியும் கொண்டாட வேண்டும், அடா!
தீண்டு துயர்போகும் நாள் இதடா! - உள்ளம்
தேடித் தவித்திடும் நாள் இதடா! 2

663. உற்ருர் உறவினர் யாவருமே - கூடி
ஒன்ருக உண்டிடும் நாள் இதடா!
வற்ருத செல்வம் படைத்தவர்போல - நாம்
வாழ்வின் நலம்பெறும் நாள் இதடா! 3

664. வாழத் தயங்கும் இக் காலத்திலே - துளி
வாழ்வை அளித்திடும் நாள் இதடா!
ஏழைக்கிரங்கி நரகாசுரன் - முன்னம்
ஈசனை வேண்டிய நாள் இதடா! 4

665. சென்றதை எண்ணி வருந்தாதேடா! - இனிச்
சேர்வதும் எண்ணி நடுங்காதேடா!
இன்றைக் கிருப்பதே உண்மை, அடா! - நாளை
எப்படி யோ?தெரி யாதே, அடா! 5

666. எங்கே இருந்துநாம் வந்தோமோ? - இனி
எவ்விடம் சென்றுதான் சேருவோமோ?
இங்கே அறிந்தவர் யாவர்? அடா! - இந்த
ஏடுகள் உண்மை இயம்புமோடா! 6

667. ஆண்டுக் கொருமுறை யாகிலும் எஞ்சினுக்கு
ஆயில் இடுவ தறியாயோடா!
வேண்டிப் பரமன் படைத்த உடல்இது
வேலைகள் செய்து அலுக்காதோ? அடா! 7

668. நல்லெண்ணெய் பூசிக் குளிப்போம், அடா! - நல்ல
நல்ல உணவுகள் உண்போம், அடா!
அல்லும் பகலும் உழைப்பதெல்லாம் - வயிறு
ஆரப் புசிப்பதற் கல்லவோடா! 8

669. இட்டெலி வீரர்தென் னிந்தியராம் - என்பது
இன்றுநாம் காட்டி விடுவோம், அடா!
சட்டினி நண்பன் துணையிருக்க - அதில்
சந்தேகம் உண்டோ? நீ சொல்வாய், அடா! 9

670. தேடிச் செலவுசெய் யும்பொருள் நம்பொருள் ;
சேர்த்துவைக் கும்பொருள் யார் பொருளோ?
வாடி வயிற்றுக்கொன் றீயாத லோபிக்குஇவ்
வையக வாழ்வேதும் உண்டோ ? அடா ! 10

671. சின்னஞ் சிறுவர் சிறுமியரை - இன்று
சிங்காரம் செய்துநாம் பார்ப்போம், அடா !
கன்னத் தவரிடும் முத்தமொன்றுக்கு - இந்தக்
காசினி முற்றும் ஈடாகு மோடா ! 11

672. பெண்டுகள் பிள்ளைகள் நெய்த கதருடை
பீதாம் பரத்தினும் மேலாம், அடா!
கொண்டாடிப் பண்டிகை நாளில் அணிந்திடில்,
கோடி கோடிப்புண்யம் உண்டாம், அடா ! 12

673. இட்டமான பாடல் பாடுவோமே ! - நல்ல
இன்பக் கதைகளைச் சொல்லுவோமே !
வட்டமாய்ச் சுற்றி யிருப்போமே ! - இன்று
வந்த விகடனைப் பார்ப்போமே ! 13

## 93. பெண்களின் உரிமைகள்

674. மங்கைய ராகப் பிறப்பதற்கே - நல்ல
மாதவஞ் செய்திட வேண்டும், அம்மா !
பங்கயக் கைநலம் பார்த்தலவோ - இந்தப்
பாரில் அறங்கள் வளரும், அம்மா ! 1

675. அல்லும் பகலும் உழைப்பவர் ஆர் ? - உள்ளத்து
அன்பு ததும்பி யெழுபவர் ஆர் ?
கல்லும் கனியக் கசிந்துருகித் - தெய்வ
கற்பனை வேண்டித் தொழுபவர் ஆர்? 2

676. ஊக்கம் உடைந்தழும் ஏழைகளைக் - காணில்
உள்ளம் உருகித் துடிப்பவர் ஆர் ?
காக்கவே நோயாளி யண்டையிலே - இரு
கண்ணிமை கொட்டா திருப்பவர் ஆர் ? 3

677. சிந்திய கண்ணீர் துடைப்பவர் ஆர் ? - பயம்
சிந்தை யகன்றிடச் செய்பவர் ஆர் ?
முந்து கவலை பறந்திடவே - ஒரு
முத்தம் அளிக்க வருபவர் ஆர் ? 4

678. உள்ளந் தளர்வுறும் நேரத்திலே - உயிர்
ஊட்டும் உரைகள் உரைப்பவர் ஆர் ?
அள்ளி யெடுத்து மடியிருத்தி - மக்கள்
அன்பைப் பெருக்கி வளர்ப்பவர் ஆர் ? 5

679. நீதி நெறிநில்லா வம்பருமே - நல்ல
நேர்வழி வந்திடச் செய்பவர் ஆர் ?
ஓதிய மானம் இழந்தவரை - உயர்
உத்தமர் ஆக்க முயல்பவர் ஆர் ? 6

680. ஆவி பிரியும்அவ் வேளையிலே - பக்கத்து
அன்போ டகலா திருப்பவர் ஆர் ?
பாவி யமனும் வருத்திடாமல் - ஈசன்
பாதம் நினைந்திடச் செய்பவர் ஆர் ? 7

681. ஏங்கிப் புருஷனைத் தேடியழும் - அந்த
ஏழைக் கிதஞ்சொல்லி வாழ்பவர் ஆர் ?
தாங்கிய தந்தை யிழந்தவரைத் - தினம்
சந்தோஷ மூட்டி வளர்ப்பவர் ஆர் ? 8

682. சின்னஞ் சிறிய வயதினிலே - ஈசன்
சேவடிக் கன்பெழச் செய்பவர் ஆர் ?
உன்னும் இளமைப் பருவமெலாம் – களிப்பு
உள்ளம் பெருகிடச் செய்பவர் ஆர் ? 9

683. மண்ணக வாழ்வினை விட்டெழுந்து – மனம்
மாசிலா மாணிக்க மாயொளிர்ந்து
விண்ணக வாழ்வை விரும்பிடவே – நிதம்
வேண்டிய போதனை செய்பவர் ஆர் ? 10

684. அன்பினுக் காகவே வாழ்பவர் ஆர் ? – அன்பில்
ஆவியும் போக்கத் துணிபவர் ஆர் ?
இன்ப உரைகள் தருபவர் ஆர் ? - வீட்டை
இன்னகை யாலொளி செய்பவர் ஆர் ? 11

685. இப்பெரு நற்கரு மங்களெல்லாம் – உமக்கு
ஈசன் அளித்த உரிமைகளாம் ;
மெய்ப்பணி வேறும் உலகில் உண்டோ ?-இன்னும்
வேண்டிப் பெறுவரம் ஒன்றுளதோ ? 12

686. மங்கைய ராகப் பிறந்ததனுல் – மனம்
வாடித் தளர்ந்து வருந்துவதேன் ?
தங்கு புவியில் வளர்ந்திடும் கற்பகத்
தாருவாய் நிற்பதும் நீர் அலவோ ? 13

687. செம்மையிற் பெற்ற குணங்களெலாம் – நீங்கள்
செய்வினை யாலே திருத்துவீரேல்,
இம்மைக் கடன்கள் முடித்திடவே – முத்தி
எய்திச் சுகமா யிருப்பீரே. 14

## 94. உடல் நலம் பேணல்

688. உடலின் உறுதி உடையவரே
உலகில் இன்பம் உடையவராம் ;
இடமும் பொருளும் நோயாளிக்கு
இனிய வாழ்வு தந்திடுமோ ? 1

689. சுத்த முள்ள இடமெங்கும்
சுகமும் உண்டு ; நீ அதனை
நித்தம் நித்தம் பேணுவையேல்,
நீண்ட ஆயுள் பெறுவாயே. 2

690. காலை மாலை உலாவிநிதம்
காற்று வாங்கி வருவோரின்
காலைத் தொட்டுக் கும்பிட்டுக்
காலன் ஓடிப் போவானே ! 3

691. ஆளும் அரசன் ஆனாலும்
ஆகும் வேலை செய்வானேல்,
நாளும் நாளும் பண்டிதர் கை
நாடி பார்க்க வேண்டாமே. 4

692. கூழை யேநீ குடித்தாலும்,
குளித்த பிறகு குடி, அப்பா !
ஏழை யேநீ ஆனாலும்
இரவில் நன்றாய் உறங்கப்பா ! 5

693. மட்டுக் குணவை உண்ணாமல்
வாரி வாரித் தின்பாயேல்,
திட்டு முட்டுப் பட்டிடுவாய் ;
தினமும் பாயில் விழுந்திடுவாய். 6

694. தூய காற்றும் நன்னீரும்,
சுண்டப் பசித்த பின்உணவும்,
நோயை ஓட்டி விடும், அப்பா !
நூறு வயதும் தரும், அப்பா ! 7

695. அருமை உடலின் நலமெல்லாம்
அடையும் வழிகள் அறிவாயே ;
வருமுன் நோயைக் காப்பாயே
வையம் புகழ வாழ்வாயே. 8

## 95. சுகாதாரக் கும்மி

696. பாவையரே ! என்தன் பாங்கியரே ! - கும்மி
பாடி விளையாடும் தோழியரே !
ஆவ லொடுசுக வாழ்வை அடைவதற்கு
ஆகும் வழிகளைத் தேடுவீரே. 1

697. உள்ளம் உடலையே பற்றி நிற்கும் - இந்த
உண்மை மறந்திட லாகா தம்மா !
தெள்ளத் தெளிந்த அறிவுடை யோர்மொழி
தெய்வ மொழியென் றுணர்வாய், அம்மா ! 2

698. மாசோ டறியாமை நேசமாகித் - தம்முள்
வாய்த்த மணஞ்செயும் காரணத்தால்,
பேசும் உலகினில் நோய்கள் எனும்பல
பிள்ளைகள் வந்து பிறக்கு தம்மா ! 3

699. சுத்தமே என்றும் சுகம் அளிக்கும் - தீய
சோம்பலை ஓட்டித் துரத்தும், அம்மா !
இத்தரை வாழ்வைப் பெருக்கும், அம்மா !-அதற்கு
ஈடேதும் இல்லையான் சொன்னேன், அம்மா! 4

700. ஏதும் அழுக்கிலா ஆகாயமே - உடற்கு
என்றும் உறுதி பயக்கும், அம்மா !
மோது கடற்கரை சென்றுலவி - உண்மை
முற்றும் தெளிவுறக் காண்பாய், அம்மா ! 5

701. நித்தமும் ஈசன் திருமுடியில் - கங்கை
நீரைச் சுமந்து திரிவன் என்றால்,
சுத்த ஜலத்தின் பெருமை யெல்லாம் - எவர்
சொல்லி முடிக்கவும் வல்லார் ? அம்மா ! 6

702. கந்தை யானாலும் கசக்கியுடு – என்னும்
கற்பனை போற்றி நடப்பாய், அம்மா !
சுந்தர மேனியுண் டாகும், அம்மா ! - இந்தச்
சுத்தத்தின் நன்மை சிறிதோ ? அம்மா ! 7

703. மட்டுக்கு மிஞ்சிடில், வானமுதும் - குணம்
மாறி விடமாகிப் போகும், அம்மா !
இட்ட முள்ள தோழித் தங்கமே ! – நீஇதை
என்றும் மறவா திருப்பாய், அம்மா ! 8

704. சுண்டப் பசித்துண்ணும் வேளையிலே - பழஞ்
சோறும் சுவையமு தாகும், அம்மா !
பண்டி நிறைந்த பின்உண் பவர்க்கு - நல்ல
பாலும் கசப்பாகிப் போகும், அம்மா ! 9

705. வேலைசெய் யாதுசோம் பேறிகளாய் - நிதம்
வீட்டி லிருப்பது ஆகா தம்மா !
மூலையி லிட்ட இரும்பு துருவேறி,
மோசமாய்ப் போவதும் கண்டிலையோ ? 10

706. வேலைகள் செய்து உடல் வன்மைபெறின் - இந்த
மேதினி முற்றும் நமதே, அம்மா !
காலனையும் வென்று வாழ்வோம், அம்மா ! - ஒரு
காலும் தளர்ச்சியுண் டாகா தம்மா ; 11

707. நோய்கள் உடலை அணுகிடாமல் – ஆயுள்
நூற்றினும் மேலாய் வளரும், அம்மா!
தீய உணவை அகற்றும், அம்மா! – வேலை
செய்திட நித்தம் பழகும், அம்மா! 12

708. நித்தமும், நோயாளி யாகி, ஐயோ! – கட்டில்
நீங்காது நீண்டு கிடப்பவர்க்கு
எத்தனை செல்வம் இருந்திடினும் – அதில்
யாதும் பயன்உண்டோ? சொல்லும், அம்மா!

709. மன்னுயிர்க் காக உழைத்து நிதம் – சுக
வாழ்வை அளிக்க முயலு வோர்தம்
பொன்னுரை போற்றி ஒழுகுவமேல் – நாமும்
பூரண வாழ்வைப் பெறுவோம், அம்மா! 14

710. நாடும் சுகாதாரச் சங்கம் என்றும் – இந்த
நானிலத் தோங்கித் தழைக்குகவே!
ஆடி விளையாடும் தோழியரும் – நீண்ட
ஆயுளைப் பெற்று வளர்குகவே! 15

## 96. நாட்டுக்கே உழைப்போம்

711. என்றும் தமிழ்மக்கள் யாவரும் ஒத்திணங்கி,
ஒன்றித்து நின்றால் உயர்வுண்டாம்; – அன்றெனில்,
மானம்போம், செல்வம்போம், மானிட வாழ்விற்
[குரிய
தானம்போம், யாவும்போம், தாழ்ந்து. 1

712. பண்டைத் தமிழர் பழம்பெருமை பாடிஇன்னும்
மண்டை யுடைத்து வருந்துவதேன்?– அண்டும்இக்
காலத்திற் கேற்றகல்வி கற்றுக் கடைப்பிடித்து
ஞாலத்தில் வாழ்ந்திடுவோம் நன்கு. 2

713. வாணிகம் செய்வோம் ; வயலிற் பயிர்செய்வோம் ;
காணரிய கைத்தொழிலும் கண்டு செய்வோம் -
[பேணிநம்
சந்தத் தமிழ் வளர்ப்போம் ; தாய்நாட்டுக்கே
[உழைப்போம் !
சிந்தை மகிழ்ந்து தினம். 3

714. தெய்வம் தொழுவோம் ; திருந்தத் தமிழ்கற்போம்
செய்வினையும் நன்ருகச் செய்திடுவோம் - ஐயமின்றி
எவ்வெவ் வறமும் இனிது வளர்த்திங்குச்
செவ்வையுற வாழ்வோம் தினம். 4

## 97. பிஜித் தீவுத் தமிழருக்கு

### வாழ்த்து

வெண்பா

715. தென்ஞடு விட்டேகித் தீவாந் தரத்தையெலாம்
பொன்ஞடாய் மாற்றிப் புரந்திடுவோர் - எந்நாளும்
ஓங்கும் அறிவால் உழைப்பால் பெரும்புகழைத்
தாங்கும் தமிழரே தாம். 1

வேறு

716. பொங்கு கடல் கடந்து - சென்றிப்
பூவுலகத் தினிலே
எங்கெங்கு வாழ்ந்தாலும் - தமிழர்
ஏக குலத்தவராம். 2

717. கோடரி மண்வெட்டி - கலப்பை
குந்தாலி ஏந்துவோரே
நாடெலாம் ஆளுகின்ற - உண்மை
நாயக ராவாரையா ! 3

718. பாழ் நிலத்தையெலாம் – திருத்திப்
பண்படுத்தி மக்கள்
வாழ் நிலமாகத் – தமிழர்
மாற்றிய தாரறியார் ? 4

719. இலங்கை சிங்கபுரம் – பிஜிமுதல்
இன்னும் பலவான
தலங்களின் செல்வம் – தமிழர்
தந்த செல்வமன்ரே ? 5

720. நாச அணுக்குண்டால் – நமக்கு
நன்மை ஏற்படுமோ ?
நேச மாய்நிதமும் – அஹிம்சை
நெறியைப் போற்றுவமே. 6

721. காந்தி மகான் சொன்ன – வழியைக்
கடைப்பிடிக்கு மந்த
மாந்தரே உலகில் – நல்ல
வாழ்வு பெறுவரையா ! 7

வெண்பா

722. ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால் – பூதலத்தில்
சிந்தைக் கினியபிஜித் தீவில் தமிழ்மக்கள்
சந்ததம் வாழ்க தழைத்து. 8

## 98. ஒற்றுமையே உயிர்நிலை

723. ஒற்றுமையாக உழைத்திடுவோம் – நாட்டில்
உற்ற துணைவராய் வாழ்ந்திடுவோம் ;
வெற்றுரை பேசித் திரிய வேண்டாம் – இன்னும்
வீணாய்ப் புராணம் விரிக்கவேண்டாம். 1

724. கூடி விருந்துண்ண வேண்டவில்லை - பெண்ணைக்
கொண்டு கொடுக்கவும் வேண்டவில்லை;
நாடி எவரொடும் நட்பினராய்த் – தேச
நன்மைக் குழைப்பதில் நஷ்டம் உண்டோ? 2

725. கீரியும் பாம்புமாய்ச் சண்டையிட்டு - சாதி
கீழென்றும் மேலென்றும் நாட்டிவிட்டு,
பாரதத் தாய்பெற்ற மக்கள் என்று - நிதம்
பல்லவி பாடிப் பயன் எதுவோ? 3

726. வேதன் முகத்தில் உதித்தவரே – இங்கு
மேலா யெழுந்த குலத்தினராம்!
பாத மதில்வந்த பாவியரே – என்றும்
பாரில் இழிந்த அடிமைகளாம்! 4

727. வாயில் விஷம்உண்டு பாம்பினுக்கு - கொட்டும்
வாலில் விஷம் உண்டு தேளினுக்கு;
தாயிற் சிறந்த பிரமனுக்கும் - இரு
தாளில் விஷம்உண்டோ? சாற்றுவீரே! 5

728. உச்சி மரத்திற் சுவைக்கனியும் - தூரில்
ஓடிப் பரந்தெழும் வேரதனில்
நச்சுக் கனியும் பழுத்த பலாமரம்
நானிலத் தெங்குமே கண்டதுண்டோ? 6

729. சாதி இரண்டலால் வேறுளதோ? - ஔவைத்
தாயின் உரையும் மறந்தீரோ!
ஆதி இறைவன் வகுத்ததுவோ? - மக்கள்
ஆக்கிய கற்பனை தான் இதுவோ? 7

730. நாயனர் வந்த திருக்குலத்தை - உயர்
நந்தனர் வந்த பெருங் குலத்தைத்
தீய குலம்எனத் தள்ளுவரேல் - அது
தெய்வம் பொறுக்கும் செயலாமோ? 8

731. வேதிய ராலே மழைவருமேல் - வயல்
வேலை செய்யாது விளைந்திடுமோ ?
வாத மெலாம்கட்டி வைத்திடுவோம் - ஒத்து
வாழ்வதை மேற்கொண் டுழைத்திடுவோம். 9

732. வீட்டுக்குள் சண்டைகள் போடுவதேன் ? - கூரை
வெந்து விழுவதும் கண்டிலிரோ ?
நாட்டுக்கு நன்மையை நாடுபவர் - இந்த
நாடகம் ஆடல் நகைப்பலவோ ? 10

733. மானமே வாழ்வின் உயிர்நிலையாம் - அதை
மாசுறச் செய்தல் கொடுங்கொலையாம் ;
ஈன சாதியெனும் பேச்சினைப்போல் - நெஞ்சை
ஈர்ந்திடும் வாளொன்று வேறுளதோ ? 11

734. மன்னுயிர்க் காக முயல்பவரே - இந்த
மானிலத் தோங்கும் குலத்தினராம் ;
தன்னுயிர் போற்றித் திரிபவரே - என்றும்
தாழ்ந்த குலத்தில் பிறந்தோர், அம்மா ! 12

## 99. தீண்டாதார் விண்ணப்பம்

'ஆண்டிப் பண்டாரம்' மெட்டு

735. விண்ணப்பஞ் செய்தோம் - விடையை
வேண்டிக் கொள்கின்றோம். 1

736. கண்ணப்பன் பூசைகொளும்
கடவுள் திருக்கோயிலிலே,
நண்ணக்கூடாதோ ? நாங்கள்
நடையில்வரல் ஆகாதோ ? 2

737. என்பிணையும் தோலிணையும்
ஏந்துகின்ற சிவபெருமான்
அன்பர்எமக் காலயத்தில்
அருள்செய்ய மாட்டாரோ ? 3

738. சிலந்திக்கும் வரம்அளித்த
சிவபெருமான் திருவடியை
நலம்பெறவே கண்டுநாங்கள்
நமக்கரித்தால் ஆகாதோ ? 4

739. பெற்றான்எனும் சாம்பானுக்குப்
பேறளித்த பெருமானை
வற்றாத அன்பொடு யாம்
வணங்குதலும் வழுவாமோ ? 5

740. நந்தனுக்குப் பதமளித்த
நடராசன் எங்களுக்கும்
சொந்தம்எனக் கூறுவதில்
சொல்லிழுக்கும் உண்டோ ? ஐயா ! 6

741. நந்தனுக்குப் பதமளித்த
நடராசன் கோயிலிலே,
வந்தனைகள் செய்துநாங்கள்
வழிபடுதல் முறை அலவோ ? 7

742. பண்ணமையப் பாடிவந்த
பறைச்சிக்கும் பரிசளித்த
கண்ணபிரான் திருவடி யாம்
கண்டுதொழல் ஆகாதோ ? 8

---

738. சிலந்திக்கு வரமளித்தது திருவானைக்காவில்; சிலந்தி கோச்செங்கட் சோழராகப் பிறந்தது என்பர்.

739. உமாபதி சிவாசாரியர் தில்லையிலே பெற்றான் சாம்பானுக்கு முக்தி கொடுத்தார்.

742. திருமால் பறைச்சிக்குத் திருக்குறுங்குடியிலே அருள் செய்தார்.

743. பார்ப்பார்கள் தோள் சுமந்து
பாணரைமுன் திருக்கோயில்
சேர்த்தார்கள் என்ற கதை,
தெரியாதார் உண்டோ ? ஐயா ! 9

744. கள்ளுடனே ஆடுகோழி
கலந்துண்ணும் காளிதேவி
உள்ளிருக்கும் கோயிலிலே
உரிமைஎமக் கிலையோ? ஐயா! 10

745. கள்ளுடனே ஆடுகோழி
கலந்துண்ணும் காளிதேவி
பள்ளர் எமைக் கண்டவுடன்
பயந்தோடிப் போவாளோ ? 11

746. காப்பாற்றி நமையாளும்
கடவுளரும் மக்களுள்ளே
பார்ப்பார்கள் பறையரென்றே
பகுப்பேதும் வைத்ததுண்டோ ? 12

747. கோவிலிலே தீட்டேறிக்
குடிபுகுமோ ? குளிப்பவரின்
பாவமெல்லாம் கங்கையிலே
படிந்திடுமோ ? கூறும், ஐயா ! 13

748. தேவிருக்கும் கோயிலிலே
சென்றுநமக் காரம்செய்து,
பாவமெல்லாம் போக்கில் எம்மைப்
பாரிடமும் தாங்காதோ ? 14

---

743. திருப்பாணாழ்வார் வரலாறு.

749. பூவாரம் அணிந்தபிரான்
பொன்னடிக்கீழ் நின்றெளியேம்
தேவாரம் பாடில் அவர்
செவிக்கின்பம் ஆகாதோ ? 15

750. பாவிகளை ஈடேற்றிப்
பதம்அளிக்கும் பரமசிவம்
கோவிலிலே எமைக்கண்டால்
குடிமுழுகிப் போய்விடுமோ ? 16

751. காணுதற்குக் கண்அளித்த
கடவுளடி கண்டுதொழ
வேணுமென்று மனிதருக்கும்
விருப்பமெழல் அதிசயமோ ? 17

752. அண்டம்எல்லாம் காக்கும் ஈசன்
ஆலயத்தில் மக்கள் எம்மைக்
கண்டகண்ணைக் கழுவுவரோ ?
கருணைசெய்ய மாட்டாரோ ? 18

753. தருமஉரு வாம் ஈசன்
தமியரையும் கண்டவுடன்,
கருணைவிழி அடைப்பாரோ ?
கனல்விழியைத் திறப்பாரோ ? 19

754. குற்றமிலா எமைக்கண்டு
கோயிலையும் அடைக்கலாமோ ?
பெற்றவரைக் காணவரும்
பிள்ளைகளைத் தடுப்பார் உண்டோ ? 20

755. ஆண்டவனைக் கண்டுதொழ
ஆசைஎமக் கெழுந்திடாதோ ?
நீண்ட மரஞ்செடியோ ? நாங்கள்
நெடும்பாறை தானோ ? ஐயா ! 21

756. பத்தியொடு கோயில்சென்று
பணிந்துபதம் பெறுவோமேல்,
முத்தியிடம் போதாமல்
முழுமோசம் வந்திடுமோ ? 22

757. வனத்தில்ஒரு மரமாக
வளர்ந்தோமிலை, மானிடரின்
இனத்தினிலே பிறந்தஇடர்
இனிப்போதும், போதும், ஐயா ! 23

758. தாகம்என்று வருபவர்க்குத்
தண்ணீரை அளியாமல்,
ஆகமங்கள் ஓதிநிற்றல்
அழகாமோ ? அறமாமோ ? 24

759. ஆலயத்திற் சென்றுதொழ
ஆணையிடும் ஔவைமொழி
ஞாலமிசை எங்களுக்கும்
நன்மைதராப் புன்மொழியோ ? 25

760. ஆவுரித்துத் தின்பரேனும்
அரனடிக்கீழ் அன்பர்எனில்
தேவர்அவர் என்றுரைக்கும்
திருமொழியும் வெறுமொழியோ ? 26

761. சாதியினால் குறைவில்லை ;
தாழ்ந்தவரும் பத்தியினால்
வேதியரிற் பெரியர்என
விளம்புமொழி வீண்மொழியோ ? 27

---

760. திருமொழி : அப்பர் தேவாரம்.

762. சண்டாளர் ஆனாலும்
சக்கரத்தான் அடியவரேல்,
கொண்டாடத் தக்கோர் எனக்
கூறுவதும் பொய்மொழியோ ? 28

763. சாவியிட்டுப் பூட்டுமிட்டுச்
சந்நிதியில் காவலிட்டுத்
தேவிருக்கும் கோயிலைநீர்
சிறைச்சாலை ஆக்கலாமோ ? 29

764. கல்லார்க்கும் கற்றவர்க்கும்
களிப்பருளும் களிப்பினை நீர்
பொல்லாதார் பொருளெனவே
பூட்டிவைப்ப தழகாமோ ? 30

765. நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நலமளிக்கும் நலத்தினை நீர்
கல்லாலே கோட்டைகட்டிக்
கடுங்காவல் செய்யலாமோ ? 31

766. காணார்க்கும் கண்டவர்க்கும்
கண்ணளிக்கும் கண்ணுதலை
வீணாக மூடிவைத்து
விளங்காமற் செய்யலாமோ ? 32

767. எல்லார்க்கும் வரமளிக்கும்
எம்பெருமான் ஆலயங்கள்
வல்லார்க்குச் சொந்தம்என
வழக்காடல் முறையோ ? ஐயா ! 33

---

762. கூறுவது : அஷ்டப் பிரபந்தம்.

768. சாத்திரங்கள் கண்டறியோம் ;
சரித்திரங்கள் படித்தறியோம் ;
சூத்திரங்கள் செய்யாமல்,
துணைசெய்ய வேண்டும், ஐயா ! 34

769. பதவியில்லை, பணமில்லை,
படிப்பேதும் இல்லை எமக்கு
உதவிசெய்ய உங்களுக்கு
உள்ளம் இரங்காதோ ? ஐயா ! 35

770. வையகத்தில் ஏழைகளும்
மானிடராய்ப் பிறந்துவிட்டோம் ;
உய்யவழி தேடுகின்றோம் ;
உதவிசெய்ய வேண்டும், ஐயா ! 36

771. வேண்டாத வாதம்இன்னும்
விளைப்பீரோ ? அடிகளையும்
தீண்டாமைப் பேய்க்கு உயிரைத்
தியாகமிடச் செய்வீரோ ? 37

772. நாடாளக் குடியரசு
நாடுவார் ஆலயத்தில்
நீடாகத் தனி அரசு
நிலைநாட்டத் துணியலாமோ ? 38

---

771. அடிகளையும் – காந்தியடிகளையும்.

## 100. ஹரிஜனர்க்காக வருந்தல்

மெட்டு :

["நினைப்ப தெப்போது நெஞ்சே—ஈசன் பதத்தை
நினைப்ப தெப்போது நெஞ்சே."]

773. இந்தப் பிறப்பு வேண்டாம் - இதுவொழிய
எந்தப் பிறப்பும் வரட்டும். 1

774. நொந்த புண்ணிலே எரி
பந்தம் இடுவது போல்
சந்ததம் ஹரிஜன
நிந்தனை செய்திடும் (இந்த) 2

775. ஜாதி வெறியினால் வி -
ரோதிக ளாகி மக்கள்
வீதி வருவதும் அ -
நீதி என உரைக்கும் (இந்த) 3

776. வழியில் விழுபவரைத்
தழுவி யெடாது படு -
குழியில் உருட்டிப் பெரும்
பழியை நிதமும் தேடும் (இந்த) 4

777. உண்ணீர் விரும்பி வீட்டை
நண்ணி ஒருவன் நின்று
கண்ணீர் விடினும் செம்பில்
தண்ணீர் அளித்திடாத (இந்த) 5

778. முங்கிக் குளிக்கக் குளம்,
தங்கி யிருக்க இடம்
எங்கு மிலா தெளியர்
பங்கப் படும் புவியில் (இந்த) 6

779. ஈசன் அடி பணிய
ஆசை வளர்ந்து வரும்
நேசர் தமைத் தடையும்
நீச நில மிதினில் (இந்த) 7

780. இட்ட சகோ தரரை
எட்ட விலக்கி நிதம்
கட்ட மிகப்ப டுத்தும்
துட்ட உலகு தனில் (இந்த) 8

781. சண்டிக் குதிரை மேலே
நொண்டித் துரை சவாரி
கொண்டது போலும் வாழ்வு
கண்டது போதும், ஐயா! (இந்த) 9

## 101. தீண்டாமைப் பேய்

ஆனந்தக் களிப்பு

782. தீண்டாமைப் பேய் அறிவீரோ? - அதன்
சேட்டைகள் முற்றும் தெரிந்திடுவீரோ? 1

783. பண்டுபண் டேயுள்ள பேயாம் - இந்தப்
பாரத நாட்டைப்பாழ் ஆக்கிய பேயாம்;
சண்டைகள் மூட்டிடும் பேயாம் - அது
சாத்திரி மார்பூசை கொண்டிடும் பேயாம். 2

784. பட்டப் பகல்வரும் பேயாம் - ஒரு
பக்கமே பார்க்கப் பழகிய பேயாம்;
முட்டிக் குனிந்திடும் பேயாம் - அது
முன்னேற்றம் கண்டு முடமாகும் பேயாம். 3

785. கண்ணிலே காணும்பேய், ஐயா ! - இரு
காலும் நிலத்தில் பதியும்பேய், ஐயா !
நிண்ணய மில்லாப் பேய், ஐயா ! - நடு
நீதி நெறிகாணு நீசப்பேய், ஐயா ! 4

786. கோவிலின் வாசற் படியில் - நிதம்
கும்மாளி கொட்டிக் குதித்தாடி நிற்கும் ;
வாவிக் கரையிலும் நிற்கும் - அங்கு
வந்த மனிதரை ஓட்டித் துரத்தும். 5

787. பிள்ளைமார் வீட்டிலும் தங்கும் - உயர்
பிராமணர் வீதியில் எங்குமே சுற்றித்
துள்ளி விளையாடி நிற்கும் - அவர்
சோமன் புடவைகளிற் சுற்றிக் கிடக்கும். 6

788. மண்கலத் துள்ளே இருக்கும் - அதில்
வைத்த பண்டத்தில் மறைந்தும்இருக்கும் ;
வெண்கலம் வெள்ளிபொன் கண்டால் - உடன்
வெட்கம் அடைந்து வெளியேறிப் போகும். 7

789. வேதக் கடலைக் கலக்கும் - அதில்
வேண்டும் விதிவலை வீசிப் பிடிக்கும் ;
சாதிப் பிளவை உண்டாக்கும் - எங்கும்
'சண்டாளர் !' 'சண்டாளர் !' என்றே முழக்கும். 8

790. வஞ்சம் பொறுமைகள் எல்லாம் - அதை
வட்டமாய்ச் சுற்றி வரும்பரி வாரம் ;
நெஞ்சம் நடுங்குதே, ஐயா ! - அதன்
நிட்டூரம் சொல்லி முடியாதே, ஐயா ! 9

791. கூடியிருக்க வொட்டாது - நண்பர்
கொண்டு தருவதை உண்ண வொட்டாது ;
தேடி வருவோரை அன்பாய் - வீட்டுத்
திண்ணையில் உட்கார வைக்க வொட்டாது. 10

792. தாகித்து வந்தவ ருக்குச் – செம்பில்
தண்ணீர் அளித்திடச் சம்மதி யாது;
சோகித்து வீழ்வோரைக் கண்டால் – தலை
தூக்கி வியர்வை துடைக்க ஒட்டாது. 11

793. கண்ணுதல் ஆலயம் சென்றால் – அங்கே
கையிற் பிரசாதம் போட வொட்டாது ;
எண்ணி வரையளந் திட்டே – அதற்கு
இப்புறம் அப்புறம் நில்லென் றதட்டும். 12

794. கப்பலில் ஏறிட அஞ்சும் – சில
காப்பிக் கடைஎட்டிப் பார்க்கவும் நாணும் ;
செப்பும் புகைவண்டி யுள்ளே – அது
சீற்றம் அடங்கி ஒடுங்கிக் கிடக்கும். 13

795. கண்ணன காந்தி மகானும் – இதைக்
கண்டு நடுங்கிக் கடவுளை வேண்டி,
உண்ணு திருந்தனர் என்றால் – இதன்
ஊக்கம் சிறிதும் உரைத்திடப் போமோ ! 14

796. முன்னம் பெரியோர் இதனை – வெட்டி
மூடிப் புதைத்தும், உயிர்வலி கொண்டு
பின்னும் முளைத்ததே, ஐயா ! – இது
பேய்களும் அஞ்சும் பெரிய பேய், ஐயா ! 15

797. பொல்லாத பேயிதை நம்பி – இன்னும்
பொங்கலிட் டாடுதல் புத்தியோ ? ஐயா !
நல்லாக வேண்டுமே யானால் – இதை
நாட்டைவிட் டோட்டித் துரத்துவோம், ஐயா ! 16

---

793. மலையாளத்திலுள்ள ஆலயங்களில் சில ஆண்டுகளுக்கு முன் காணப்பட்ட வழக்கம்.

798. இப்பெரும் பேய்இனி மேலும் - நமது
இந்திய நாட்டில் இருந்திட லாமோ ?
கப்பலில் ஏற்றுவோம், ஐயா ! - நடுக்
காயல் கடல்கண்டு தள்ளுவோம், ஐயா ! 17

## 102. மதுவிலக்குப் பாடல்கள்

வெண்பா

799. வள்ளலெங்கள் காந்திமகான் வாக்குப் பலித்ததடா !
துள்ளுமுன் பேயாட்டம் தொலைந்ததடா ! - [கள்ளரக்கா !
வஞ்சிவள நாட்டிலுன் வாழ்வற்றுப் போச்சுதடா !
நெஞ்சிலுணர்ந் தோடடா ! நீ 1

வேறு

800. கள்ள ரக்கா ! குலத்தொடு நீ
கப்ப லேறத் தாமதம் ஏன் ?
வள்ளல் எங்கள் காந்திமகான்
வாக்கு முற்றும் பலித்ததினி ;
எள்ளத் தனையும் உன்வாழ்வுக்கு
இடமிங் கில்லை, இல்லையடா !
தெள்ளத் தெளியச் சொன்னேன் நான்
தெரிந்து ஒழிந்து தொலைந்திடுவாய். 2

798. காயல் - கடலையடுத்த பெரிய ஏரி.

799. திருவாங்கூரில் மதுவிலக்குத் தொடங்கிய போது பாடியது.

800. இப்பாடல் 28-9-1947-ல் 'கல்கி' மதுவிலக்கு இதழில் பிரசுரமானது.

## 103. பிச்சைக்காரர் கும்மாளம்

801. ஆல மரத்தின் நிழலிதுவே - நல்ல
ஆயிரங் காலெழு மண்டபமாம் ;
சாலவே தங்கும் பறவையெலாம் - அதிற்
சங்கீதம் பாடிடும் பாடகராம். 1

802. ஊர்களி லுள்ள உழவர்களே - நமக்கு
ஓயா துழைத்திடும் ஊழியராம் ;
சாரும்இவ் வீடுகள் யாவையுமே - உண்ணச்
சாதம் சமைத்திடுஞ் சாலைகளாம். 2

803. பாரிற் பரந்த பொடிமணலுக்கு - எந்தப்
பஞ்சணை மெத்தை ஈடாகும், அடா !
காரும் பசானும் கரிந்திடினும் - ஒரு
காரிய மில்லை, அறிவாய், அடா ! 3

804. பட்டப் பகலை இரவென் றழைத்திடும்
பாழான சாத்திரம் ஏதுக்கடா !
கட்டிப் புளுகுங் கதைகளைக் - கேட்டிந்தக்
காதுபுண் ணானதும் கொஞ்சமோடா ! 4

805. கொக்கோ ! குருவியோ ! காக்கையோடா ! - நாமும்
கோழியோ ! ஆந்தையோ ! கூகையோடா !
மக்கள் இனத்திற் சேராதவரோ ? - உண்ண
வாயும் வயிறும் இலாதவரோ ? 5

806. சண்டிக் குதிரைமேல் நொண்டித் துரை - செய்யும்
சவ்வாரி போலும்இவ் வாழ்வதனில்,
உண்ட துடுத்ததை யன்றிநாம் - வேறெதும்
உண்மையாய்க் கண்டதும் உண்டோ ? அடா! 6

---

803. கார், பசான் - நெற்பயிர் வகைகள்.

807. கோட்டிலே ஜட்ஜி இருப்பதுவும் – வக்கீல்
கொட்டி முழக்கிநின் றுடுவதும்,
கூட்டிலே கள்ளன் நடுங்குவதும் – இந்தக்
கும்பி செயுஞ்செயல் அல்லவோடா ? 7

808. உண்டு வயிறு நிறைந்துவிட்டால் – உடன்
உள்ளக் கவலை ஒழிந்ததடா !
மண்டை யுடைத்து வழக்குகள் – பேசி நாம்
வாணாளை வீணாளாய்ப் போக்கோம், அடா ! 8

809. மஞ்சள் சிவப்புத் துணியணிவோம் – பஞ்ச
வர்ணக் கிளிகளைப் போல்நடப்போம் ;
வஞ்சனை சூதுகள் செய்யமாட்டோம் – கோர்ட்டு
வாசலை எட்டி மிதிக்கமாட்டோம். 9

810. ஆதி சிவனுமோர் ஆண்டி, அடா ! – அவர்க்கு
அன்பான பிள்ளைகள் நாமே, அடா !
ஓதுமெய்ஞ் ஞானியர் யாவருமே – நமக்கு
உற்ற உறவினர் ஆவார், அடா ! 10

811. லட்சமும் கோடியும் வேண்டாம், அடா ! – அதை
ரட்சிக்க நம்மாலே ஆகுமோடா !
அட்சய பாத்திரம் உண்டே, அடா ! – நமக்கு
ஆரே நிகர்இவ் வுலகில் ? அடா ! 11

## 104. செல்வமும் சிறுமையும்

### 1. செல்வச் சிறுமியர் களிப்பு

812. பாகமாகச் செய்த பண்டம் உண்போம் – நன்றாய்ப்
பக்குவம் வந்த பழங்கள் உண்போம் ;
தாகமா றல்பல பானகமும் – தாயார்
தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம். 1

813. காலத்துக் கேற்ற உடையணிவோம் - வாசம்
கட்டிய சந்தனம் பூசிடுவோம் ;
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து - மலர்
கூந்தலிற் சூட்டி அழகுசெய்வோம். 2

814. பந்துகள் ஆடிப் பழகிடுவோம் - கழல்
பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம் ;
சந்தம் எழக்கும்மி பாடிடுவோம் - சுற்றிச்
சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம். 3

815. ஓடி ஒளித்துக் களித்திடுவோம் - நாங்கள்
ஒற்றை இரட்டையும் வைத்திடுவோம் ;
நாடியே வட்டுகள் ஆடிடுவோம் - தோழி
நாணக்கண் பொத்தி நகைத்திடுவோம். 4

816. உன்னி யெழும்ஊஞ்சல் ஆடிடுவோம் - கேட்போர்
உள்ளம் குளிரவே பாடிடுவோம் ;
சின்னஞ் சிறுவீடு கட்டிடுவோம் - அதில்
சித்திர வேலைகள் செய்திடுவோம். 5

817. பத்துப் பசுக்கள்எம் வீட்டில் உண்டு - நல்ல
பாலுக்கு யாதொரு பஞ்சமில்லை ;
நித்தம் சுகமாக வாழ்ந்திடுவோம் - இந்த
நீணிலத் தெம்மையொப் பாரும் உண்டோ ? 6

### 2. ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம்

818. நல்லபண் டங்களைக் கண்டறியோம் ; - ஒரு
நாளும் வயிறுர உண்டறியோம் ;
அல்லும் பகலும் அலைந்திடுவோம் - பசி
ஆற வழியின்றி வாடிடுவோம். 7

819. அன்னப்பால் காணாத ஏழைகட்கு - நல்ல
ஆவின்பால் எங்கே கிடைக்கும், அம்மா !
என்னப்பா ! யாம்படும் பாட்டையெல்லாம் - சென்று
யாரிடம் சொல்லி அழுவோம், அம்மா ! 8

820. இட்டெலி ஐந்தாறு தின்றோம்என்பீர் - நீங்கள்
ஏதும் கருணை யிலீரோ ? அம்மா !
பட்டினி யாக இறந்திடினும் - நாங்கள்
பாவம் பழிசெய்ய மாட்டோம், அம்மா ! 9

821. தேயிலை தேயிலை என்பீர், அம்மா ! - இது
தேக்கிலை தானோ தெரியாதம்மா !
வாயும் வயிறும் நிறைந்திடுமோ ? - இதில்
வைத்த அமுதும் திகைந்திடுமோ ? 10

822. காப்பி காப்பியென்று கத்துவீரே - அதைக்
கண்ணாலே கண்டதும் இல்லை, அம்மா !
சாப்பிடற் கேற்ற உணவிதுவோ ? - அன்றிச்
சட்டையோ! தொப்பியோ! கூறும், அம்மா? 11

823. ஆனைக் கொம்பன் சாதம் உண்டோம் என்பீர்-இதை
ஆரே உலகினில் நம்பிடுவார் ?
தேனைப் பழித்த மொழியுடையீர் ! - எம்மைத்
தேராத பித்தர்என் றெண்ணினீரோ ? 12

824. சோப்புச் சோப்பென்று புகழ்ந்திடுவீர் - அது
சுட்டுக் கடிக்குங் கிழங்கதுவோ ?
காப்புக் கைவீசி நடப்பவரே - அதன்
காரியம் சற்றே உரைப்பீரே ! 13

825. ஆனி ஆடிமாதக் கொந்தலிலே - மந்தை
ஆடுகள் போலக் கொடுகிநிற்போம் ;
வேனிலில் வெந்துடல் வேர்த்திடவே - வெயில்
வேளை அலைந்து திரிந்திடுவோம். 14

---

820. இட்டெலி ஒரு பலகாரவகை என்றறியாமல், ஒரு எலிவகை என்று எண்ணிச் சிறுமியர் கூறுகிறார்கள்.

826. சுற்றிய கந்தை ஒருமுழமாம் - அதில்
தோன்றிய பீறலும் ஆயிரமாம் ;
பற்றும் அழுக்கினைப் போக்க வென்றால் - உடை
பஞ்சு பஞ்சாகப் பறக்கும், அம்மா ! 15

827. ஈரொடு பேனுக்கு இடமாச்சு - கூந்தல்
ஈந்தஞ் செடியது போலாச்சு ;
வாரி முடிப்பதும் இல்லை, அம்மா ! - எண்ணெய்
மாதம் மூன்றாக அறியாதம்மா ! 16

828. புண்ணும் சிரங்கும் நிறைந்ததம்மா ! - அதில்
போட மருந்தும் கிடையாதம்மா !
கண்ணில் உறக்கமும் இல்லை, அம்மா ! - எங்கள்
கஷ்டம் அறிபவர் உண்டோ ? அம்மா ! 17

## 105. யுத்தக் கொடுமை

[இரண்டாம் உலக யுத்தம் 1939-ஆம் வருடம் தொடங்கி 1945-ஆம் வருடம் வரையில் நிகழ்ந்தது. இந்த யுத்தத்தில் ஜப்பானியர் சிங்கப்பூரையும் பர்மா தேசத்தையும் கைப்பற்றிக் கொண்டார்கள். இதனால், அப்பொழுது ஆங்கில அரசாங்கத்திற்கு உட்பட்டிருந்த நம் தேசத்தோடு அத் தேசங்கள் தொடர்பின்றி யிருந்தன. அச்சந்தர்ப்பத்தில் யுத்தக் கொடுமை காரணமாகத் தேசம் இருந்த நிலையைக் கண்டு ஓர் ஏழை பிரார்த்தனை செய்வதாக இப்பாடல் அமைந்துள்ளது.]

829. மேலை நாட்டில் எங்கோ - மூண்ட
வெந்தழல் இன்றெழுந்து
ஞாலம் முழுவதுமே - பற்றி
நாவிட் டெரியுதையோ ! 1

830. நாலு திசையும் சண்டை - கடலின்
நடுவில் எங்கும் சண்டை ;
மூலபலச் சண்டை - இதுதான்
முடியும் நாள் எதுவோ ? 2

831. விண்ணிடி போல விழும் – குண்டுகள்
வீழ்ந்து பொசுக்கிடாமல்,
மண்ணுக்குள் நண்டுகள்போல் – மனிதர்
மறைவ தெளிதோ ? ஐயா ! 3

832. சிங்கபுரம் போச்சு – பர்மா
தேசமும் பாழாச்சு ;
தங்கிடம் காணாமல் – மக்கள்
தத்தளிக்கின்றார், ஐயோ ! 4

833. போரில் எழுந்த பஞ்சம் – பாரத
பூமியைத் தாக்குதையோ !
நேருங் கொடுமையெல்லாம் – நினைக்க
நெஞ்சு துடிக்குதையோ ! 5

834. குடிக்கக் கூழுமில்லை – அடுப்பைக்
கோழி கிண்டுதையா !
இடுப்புத் துணிக்குநான் – படும்பாடு
யாவர் அறிவார் ? ஐயா ! 6

835. எண்ணெய் கிடையாமல் – வீடும்
இருளடையுதையா !
தண்ணீர் விளக்கெரிக்கும் – தெய்வ
சக்தி எமக்கும் உண்டோ ? 7

836. குழந்தை பசித்தழுதால் – தாயும்
கூட அழுவதல்லால்,
எழுந்த பசியாற்ற – வீட்டில்
எப்பொருள் உண்டு ? ஐயா ! 8

---

832. சிங்கபுரம் – சிங்கப்பூர்.

837. ஆழி கடந்துவந்த - ரெங்கூன்
அரிசிச் சரக்கை நம்பி
வாழலாம் என்றிருந்தோம் – இன்று
வயிறு காய்ந்துநின்றோம். 9

838. சீனத்துப் பட்டெங்கே ? - உயர்ந்த
சீமைத் துணிகள் எங்கே ?
மானத்தைக் காக்க இந்நாள் - எந்த
மல்பீஸைக் கண்டோம், ஐயா ? 10

839. பேச வலியும்இல்லை - கொண்ட
பிணிக்கு மருந்தும் இல்லை ;
காசெதும் கையில்இல்லை - கேட்டால்
கடன்தரு வாரும்இல்லை. 11

840. தேசத் தலைவரெல்லாம் - இன்று
சிறையில் வாடுகின்றார் ;
நாசக் களரியாகி - நாடு
நடு நடுங்குதையோ ! 12

841. என்ன செய்திடுவோம் ? - தெய்வமே
எவ்விடம் போய்ப் பிழைப்போம் ?
உன்னருள் அல்லாமல் – எமக்கிங்கு
உதவி வேறும் உண்டோ ? 13

842. பண்டம் மலியவேண்டும் - எங்கும்
பயிர் செழிக்க வேண்டும் ;
சண்டைகள் ஓயவேண்டும் - எவரும்
சகோதரர் ஆகவேண்டும். 14

843. குடியரசு வேண்டும் - சுதந்திரக்
கொடி பறக்கவேண்டும் ;
அடிமை வாழ்வும்இனி - உலகில்
அற வொழியவேண்டும். 15

844. இந்த வரங்களெல்லாம் - ஈசா !
இரங்கி அளித்திடுவாய்
சந்ததம் உன்பதமே - போற்றித்
தலை வணங்கு கின்றேன். 16

## 106. தொழிலாளியின் முறையீடு

845. பாடு படுபவர்க்கே - இந்தப்
பாரிடம் சொந்தமையா !
காடு திருத்தி நல்ல - நாடு
காண்ப தவரலவோ ? 1

846. மந்திர மோதுவதால் - எங்கும்
வயல்வி ளைவதுண்டோ ?
தந்திரப் பேச்சாலே - அரிசி
சாத மாயிடுமோ ? 2

847. கட்டும் ஆடையாகப் - பருத்தி
காய்த் தளிப்ப துண்டோ ?
சட்டி பானையெலாம் - மண்ணில்
தாமே எழுவதுண்டோ ? 3

843. இப்பாடல் நம் பாரதநாடு சுதந்திரம் பெறும் முன்பு பாடியது. இங்குக் கவிஞர் வேண்டியபடியே 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் தேதி நம் பாரத நாட்டில் சுதந்திரக் கொடி பறந்தது ; பின் 1950-ஆம் வருடம் ஜனவரி 26-ஆம் தேதி முதல் குடியரசாகவும் அமைந்துவிட்டது.

848. உழுது பயிர்செய்வோன் - வயிற்றுக்
குணவு பற்றாமல்,
அழுத ழுதுநிதம் - நிற்ப
தறியீ ரோ ! ஐயா ! 4

849. ஆடை நெய்திடுவோன் - போர்க்கும்
ஆடை யில்லாமல்
வாடை கொண்டுநிதம் - கிடந்து
வருந்த லாமோ ? ஐயா ! 5

850. வீடு கட்டுமொரு - கொத்தன்
விடுதி யில்லாமல்,
ஆடு மாடுகள்போல் - உலகில்
அலைய லாமோ ? ஐயா ! 6

851. கோடி கோடியாக - நீங்கள்
குவித்திடும் லாபம்
வாடும் எம்மக்கள் - உண்ணு
வயிற்றுச் சோறலவோ ? 7

852. மனம் திரியாமல் - காலை
மாலை யெப்பொழுதும்
குனிந்து வேலைசெய்வோர் - கும்பி
கொதிக்க லாமோ ? ஐயா ! 8

853. வாழவேண்டுமெனில் - தொழில்கள்
வளர வேண்டுமையா !
ஏழை என்றொருவன் - உலகில்
இருக்க லாகாதையா ! 9

## 107. வேலையில்லாத் திண்டாட்டம்

### ஒரு பண்டிதன் பாடுவது

854. சாத்தி ரங்கள் சரிதங்கள் மன்னவர்
கோத்தி ரங்கள் குலங்கள் இலக்கண
சூத்தி ரங்கள் தொகுத்து விரித்துநான்
ஆத்தி ரத்தோடு கற்ற தளவுண்டோ ? 1

855. மண்ணில் உள்ளவும் வானகத் துள்ளவும்
எண்ணி எண்ணி எழுதிய நூலெலாம்
நுண்ணி தாக நுழைந்து தெரிந்தவை
கண்ணி யம்பெறு காலம்எக் காலமோ ? 2

856. பட்டம் பெற்றனன் ; பண்டிதர் தம்மிடம்
மட்டி லாத மதிப்புரை வாங்கினன் ;
துட்டி லாது சுழன்று கறங்கும்இக்
கட்டம் நீங்கு வழிஇனும் கண்டிலேன். 3

857. வீடு விற்றும், விளை நிலம் விற்றும், மாடு
ஆடு விற்றும், அணிமணி தாம்விற்றும்,
பாடு பட்டுப் படித்த படிப்பெலாம்
வாடும் என்பசி மாற்றிய தில்லையே. 4

858. ஆயும் மேலதி காரிகள் வாழும்அக்
கோயில் தோறுங்கை கூப்பித் தொழுதனன் ;
ஓயும் நெஞ்சுக் குறுதிசொல் வார்இலை ;
ஏயும் என்விதிக் கென்செய்கு வேன் ? ஐயா ! 5

859. நெஞ்சில் நூலை நினைப்பது விட்டு, இனிப்
பஞ்சின் நூலிற் பழகத் துணிகுவன் ;
கெஞ்சு வாழ்க்கையும் கேடும் ஒழியுமே ;
விஞ்சு செல்வமும் மேன்மையும் தங்குமே. 6

## 108. சர்வாதிகாரி

860. தேடித் தேடி இரைகிடை யாதொரு
சிங்க வேறு முழங்கும் முழக்கினில்
பாடும் இன்னிசை கேட்டிட லாம்; அதன்
பார்வை தன்னில் இரக்கமும் பார்க்கலாம்!
வாட வாயில் வயிற்றில் அடித்தெமை
வானின் மீன்களை எண்ணிட வைத்தவன்
நீடு வஞ்சகன் செய்த கொடுமைஇந்
நெஞ்சில் ஆறுதல் காண்ப தரிதரோ. 1

861. உண்ணச் சோறும் உடையும் அளித்தனம்;
உதிரம் விட்டுஅவன் போர்களை வென்றனம்;
எண்ணி லாப்பல நாடுக ளுக்கெலாம்
இறைவ னுக்கி முடியையுஞ் சூட்டினோம்;
பண்ணு தற்கரி தான பலபல
பணிகள் செய்தவன் சீர்த்தி வளர்த்தனம்;
நண்ணும் நன்றி இலாதவன் இன்றொரு
நச்சு வாய்அர வாகிவிட் டான்ஐயோ! 2

862. பஞ்சத் தாண்டியாய் வந்தஅப் பாதகன்
பாரில் நம்முளம் நையப் படுத்தினால்,
கெஞ்சிக் கெஞ்சித் திரிந்த அடியவன்
கேலியாய் நம்மை நாய்கள்என் றெள்ளினால்,
தஞ்சம் நீர்என் றடைந்தவன் மாறிநம்
தலையில் ஏறி மிதிக்கத் தொடங்கினால்,
அஞ்சி அஞ்சி அடங்கிக் கிடப்பதோ?
ஆண்மை மிக்கவ ராக எழுவிரே! 3

# தேசீயம்

---

## 109. தேசக் கொடியின் சிறப்பு

வெண்பா

863. தேசக் கொடியின் சிறப்பைச் சிறிதேஇங்கு
ஆசைப் பெருக்கால் அறைகின்றேன் – மாசிலா
வீரரைப் பெற்று விரிந்த புகழ்பெற்ற
பாரதத் தாயைப் பணிந்து. 1

வேறு

864. பாரில் உயர்ந்தமலை இமயமலை – அன்னை
பாரத தேவி பாராட்டுமலை ;
சீரில் உயர்ந்திடுநம் தேசக்கொடி – அதன்
சிகரம் அணிந்தின்று பறக்குதுபார். 2

865. வீரர் துணிந்தேறி நட்டகொடி – இது
வெற்றி விருதா யெடுத்தகொடி ;
யாரும் இறைஞ்சி வணங்கும்கொடி – நமக்கு
என்றும் சுதந்திரம் ஈட்டும் கொடி. 3

866. கங்கையினும் புனித மானகொடி – கோடிக்
கதிரின் இனியமணம் கமழும்கொடி ;
மங்கையர் நோன் பிருந்து நெய்தகொடி – அவர்
வாழ்வு தழையவந்த மங்கலக் கொடி. 4

867. மின்னல் இடிக்கும் அஞ்சாதுயருங்கொடி–விண்ணில்
வீரர் திலகர்தொழும் விருதுக்கொடி ;
தன்னை மிதித்தெறிந்த சூரர்களெல்லாம் – இன்று
தாழ்ந்து தலைவணங்கக் காணும்கொடி. 5

868. சத்தியம் தவருது காக்கும்கொடி – சாதிச்
சமயச் சழக்குகளைப் போக்கும்கொடி ;
உத்தம வீரர்களும் பத்தினிகளும் – தத்தம்
உயிருக் குயிராகப் போற்றும்கொடி. 6

869. கலியுகக் கண்ணன் கருணாகரன் – அந்தக்
காந்தி மகான்வாழ்த்தி யெடுத்தகொடி ;
புலியொடு பசுவுஞ்சென் றோர்துறையில் – மனம்
பொருந்திநீர் அருந்திடச் செய்யும்கொடி.

870. காணாப் புதுமைகளைக் காட்டும்கொடி – தொண்டர் 7
கனவையும் நனவாக மாற்றும் கொடி ;
வாணாளின் இன்பமெலாம் வழங்கும்கொடி–நாட்டின்
வளத்தை வளர்க்கவந்த மந்திரக்கொடி. 8

871. பட்ட மரம்தழையப் பண்ணும்கொடி – பொல்லாப்
பகைவரை நண்பராய்க் கூட்டும்கொடி ;
துட்டர் துடுக்குகளை அடக்கும்கொடி – தீய
சோம்பலை ஓட்டித் துரத்தும்கொடி. 9

872. கிழவரைக் குமரராய்த் தேற்றும்கொடி – எந்தக்
கேட்டிலும் நன்மையே நாடும்கொடி ;
அழுதவாய் சிரித்திடப் பார்க்கும்கொடி – ஏழை
அடிமையை ஆண்டானா யாக்கும்கொடி. 10

873. செய்யாத் தவங்கள் சிறைச் சாலையிற் செய்தோர்க்
சிறந்த வரமளிக்கும் தெய்விகக்கொடி ; [கின்று
ஐயோஎன் றடிபட்டு விழுந்தவர்தம் – நோய்
அகற்றுசஞ் சீவினியாய் அமைந்தகொடி. 11

874. ஏழை அழுத கண்ணீர் துடைக்கும்கொடி – அவன்
இதயம் குளிரஇன்பம் பொழியும்கொடி ;
ஊழையும் உப்பக்கம் காணும்கொடி – நித்தம்
உழைத்துமுன் னேறநம்மை ஊக்கும் கொடி. 12

875. ராட்டின மல்லாது வேறுபடை – இந்த
நாட்டினுக் கில்லையென்று நாட்டும்கொடி ;
ஈட்டிவாள் குந்தங்கள் பீரங்கிகள் – இருந்
திருந்து துருவேறச் செய்யும்கொடி. 13

876. ஊக்கத்தை உள்ளத்தில் ஊட்டும்கொடி - தேச
ஊழியம் செய்திடத் தூண்டும்கொடி ;
ஆக்கமெலாந் தேடிச் சேர்க்கும்கொடி - நம்மை
ஆண்சிங்க மாகவே ஆக்கும்கொடி. 14

877. நாடு நமதாகக் கண்டகொடி - அதை
நாமே அரசாள வைத்தகொடி ;
வீடு நமதென்று வீரம்பேசி - இன்று
வெற்றி முரசறையச் செய்த கொடி. 15

878. ஓட்டுக் குடிசையின்மீ தாடும்கொடி - உயர்ந்து
ஓங்கிய மேடையின்மீ தேறும் கொடி ;
சட்ட சபைகளிலே தழையும்கொடி - அங்கே
தங்கும் பெரியோர்மேல் படரும்கொடி. 16

879. மானம் உருவாக வந்தகொடி - இதை
மாசுறச் செய்வது பாவம், பாவம் ;
ஊனில் உயிருள்ள காலமெல்லாம் - மிக
ஊக்கமாய் நின்றுநாம் காத்திடுவோம். 17

வேறு

880. காரிருள் நீங்குகவே !
காந்திமதி நிலவுகவே !
பாரில் அறம் பெருகுகவே
பயிர்களெல்லாம் செழித்திடவே ! 18

## 110. காங்கிரஸ் கப்பல்

881. இமய மலைமுதல் குமரிவரை - வாழும்
யாவரும் யாத்திரை செய்யும்கப்பல் ;
சமயக்கடல் சாதிக் கடல்களெல்லாம் - சற்றும்
சாய்ந்து சரியாது நீந்தும் கப்பல். 1

882. பொறுமையாம் நங்கூரம் தாங்கும்கப்பல் – தேசப்
பொதுநலம் சுக்கானாய் ஓங்கும்கப்பல் ;
வறுமை யறநீக்கி வெல்லும் கப்பல் – நல்ல
வாய்மையாம் பாய்கட்டிச் செல்லும்கப்பல். 2

883. ஆண்டுகள் ஐம்பது கண்டகப்பல் – புயல்
ஆயிரத் துக்கீடு நின்றகப்பல் ;
வேண்டும் வளந்தேடிச் சேர்க்கும்கப்பல் – என்றும்
வெற்றித் திசைநேரே நோக்கும்கப்பல். 3

884. வீரர் திலகர்கள் செய்தகப்பல் – நெஞ்சில்
விளைந்த வயிரத்தால் ஆனகப்பல் ;
பாரத மாதா பாராட்டும்கப்பல் – இன்று
பாபுரா ஜேந்திரர் ஓட்டும்கப்பல். 4

885. தீமைக் கடலெல்லாம் தாண்டவேண்டும் – எல்லாத்
தெய்வங்களும் கூடிக் காக்கவேண்டும் ;
சேமத் துறைசென்று சேரவேண்டும் – அங்கே
செயக்கொடி கட்டித் திகழவேண்டும். 5

## 111. கதர் விற்பனை

886. பாவியென் கதையினைக் கேளும் , ஐயா ! – அந்தப்
பாஞ்சாலி கதையும்ஈ தொக்குமோ ? ஐயா !
ஆவியைப் பிடித்துநான் அலைவதெல்லாம் – என்றன்
அருமைக் குழந்தைகளுக் காகவே, ஐயா ! 1

887. கூடப் பிறந்தவரும் மாண்டுபோனார் – என்னைக்
கொண்ட கணவரும்போய்க் காடு மறைந்தார் ;
தேடி அவரளித்த பொருளுமில்லை – ஒரு
செம்பால் அடித்தகாசென் கையிலும் இல்லை. 2

888. வாடி முகம்சடைத்த மக்களும் உண்டு – தீரா
வயிற்றுப் பசியும்உண்டு நானும் உண்டு ;
வீடும் குடியிருக்க இல்லை, ஐயா ! – என்றன்
விதியின் கொடுமைகளும் கொஞ்சமோ ? ஐயா ! 3

889. பருத்தி விளைக்குச்சென்று பஞ்சுவாங்கினேன் – அந்தப்
பஞ்சை அரைத்துநல்ல நூலும்நூற்றேன் ;
ஒருத்தி துணையுமின்றி ஆடையும்நெய்தேன் – அதை
ஊரூராய்க் கொண்டுகொண்டு விற்கவும் வந்தேன்.

890. நல்ல சரக்குச்சீமைச் சரக்கென்றுநீர் – இந்த
நாட்டுச் சரக்கைப் பழிக்கலாமோ ?
மெல்லிய பூவாடை நெய்துதருவோம் – உங்கள்
மேலான ஆதரவே வேண்டும், ஐயா ! 5

891. எங்களையோர் மில்லெனவே எண்ணலாமோ ? – அந்த
இரும்புக்கு அசதிஉண்டோ ? களைப்பும்
[உண்டோ ?
பொங்கு மனக்கவலை ஏதும் உண்டோ ? – வீட்டுப்
பொறுப்புகள் சற்றும் உண்டோ ? கூறும், ஐயா ! 6

892. நெல்லையள்ளிக் குத்துவேனோ? நெய்திடுவேனோ?–நான்
நெருப்பினை மூட்டுவேனோ ? கொட்டை
[நூற்பேனோ ?
மில்லினுக்கு வாயும்உண்டோ ? வயிறுமுண்டோ ? –
[அதை
விட்டுவில காதமக்கள் கூடவே உண்டோ ? 7

893. பஞ்சினையான் பன்னுவேனோ ? பணிசெய்வேனோ ? –
[இந்தப்
பசலை அழாதபடி பால்கொடுப்பேனோ ?
நெஞ்சிரக்கமுள்ளவரே கொஞ்சம் பொறுத்தால் –
[இன்னும்
நேரியநல் லாடைநெய்து கொண்டு வாரோமோ ?

894. அஞ்சு வயதுமகள் கோலம் இட்டால் – அதை
அழகில்லை என்றழிக்கும் தாயரும் உண்டோ ?
பஞ்சு படுவதிலும் பெரும்பாடு – நாங்கள்
படுவதும் நீங்கள் அறி யாததோ ? ஐயா ! 9

895. காசுமியர் சால்வை நெய்த கையும் இல்லையோ? – உயர்
காசியிலே நெய்தபட்டின் காலமும் போச்சோ ?
மாசிலாத டாக்காவின் மஸ்லினுடை – இன்னும்
வாவென்றால் வாராதோ ? வளர்ந்திடாதோ ? 10

896. அன்னிய நாடுகளுக் காடையனுப்பி – மானம்
அழியாமல் காத்ததுங்கள் முன்னோர் அல்லவோ ?
இந்நிலை மறந்துநீங்கள் இந்தநாளில் – உங்கள்
இடுப்புத் துணிக்குஅலைவ திழிவல்லவோ ? 11

897. சாயமிட்ட சேலைகளை நெய்துதாராமோ ? – நல்ல
சரிகையில் வேலைசெய்து கொண்டுவாரோமோ ?
நேயமெழ ஆதரித்தால் போதும், ஐயா ! – இந்த
நீணிலத்தில் வெற்றியொடு நிற்போம், ஐயா ! 12

898. கைகால் களைக்கநெய்த கதராடை – இரு
கண்கள் சடைய நெய்த கதராடை ;
ஐயா, நீர் வாங்கியிதை அணிவீரோ ? – எங்கள்
அரும்பசிக்கு அன்னம் ஏதும் அளிப்பீரோ ? 13

899. குறுக்கு முறியநெய்த கதராடை – கும்பிக்
கொதிப்பை அடக்கிநெய்த கதராடை ;
மறுத்துநீர் தள்ளாமல் கொள்ளுவீரோ ? – எங்கள்
வயிற்றில் எரிதணியச் செய்குவீரோ ! 14

900. தேசமெல்லாம் புகழ்ந்திடும் ஆடை, ஐயா ! – மேலைச்
சீமையையும் நடுக்கிடும் ஆடை, ஐயா !
காசுபணம் இல்லாத ஏழைகளுக்காய் – அந்தக்
காந்திமகான் போற்றும்காம தேனு, ஐயா ! 15

901. வேறுவேறு புண்ணியங்கள் செய்யவேண்டுமோ ? - [கதர்
வேட்டிவாங்கி அணிவது போதாதோ ? ஐயா !
நூறுபேருக் கன்னம்நிதம் அளித்தபலன் - இந்த
நூலாடை கட்டுபவர்க் குண்டே, ஐயா ! 16

## 112. வட்ட மேசை மகாநாடு

[குறத்தி குறி : ' ஆண்டிப் பண்டாரம் ' மெட்டு]

902. குறத்திப் பெண்ணே நீ - எனக்கோர்
குறியுரைப்பாயோ ? 1

903. வட்டமேசை மகாநாடு
மங்களமாய் முடிந்திடுமோ ?
திட்டமாகச் சுதந்திரத்தின்
தீர்மானம் பழுத்திடுமோ ? 2

904. கற்றவர்கள் பெரியோர்கள்
கப்பலேறிச் சென்றவர்கள்
வெற்றிகொண்டு வருவாரோ ?
வெறுங்கையாய்த் திரும்புவரோ ? 3

905. இந்து மக்கள் மகமதியர்
இணங்கிமனம் பொருந்துவரோ ?
பந்தமறக் கோட்டைக்குள்ளே
படைகள் வெட்டி நிற்பாரோ ? 4

906. ஒட்டிவரும் இந்துமுஸ்லிம்
ஒற்றுமையும் உறுதியாமோ ?
மொட்டைத்தலை குடுமியோடு
முடிக்க முயன்றது வாமோ ? 5

---

903. 1932—ல் லண்டனிலே நிகழ்ந்த இரண்டாவது வட்ட மேஜை மகாநாடு.

905. 'கோட்டைக்குள் படைவெட்டு' என்பது ஒரு பழமொழி.

907. மன்னவர்கள் இசைவாக
வருவாரோ ? மாறி அவர்
தந்நயமே கருதிநம்மைத்
தனிவழியே விடுவாரோ ? 6

908. தீதான அடிமைநிலை
தீர்ந்திடவே நம்மவர்கள்
வாதாடிச் செயிப்பாரோ ?
வாய்பேசா திருப்பாரோ ? 7

909. சர்ச்சிலிடும் கர்ச்சனையில்
தளர்ந்து மனம் சடைவாரோ ?
மெச்சிடவே இந்தியரும்
வீரமொழி பகர்வாரோ ? 8

910. உபசார விருந்துகளால்
ஊக்கமெலாம் உடைந்திடுமோ ?
அபசாரம் இந்தியர்கள்
அணுகாமல் காப்பாரோ ? 9

911. புஞ்சிரிப்பில், கைகுலுக்கில்,
புத்திமிக மயங்கிடுமோ ?
நெஞ்சிருப்பை நம்மவரும்
நிறைவேற்றி வருவாரோ ? 10

912. இரைந்தழுது பட்டதெல்லாம்
இந்தியர்தம் உள்ளத்தில்
கரைந்திடுமோ ? இந்நாளில்
கனலாகி மூண்டெழுமோ ? 11

913. மாதரசி சரோசினியார்
வாக்குநயம் பலித்திடுமோ ?
மூதறிஞர் மாளவியா
முயன்றதவம் முற்றிடுமோ ? 12

914. சீக்கிரமாய்க் காந்திமகான்
செயக்கொடியும் கட்டுவரோ ?
ஊக்கமுடன் இந்தியரும்
உளம்மகிழ்ந்து வாழ்வாரோ ? 13

915. குறித்திப் பெண்ணேநீ - எனக்கோர்
குறியுரைப்பாயோ ? 14

## 113. சுதந்திரம்

வெண்பா

916. பக்தியொடு தெய்வம் பணிந்திடுவோம், பாரதத்தாய்
சித்தம் களிப்படையச் செய்திடுவோம்-ஒத்துழைத்துப்
பெற்ற சுதந்திரத்தைப் பேணிடுவோம், பேருலகில்
நற்றவம் ஈதால் நமக்கு. 1

வேறு

917. மாதவம் செய்து பெற்ற
மந்திர வாளைக் கொண்டு
வேதனை மிகுந்திடத் தன்
மெய்யினை அரிவ தொக்கும்,
கோதிலாச் சுதந்தி ரத்தால்
குணம்பெரு தென்றும் நாட்டில்
வாதினைப் பெருக்கிச் சண்டை
வளர்ப்பவர் செய்கை, அம்மா ! 2

## 114. உழைக்க வேண்டும்

918. மன்னும் சுதந்திரத்தை - நாட்டில்
மக்கள் அடைந்தவுடன்
பொன்னை மழையாக - வானம்
பொழிந்து கொட்டிடுமோ ? 1

919. பாலை சோலையாகிக் - கனிகள்
பழுத்து திர்ந்திடுமோ ?
சேலை சேலையாகப் - பருத்திச்
செடிகள் காய்த்திடுமோ ? 2

920. ஆக்கம் வேண்டு மெனில் – நன்மை
அடைய வேண்டுமெனில்,
ஊக்கம் வேண்டுமப்பா ! - ஓயாது
உழைக்க வேண்டுமப்பா ! 3

921. உண்ணும் உணவுக்கும் - இடுப்பில்
உடுக்கும் ஆடைக்கும்
மண்ணில் அந்நியரை – நம்பி
வாழ்தல் வாழ்வாமோ ? 4

922. நெற்றியின் வியர்வை - நிதமும்
நிலத்தில் வீழ்ந்திடிலே
சற்றும் வாடாமல் – சுதந்திரம்
தழைத்து வருமப்பா ! 5

923. ஜாதிச் சண்டையெலாம் - ஓய்ந்து
தணிய வேண்டுமப்பா !
நீதி நாடெங்கும் – நிலைத்து
நிற்க வேண்டுமப்பா ! 6

924. உலக மக்களெலாம் – அன்போடு
ஒரு தாய் மக்களைப்போல்
கலக மின்றிவாழும் – காலம்
காண வேண்டுமப்பா ! 7

வேறு

925. நெற்றி வியர்வை நிலத்தில் விழஉழைப்போம்;
பெற்ற சுதந்திரத்தைப் பேணுவோம் - சுற்றமெனப்
பன்னாட்டு மக்களையும் பாராட்டிப் பாரதமா
நன்னாட்டில் வாழுவோம் நாம். 8

## 115. குடியரசு வாழ்த்து

வெண்பா

926. ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால் - ஓதுபுகழ்
இந்திய நாட்டில் எழுந்த குடியரசு
சந்ததம் வாழ்க தழைத்து. 1

927. விண்ணவரும் கண்டு வியப்பரே மெச்சிநிதம்
மண்ணவரும் போற்றி மகிழ்வரே - புண்ணியஞ்சேர்
இந்திய நாட்டில் எழுந்த குடியரசுக்கு
எந்தஅரசு ஈடாகும் என்று. 2

வேறு

928. எத்திசையும் புகழ்வளர விரோதி ஆண்டில்
எழுந்திடுதை பதின்மூன்றில் குருவா ரத்தில்
புத்தியினுல் அநுபவத்தால் புலமை தன்னுல்
போற்றரிய சேவையினுல் புகழ்பெற் ருேர்கள்
சித்தமகிழ் புதுடெல்லி நகரில் கூடி
தேர்ந்தகுடி யரசுலகில் சிறந்து வாழ,
பத்தருக்குத் துணைபுரியும் பரந்தாமா ! நின்
பாதமலர் போற்றிநிதம் பணிகின் ருேமே. 3

வேறு

929. உண்ணும் உணவுக்கு ஏங்காமல்,
உடுக்கும் ஆடைக்கு அலையாமல்,
பண்ணும் தொழில்கள் பல காண்போம் ;
பஞ்சப் பேயைத் துரத்திடுவோம் ;
அண்ணல் காந்தி வழிபற்றி
அகிலம் புகழ வாழ்ந்திடுவோம் ;
எண்ணும் அன்பர் உளம்தங்கும்
இறைவா ! துணைசெய் தருள்வாயே. 4

930. ஈரம் இரக்கம் இல்லாமல்
இருநூ றுண்டு தளராமல்,
கோர ஆட்சி புரிந்தவரின்
கொட்டம் அடங்கக் காந்திமகா
வீரன் செய்த அறப்போரின்
வெற்றி தந்த குடியரசு
பார தத்தில் நீடூழி
பல்கிப் பெருகி வாழ்கவே ! 5

931. வெற்றி சிறந்த விரோதியினில்
விளங்கு மகரம் பதின்மூன்றில்
கற்றபெரியோர் மதிவல்லோர்
கண்ட நமது குடியரசு
வற்றில் கங்கை காவேரி
வளஞ்செய் பரத நாட்டினிலே
சிற்றம் பலவன் திருவருளால்
தினமும் வாழ்க வாழ்கவே ! 6

வேறு

932. விஞ்சுபுகழ் வெற்றிதரு விரோதி ஆண்டில்
விளங்கிடு தை பதின்மூன்றில் வியாழ நாளில்
நெஞ்சுவந்து பாரதத்தாய் பெற்ற மக்கள்
நிறுவிய நற் குடியரசு நிலைத்து நித்தம்
எஞ்சலிலா எவ்வளமும் பெருகி இந்நாடு
இமையவரின் திருநாடு ஒத்து இலங்கி வாழ,
பஞ்சவர்க்குத் துணைபுரிந்த பரந்தாமா ! நின்
பாதமலர் இணை போற்றிப் பணிகின் றேமே. 7

# வ ா ழ் த் து

## 116. திருவாவடுதுறை மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் வாழ்த்து *

### வணக்கம்

933. அந்தரத் தம்புலியும் ஆடரவும் சூடாமல்
கந்தரத்து வெவ்விடமும் காட்டாமல் – வந்தருளும்
அம்பல வாணன் அடிமலரைப் போற்றிநிதம்
கும்பிடுநீ நெஞ்சே குழைந்து. 1

### பயன்

934. அன்பால் எவரையும் தன்பா லாக்கும்
ஆவடு துறைவாழ் அம்பல வாண
தேசிகா ! சிவனருட் செல்வா ! இன்றுன்
பொன்னடி தொழுது போற்றிய புண்ணியம்
ஐய மின்றி அருந்துணை யாகிப்
பொய்யை அறவே போக்கி,
மெய்யை உணர்த்தி, மேல் வீடும் தருமே. 2

### வாழ்த்து

935. சைவம் வளரத் தமிழ்வளரத்
தருமம் ஓங்கித் தழைத்துவரப்
பொய்யைப் போக்கி மெய்கண்ட
புனித ஞானி யாமெங்கள்
ஐயன் துறைசைக் குருநாதன்
அடியார்க் கருள்அம் பலவாணன்
வையம் புகழ நீடூழி
வாழ்க ! வாழ்க ! வாழ்கவே ! 3

---

*மகா சன்னிதானம் அவர்கள் நாகர்கோவிலுக்கு எழுந்தருளி யிருந்தகாலத்து(5-12-1950) அவர்களைத் தரிசித்தபோது பாடியது.

## 117. உமையொருபாகக் குருக்கள்*

936. வேறும் ஒருதுணையான் வேண்டுவனே ? வேணுவனம்
தேறும்உமை யோர்பாகத் தேசிகனே-கூறும் எனக்கு
எய்யாப் பிறவி இருள்அகல நீஅளித்த
பொய்யா விளக்கிருக்கும் போது.

## 118. திருமூல மன்னர் பிறந்தநாள் விழா

[திருமூல மன்னர் திருவிதாங்கோடான வஞ்சி நாட்டை ஆண்ட சேர மன்னர்களுள் ஒருவர். இவரது ஆட்சிக் காலத்தில் ஒரு பிறந்த நாள் கொண்டாட்டத்திற்காக இப் பாடல்கள் பாடப்பட்டன. இவர் 66 ஆண்டுகள் (கி. பி. 1858 - 1924) ஆட்சிபுரிந்தார்.]

937. பாட்டில் அமைப்பர் படிய மனங்கொள்வர்
ஏட்டில் அழகாய் எழுதிவைப்பர் – வாட்டந்தீர்த்து
அன்பு கனியஎமை ஆளுந் திருமூல
மன் புகழைக் கேட்டு மகிழ்ந்து. 1

938. மன்னும் மதிபோல் வயங்குமே, வஞ்சியிதைப்
பொன்னுலக மாக்கிப் புகழ்பெறுமே – முன்னமொரு
சீதைக் கணைகண்ட செம்மல் தலைகுனியக்
கோதைக் கணைகண்ட கோ. 2

939. எண்ணுந் திருவருளால் இம்மூல மன்னவற்கு
நண்ணும் புகழெல்லாம் நம்புகழே – மண்ணின்று
தாளுண்ட நீரைத் தலையாலும் காயும்உணு
நாள் உண்டோ ? கோதாய் ! நவில். 3

---

*இக் குருக்களிடம் சிவதீக்ஷை பெற்றபோது பாடியது.

938. 'கோதைக்கு அணை' என்பது கோதையாற்றில் அணை கட்டித் தென் திருவிதாங்கூரில் விவசாயத்தைப் பெருகச் செய்ததைக் குறிப்பதாகும்.

940. மாவேறு மந்தி வருக்கைச் சுளையமுதம்
நாவேற உண்ணுமலை நாடாள்வான் - பாவேறு
செந்தமிழான் வெண்குடையான் செங்கோலான்
சந்ததமும் வாழ்க தழைத்து. [இவ்வுலகில் 4

941. பூமகளைக் காத்துப் புகழ்மகளைப் போற்றிநிதம்
நாமகளை வஞ்சிநல் நாட்டிருத்தித் – தாமமணி
வண்ணன் அடி என்றும் மனங்கொண்டு மாமூல
அண்ணல் இனிதாள்க அரசு! 5

942. வஞ்சித் திருமூல மன்னவற்குப் பன்னலமும்
விஞ்சத் திருவருளை வேண்டுதுமே – பொன்செய்
குளம்பெருக்கி வாழும் குடிக்குப் பயிர்கள்
வளம்பெருக்கும் என்று மதித்து. 6

943. கண்ணுக் கினியன் கவிக்கினியன் வாய்க்கினியன்
பண்ணுக் கினியன் அருள் பற்றுமினோ - நண்ணுபுகழ்
வஞ்சி மகிழ்நன் வரும்திருநாட் கோலமிது
நெஞ்சுக் கமுதளிக்கும் நேர். 7

944. என்றும் தழைத்திடுக! இன்தமிழ்ப்பா வேய்ந்திடுக!
நின்றிந் நிலத்தில் நிலவிடுக! – துன்றுசுவைப்
பாவடிகள் தேன்வடியப் பாடும் புலமை இளங்
கோவடிகள் போந்த குலம். 8

944. 'பாவடிகள் தேன்வடியப் பாடும்' என்பது சிலப்பதிகாரஞ் செய்தருளிய இளங்கோவடிகளைக் குறிப்பதாகும். அவர் சேர மரபினர் என்பது வரலாறு.

## 119. ரீஜென்று மகாராணி

945. பொன்னே இப் புவியதனைப் புரக்கவந்து
பொலிவு தானோ ? [கொலுவிருக்கும்
தன்னேரி லாஅழகு தனியரசு செலுத்தவரும்
தகைமை தானோ ?
அன்னேயென் றேஅலறும் அகிலமுறைகேட்க எழும்
அன்பு தானோ ?
என்னேயான் சொலத்துணிவேன் எமையாளும்
இருந்த வாறே ! [மகாராணி 1

946. நீதியால் உலகாளும் நெறிமன்னர் நாண, உயர்
நேர்மை கொண்டாள் ;
தீதிலா தொருதுறையில் பசுவோடு புலியுண்ணச்
செங்கோல் பூண்டாள் ;
கோதிலாத் தருமங்கள் குணங்கண்டு பாலிக்கும்
கொள்கை மிக்காள் ;
சேதுபாய் மகாராணி அரசாள என்னதவம்
செய்தோம் ! அம்மா ! 2

947. தஞ்சமெென நின்றுதொழும் தம்குடிகள் குறை
தாமே கண்டு, [யெல்லாம்
நெஞ்சமர யோசித்து நெல்வரியைப் பணமாக்கி
நியாயம் செய்தாள் ;
அஞ்சலென நொந்தவரை ஆதரவு செய்வதிவ்
அன்னைக்கு ஈடு
வஞ்சிநிலத் தில்லையெனில் மற்றெந்த நிலம்காட்ட
வல்லது ? அம்மா ! 3

948. வாய்பேச இயலாத பிராணிகளும் வஞ்சியிதில்
வளர்ந்து வாழத்
தாய்போலும் தயையுடையாய் ; உயிர்ப்பலிசெய்
தவிரச் செய்தாய் ; [கொடுமைகளைத்
பாய்திரைசூழ் உலகாளும் மன்னரெல்லாம்
படிக்கும் வண்ணம் [பார்த் தறங்கள்
சேய்நிலத்தும் இந்நிலம்போல் நின்பெருமை எந்நாளும்
சிறக்க மாதோ ! 4

## 120. இளங்கோ நவமணி மாலை

வெண்பா

949. ஆயிரத்தெண் பத்தெட்டில் ஐப்பசிமா தத்தில் நலம்
ஏயுமொரு தேதியிரு பத்தெட்டில் – மேயகுரு
வாரமதில் சித்திரையில் வந்தவிடை லக்கினத்தில்
சேரஇளங் கோவுதித்த தே.

கண்ணிகள்

950. வஞ்சிதேசம் எங்கும்புது மணம் வீசும் பூவாம்,
மணம்வீசும் பூஅழகை வகுத்துரைக்க லாமோ ! 1

951. பார்வதிபாய் மகாராணி பக்கம்வளர் கிளியாம்,
பக்கம்வளர் கிளிக்கினிய பழங்கள் கொண்டு
[போவோம்.

952. முடிவேந்தர் மடியிருத்தி முத்தமிடும் முத்தாம்,
முத்தமிடும் முத்தின்விலை மூவுலகில் உண்டோ ! 3

953. திருமூல மகிபருக்குத் தினம்இனிக்கும் அமுதாம்,
தினம்இனிக்கும் அமுதின்விலை செப்பவலார்
[உண்டோ ! 4

954. வஞ்சிராஜ குலம்தழைத்து வந்தபசுங் கொழுந்தாம்,
வந்தபசுங் கொழுந்தோங்கி வளர்ந்து நிழல் தருமே !5

955. மூலமன்னர் செய்தருமம் முற்றிவந்த கனியாம்,
முற்றிவந்த கனிநமக்கு முழுதும்இன்பம் தருமே ! 6

956. அன்புநீரை அடைத்து நாங்கள் அகம்வளர்க்கும்
[பயிராம்
அகம் வளர்க்கும் பயிருமெங்கட் களிக்கும் நல்லபலனே!

957. குடிகளுக்கு க்ஷேமமெல்லாம் கொண்டுவரும் கலமாம்,
கொண்டுவரும் கலத்திற்கிணை குவலயத்தி லுண்டோ !

958. சித்திரைநாள் அவதரித்த சேரஇளங் கோவாம்,
சேரஇளங் கோவினுக்குச் செகதீசன் துணையே ! 9

## 121. சித்திரை மன்னர் முடிசூட்டுவிழா

959. சேரகுல சேகரனைச் சித்திரைநாள் வந்தமன்னைப்
பாரரசி பார்வதிபாய் பாலகனைச் - சீரமைந்த
வஞ்சிக்கு வாய்த்தமண வாளனை வாழ்த்துவதெம்
நெஞ்சுக்கு வாய்த்த நினைவு. 1

960. பன்னாடுஞ் சுற்றிப் பழகியங் கங்குள்ள
நன்னாக ரீகமெலாம் நன்குணர்ந்து - தென்னாடு
காக்கவரும் சேரகுல காவலன்சீர் செந்தமிழின்
பாக்கமழ நாவேநீ பாடு. 2

961. ஆயிரத்து நூற்றேழில் ஐப்பசிநா லைந்ததனில்
தூயவெள்ளி சேரும் சுபதினமே - மேயதிரு
மூலமன் பூண்ட முடிபூண்டு சித்திரைமன்
ஞாலம் புரக்கவந்த நாள். 3

962. திருமால் அருளோ ? திருமூல மன்செய்
அருமா தவமோ ? அறியேன் - உருவாகி
மாமகுடம் சூடி வளரும்செங் கோல்ஏந்திப்
பூமகிழப் போந்ததிப் போது. 4

963. சீர்பெருகும் மாதேவி சேதுலக்ஷ்மி பாய்மகிழத்
தார்மௌலி சித்திரைமன் தாங்கினான் - பாரதனில்
தாயின் சுமைவாங்கித் தான்சுமந்து கொள்ளுவது
சேயின் கடமையெனத் தேர்ந்து. 5

964. சித்திரைநாள் வந்த திருமன்னன் மாமகுடம்
அத்தன் அருளால் அணிந்த அந்நாளே – ஒத்தவஞ்சி
மாதைமணந் தான்கோடி மக்களையும் பெற்றினிய
தாதையெனப் பேருமெடுத் தான். 6

965. மன்னர் பெருமான் வடிவழகன் சித்திரைமன்
பன்னு கலைதேர்ந்த பண்டிதன் - உன்னும்
கருணையொடு நீதியிரு கண்ணாக வஞ்சி
இருநிலம் காக்க இனிது. 7

966. நாட்டின் நலமே நமதுநலம் என்றுள்ளந்
தீட்டும் பெருமான் எம் சித்திரைமன் - கூட்டும்
குடியரசின் மன்னவர்செங் கோலரசை மெச்சும்
படியரசு செய்க பரிந்து. 8

967. திருவஞ்சி நாடாளச் சித்திரைநாள் வந்த
பெருமானை எந்நாளும் பேணி - மருவும்
நடுநீதி காக்கும், அவன் நற்கருணை காக்கும்,
நெடுமால் அருள்காக்கும் நேர். 9

968. நீதி வளர நிதிவளர நல்லறிவின்
சோதி வளர்ந்தெங்கும் தோன்றவே - ஓதுபுகழ்ச்
சித்திரைநாள் வந்த திருவாளன் ஏந்துமுடி
நித்தமும் வாழ்க நிலத்து. 10

969. பார்வதிபாய் கண்குளிரப் பாவணர் சொற்குளிர
நேர்வதியும் வஞ்சி நிலங்குளிரத் - தார்மௌலி
சித்திரைமன் ஏந்தித் திருவனந்தை மாநகரில்
எத்தினமும் வாழ்க இனிது. 11

970. நாட்டுக் கணியாகி நன்மைக்கு வித்தாகிப்
பாட்டுக் கினிய பயனாகி - ஊட்டிநிதம்
குஞ்சணைக்கும் தாய்போல் குடியணைக்கும்
வஞ்சிநிலம் வாழ்க மகிழ்ந்து. [சித்திரைமன் 12

## 122. சித்திரை மன்னர் பிறந்த நாள் விழா

971. பூவால் பசுங்கொடியும் புன்சிரிப்பால் கைம் மகவும்
நாவால் இளங்கிளியும் நன்கோதும் - மூவாத
சீமான் அனந்தைத் திருமால் அடிமறவாக்
கோமான்தன் ஆட்சிக் குணம். 1

972. ஈசன் அடியார் எவருக்கும் ஆலயத்தின்
வாசல் வழிதிறந்த மாமன்னன் - நேசமிகு
புத்தர் அசோகர் புகழையெலாம் தன்புகழா
நித்தமும் கொண்டான் நிலத்து. 2

973. வஞ்சி வளநாடு வானவர்நா டென்றுலகில்
செஞ்சொற் புலவரெலாம் செப்பவே - விஞ்சியபால்
ஆழியிற் கண்வளரும் அண்ணல் அருளால் என்றும்
வாழிநம் சித்திரை மன். 3

974. ஆண்டபெரு நாடும் அரசும் அரும்புலவர்க்கு
ஈண்டு பரிசில் என அளித்துப் - பூண்டசுவைச்
செந்தமிழைக் கேட்டுவக்கும் சேரகுலம் இந்நிலத்துச்
சந்ததமும் வாழ்க தழைத்து. 4

---

974. தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர அரசன் தன் அரசையும் நாட்டையும் அரிசில்கிழார் என்னும் புலவருக்குப் பரிசிலாக அளித்தான் என்பது பதிற்றுப்பத்தால் அறியப்படும் செய்தி.

## 123. புதுக்கோட்டை யரசர் வாழ்த்து

975. மண்ணுலக மாமடந்தை வாடாது வாழ்வுபெறத்
தண்ணிழல் தந்துநிதம் தாங்குகவே - எண்ணரிய
பூபாலர் போற்றும் புதுவைத் திருராஜ
கோபாலன் கொற்றக் குடை.

## 124. வேல்ஸ் இளவரசர் வரவேற்பு

வெண்பா

976. தண்ணளியின் மண்முழுதும் தாங்குந் தனிக்கவிகை
அண்ணலருள் ஜார்ஜின் அருங்குமரற்கு—எண்ணுபுகழ்ச்
செல்வற்கு வேல்ஸினிளஞ் செம்மற்குத் தேமொழியீர்
நல்வரவு சொல்வோம் நயந்து. 1

வேறு

977. பாரணிந்த பலமன்னர் பரந்தபுகழ்க் குலமாம்
பாற்கடலின் உதித்தெழுந்த பாக்கியமே ! வருக !
தாரணிஎவ் அறங்களுமே தழைத்தோங்கி வளரத்
தனிமுதலைத் தொழுதடைந்த தவப்பயனே!
[வருக ! 2

978. எவ்வுளமுங் குளிரஒளிர் இளமதியே ! வருக !
எங்கும்நிறை புகழ்மணக்கும் எழில்மலரே ! வருக !
செவ்வியுறும் அரசர்குலந் திகழ்மணியே ! வருக !
ஜ்யார்ஜுமகா ராஜனருள் திருமகனே ! வருக ! 3

---

976. இந்த வேல்ஸ் இளவரசர் பின்னல் எட்டாம் எட்வர்டு என்ற பெயரோடு அரசராயிருந்தவர்.

979. பொருளேந்தி இனியதமிழ்ப் புதுமாலை ஏந்திப்
புவிராசர் தொழுவர் ; உனைக் கவிராசர் புகழ்வர்;
அருளேந்தி எமையாளும் அரசர்குலக் கொழுந்தே !
ஆதரித்தெம் திருநாட்டின் அணிகாண வருக ! 4

980. மந்தாரம் முல்லையிரு வாட்சிகுட மல்லி
மணங்கொண்ட பூவுலக மாதரசி ரோஜா
வந்தானே வந்தானே என்றுமுக மலர்ந்து
வள்ளலுனை எதிர்கொண்டு வளங்காட்டும் ஐய ! 5

981. கமுகோடு தெங்குபனை காணிக்கை கொண்டுன்
கழல்போற்றக் கடற்கரையில் காத்துநிற்கும்,
[அரசே !
இமையாத கண்மலர்கொண் டெழுந்துபல தருக்கள்
எக்கணமும் நின்வரவை எதிர்பார்க்கும், அரசே. 6

982. ஐய, உன்றன் வரவையெண்ணி ஆலினங்கள்
[உழைத்தே
ஆயிரக்கால் மண்டபங்கள் அமைத்துவைத்த
செய்யதிரு வடிவணங்கத் தென்குமரி நங்கை [பலவே;
சேர்த்து வைக்கும் முத்தினங்கள் செப்ப
[எளிதலவே. 7

வேறு

983. வானோங்கி வளர் இமய மலைகாண லாமே !
வற்றாத கங்கைநதி வளங்காண லாமே !
கானோங்கு மரச்சோலைக் கவின்காண லாமே !
கமலமணித் தடம்நோக்கிக் கண்களிக்க லாமே ! 8

984. சிறையன்னம் உண்டு; பசுங்கிளி உண்டு; பிரமன்
சித்திரக்கை நலம்விளக்கித் திரியுமயில் உண்டு;
நிறைநீரில் நீந்துபல நிறமீன்கள் உண்டு;
நீரில்இரை தேர்குருகு நிரைஉண்டு மிகவே. 9

985. ஊனுண்டு பாய்புலியும் கடுவாயும் உண்டு ;
உறுமியெதிர்ந் தோடிவரும் பன்றிகளும் உண்டு ;
மான் உண்டு ; வன்கரடி மதயானை உண்டு ;
மாவேட்டை நீயாட வனம் உண்டு பலவே. 10

986. படியேந்தி நிதியளக்கும் பட்டினங்கள் பலவாம் ;
பணிசிறந்த திருக்கோயில் பள்ளிகளும் பலவாம் ;
கொடியேந்தி விண்ணளக்குங் கோபுரங்கள் பலவாம் ;
குவலயமெ லாம்புகழும் கோரிகளும் பலவாம். 11

987. சாதிகளும் பலவாகும் ; சமயங்கள் பலவாம் ;
சாத்திரங்கள் பலவாகும் ; தருமங்கள் பலவாம் ;
ஓதுமொழி பலவாகும் ; உணவுடைகள் பலவாம் ;
உலகமிசை இதுபோலும் ஒருதேசம் உளதோ ? 12

988. இப்பெரிய எம்நாட்டின் நலம்யாவும் எளியேம்
எடுத்தோதுந் திறமின்றி விடுத்தோம் இங்கு, ஐய!
ஒப்பரிய அரசகுலத் துதித்த இளங்கோவே !
உன்அடிக்கு வந்தனங்கள் உவந்தளித்தோம்
[பலவே. 13

989. கம்பன் அன்றி எவரேஇக் கண்காட்சி யாவும்
கவியாலே இனிமையுறக் காட்டவல்லர், ஐய !
அம்புவியெ லாம்புகழும் அரசகுல விளக்கே !
அறியாஇச் சிறுமொழியும் அன்புடன்
[ஏற்றருளே! 14

வேறு

990. வாழி ! வேல்விளை மன்னவன் வாழியே !
வாழி ! நல்லறம் மாண்புடன் வாழியே !
வாழி ! பாரதத் தாய்நிதம் வாழியே !
வாழி ! செந்தமிழ் மாமொழி வாழியே !

## 125. அண்ணாமலை மன்னர்

991. கோயிலாய் ஓங்கும் ; குளமாய்ப் பரந்துநிற்கும் ;
நேயமிகு கல்வி நிலையமுமாம் – ஆயபல
புண்ணியங்கள் செய்து புவியில் அறம்வளர்க்கும்
அண்ணா மலைமன் அருள். 1

992. அன்னமிடு சத்திரமாம் ; ஆதுலர்கள் சாலையாம் ;
மன்னுகலை ஓங்கி வளரிடமாம் – இன்னமுதம்
பண்ணார் பசுந்தமிழிற் பாவாணர் பாடுபுகழ்
அண்ணா மலைமன் அருள். 2

993. தில்லைப் பதியுடையான் சிற்றம்பலந் தன்னில்
அல்லும் பகலும்நின் றாடுகின்றான் – எல்லைக்கண்
அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து. 3

994. தத்தளித்து நின்ற தமிழிசைச் செல்விக்குப்
புத்துயிரை ஊட்டிய நற்புண்ணியவான் – பத்தியுடன்
எண்ணான் கறமும் இனிதா வளர்த்துமகிழ்
அண்ணா மலைமன்ன னும். 4

995. பூவாரம் தந்திடுவான் பொன்னாடை போர்த்திடுவான் !
நாவார நல்லுரையும் நல்கிடுவான் – பாவாணர்க்கு
அன்புசெய் திந்நாளில் அண்ணா மலைமன்போல்
இன்படைவார் உண்டோ? இசை. 5

வேறு

996. ஐயம் அகல உண்மைகளை
ஆய்ந்து காணும் அறிவுடையோன் ;
செய்யும் வினைகள் ஒவ்வொன்றும்
திருந்தச் செய்யும் திறம்பெற்றோன் ;
கையிற் கொண்ட கருங்கல்லும்
கனகம் சொரியச் செய்திடுவான் ;
வையம் புகழும் தனவணிகர்
மணியாம் அண்ணா மலைமன்னே. 6

997. தில்லைப் பதியிற் பல்கலையும்
செழித்து வளர இடங்கண்டோன் ;
இல்லை யென்னு தெவ்வெவர்க்கும்
ஈந்து மகிழும் இயல்புடையோன் ;
சொல்லை மறவாப் புகழ்வேந்தன் ;
சுற்றம் தழுவும் திருவாளன் ;
நல்லன் அண்ணா மலைமன்னன்
நாட்டுக் கணியாய் வாழுகவே ! 7

998. உள்ள முருகச் செவிகுளிர
ஓதும் நாவில் அமுதூறத்
தெள்ளத் தெளிந்த செந்தமிழின்
தெய்வ கீதம் செழித்தோங்க,
எள்ளத் தனையும் சலியாமல்
இரவும் பகலும் உழைத்திடுநம்
வள்ளல் அண்ணாமலை மன்னன்
வாழ்க ! வாழ்க ! வாழ்கவே ! 8

999. பாரி பாரி யென்றுகவி
பாடும் புலவர் புகழ்பாட
வாரி வாரி வழங்கிடுநம்
வள்ளல் அண்ணா மலைமன்னற்கு

ஓரும் ஜாதி மதபேதம்
ஒன்றும் நோக்கா தெழுந்துலகில்
நீரைப் பொழியும் மேகமலால்
நிகர்வே றுண்டோ ? நிகழ்த்துவிரே. 9

1000. உருகி அன்பு பெருகிவழிந்து
ஓடி யொழுக எதிர்வந்து
வருக வருக வருகவென
மதுர மொழிகள் பலகூறி
அருகில் அமரச் செய்தென்னோடு
அளவ ளாவி அமுதளித்த
தருகை நீண்ட பெருந்தகையின்
தருமம் ஓங்கி வளருகவே ! 10

1001. நாடு சேர்ந்த நல்லவையில்
நடுநா யகமா யெழுந்தருளி,
ஈடி லாத பொன்னாடை
எவருங் காண எனக்கணிந்து,
பீடு மிகவே பெறவைத்த
பெரியன் அண்ணா மலைமன்னன்
நீடுவாழ ஈசனை யான்
நித்தம் நித்தம் தொழுவேனே. 11

1002. அம்பொன் வேய்ந்த அரும்புகழும்
அமுதம் கொணர்ந்த பெரும்புகழும்
இம்பர் ஒருங்கு பெற்றகுலத்து
எழுந்த அண்ணா மலைமன்னன்
பம்பு மூட இருளகற்றும்
பானு வாகி நல்லறங்கள்
நம்பி உலகில் நிதம்வளர
நன்மை செய்து வாழுகவே! 12

1002. அமுதம் - நீர்.

1003. காந்தி யடிகள் திருவுள்ளம்
கனிந்து போற்றும் குருதேவன்
ஆய்ந்த அகில கலையாளன்
அண்ணல் தாகூர் அமைத்தவுயர்
சாந்தி நிகேதப் பெரும்பொழிலில்
தமிழும் கமழச் செய்துபுகழ்
ஏந்தும் அண்ணா மலைமன்னன்
என்றும் வாழ்க ! வாழ்கவே ! 13

## 126. ஸர். ஆர். கே. சண்முகம் செட்டியார் ஷஷ்டியப்த பூர்த்தி வாழ்த்து

1004. அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணார் மணிபோலக் காத்திடுவோன்
[—பண்ணார்ந்த
செந்தமிழ்ச் செல்வன் திருக்கோவைச் சண்முகவேள்
சந்ததம் வாழ்க தழைத்து. 1

வேறு

1005. பண்ணார் தமிழின் இசைவளர்த்துப்
பாது காக்கும் பண்புடையோன்,
விண்ணோர் அமரா வதியென்ன
விளங்கும் கோவை நகருடையான்,
அண்ணா மலைப்பல் கழகமிதை
ஆளும் அரிய துணைவேந்தன்,
தண்ணார் மதிசூ டிறையருளால்
தழைத்து வாழ்க வாழ்கவே ! 2

1006. மன்னர் மதிக்கும் மதியுடையோன்,
வாக்கின் செல்வி வளம்பெற்றோன் ;
என்னை அன்பால் விலைகொண்ட
ஈடில் வணிகன் சண்முகவேள்,
பொன்னின் ஆடை புலவர்க்குப்
புனைந்து போற்றிப் புகழெய்தி
இன்னும் நூறாண் டிவ்வுலகில்
இனிது வாழ்க வாழ்க ! 3

வேறு

1007. ஆங்கிலமும் செந்தமிழும் ஆய்ந்து கற்றோன்
அரியபொரு ளாதாரக் கலைஞா னத்தால்
ஓங்குபுகழ் நிபுணனென உலகம் போற்றும்
உத்தமனும் சண்முகவேள் நித்தம் நித்தம்
தீங்கொழிய நல்லனவே தேர்ந்த றிந்து
செய்வனவெலாம் திருந்தச் செய்தெம் ஈசன்
தேங்கமழ்பூங் கொன்றையணிந் தாடும் தில்லைச்
சிவபெருமான் திருவருளால் வாழ்க மாதோ ! 4

வேறு

1008. அண்ணா மலைக்கழகம் ஆளும் துணைவேந்தன்
தண்ணார் குணசீலன் சண்முகவேள்—விண்ணோர்
வாடா மகிழ்ச்சி மலர்சூடி வாழ்ந்திடுக, [போல்
நீடாழி சூழும் நிலத்து. 5

## 127. ராஜாஜி

1009. அன்னை யடிமை நிலைபோக்கி
அறப்போர் வெற்றித் தளபதியாய்
மன்னுங் காந்தி யடிகளுக்கு
வலக்கையாக நின்றுதவி,
சென்னை மக்கள் புகழ்வளர்த்த
செல்வா, ராஜ கோபாலா !
இன்னும் பல்லாண் டிவ்வுலகில்
இனிது வாழ்க ! வாழ்கவே ! 1

1010. இனிய கனிகள் கையிலெடுத்து
எளியேன் இருக்கும் இடந்தேடி,
கனியும் அன்பால் வந்துள்ளம்
கனியச் செய்த கனவானே ;
புனித ஞானி என்றுலகம்
புகழும் ராஜ கோபாலா !
நனிஎம் பெருமான் அருளால்எந்
நாளும் வாழ்க ! வாழ்கவே ! 2

1011. எங்கும் மக்கள் இடரின்றி
இன்பந் துய்க்கும் வழிகண்டு,
கங்குல் பகல்எக் கணமுந்தான்
கடமை யாற்றும் அருளாளா !
வங்க நாடு போற்றிநிதம்
மகிழும் ராஜ கோபாலா !
சங்க பாணி திருவருளால்
தழைத்து வாழ்க ! வாழ்கவே ! 3

---

1009-1013. இப் பாடல்கள் ராஜாஜி வங்காளக் கவர்னராக இருந்த காலத்தில் பாடப்பெற்றவை.

வேறு

1012. விண்ணமுதை யொத்த வியாசர் விருந்தளித்த
புண்ணியனே ! வேதாந்த போதகனே ! [தண்ணியநீள்
ஆழிசூழ் இவ்வுலகில் ஆழியான் இன்னருளால்
வாழிநீ ! ஐயா ! மகிழ்ந்து. 4

1013. மண்ணைப் பொன்னுக்கும் மதியூகி ! வாய்த்தவினை
எண்ணித் துணியும் இயல்புளாய் ! – புண்ணியஞ்சேர்
இந்தியநா டாளும் இராஜகோ பாலா ! நீ
சந்ததமும் வாழ்க தழைத்து. 5

1014. தந்திரிக்குத் தந்திரியாய், தாசனுக்குத் தாசனாய்,
மந்திரிகள் மெச்சுமதி மந்திரியாய் – வந்துதித்த
இன்னருட் செல்வா ! இராஜகோ பாலாநீ
மன்னுலகில் வாழ்க மகிழ்ந்து. 6

## 128. வ. உ. சிதம்பரம் பிள்ளை

1015. கைநோவக் கால்நோவக் கல்லுடைத்துச் செக்கிழுத்து
மெய்சோர்ந்தும் ஊக்கம் விடாதுநின்ற—ஐயன்
சிதம்பரம் அன்றுசிறை சென்றிலனேல், இன்று
சுதந்திரம் காண்பாயோ ? சொல். 1

1016. அஞ்சுவனோ வெள்ளையரின் ஆட்சியொழிப் [பேன்என்று
வஞ்சினம் கூறிநின்ற மாவீரன்—விஞ்சுபுகழ்
செந்தமிழ்ச் செல்வன் சிதம்பரப்பே ரண்ணலைநாம்
வந்தனை செய்வோம் மகிழ்ந்து. 2

1017. கப்பலை ஓட்டிக் கடுங்காவற்கு ஆளாகி
உப்பிலாக் கூழ்உண் டுடல்மெலிந்தோன்-ஒப்பிலாத்
தென்னாட்டு வீர திலகன் சிதம்பரத்தின்
நன்னாமம் வாழ்த்துகவென் நா. 3

## 129. வெ. ப. சுப்பிரமணிய முதலியார் எண்பதாம் ஆண்டு நிறைவு

1018. எண்பதாண் டான இளைஞனே, இன்னமுதின்
பண்பெலாங் காட்டுதமிழ்ப் பாவலனே-நண்பனே,
வெள்ளகால் செல்வனே, வேள்சுப் பிரமணிய
வள்ளலே, வாழ்க மகிழ்ந்து!

## 130. ராவ்பஹதூர் ப. சம்பந்த முதலியார் எண்பதாவது ஆண்டு நிறைநாள் வாழ்த்து

1019. அந்திமதி சூடிநின் றம்பலத்தி லாடிநிதம்
சிந்தைமகிழ் கூத்தன் திருவருளால் - செந்தமிழ்
நாடுபுகழ் சம்பந்தன் நடிக மகராசன்
நீடுலகில் வாழ்க நிலைத்து. 1

வேறு

1020. ஈடி லாத செந்தமிழில்
இனிய தமிழில் அழகழகாய்
நாட கங்கள் பலதந்த
நடிக ராஜன் சம்பந்தன்
நீடிவ் வுலகில் பல்லாண்டு
நிலைத்து வாழ நல்லவரம்
ஆடும் கூத்தன் எம்பெருமான்
அருள்க அருள்க அருள்கவே. 2

## 131. அபிநவ காளமேகம்
## அனந்தகிருஷ்ண அய்யங்கார் சதாபிஷேகம்

1021. முன்னைக் காள மேகத்தின்
மூவி ரட்டிக் கவி பொழிவோன் ;
அன்னை வாணி அருளுடையன்
அனந்த கிருஷ்ணப் பேரறிஞன் ;
மன்னும் ஈசன் திருவருளால்
மகிழ்ந்து மக்கள் சுற்றத்தோடு
இன்னும் பிறைகள் ஆயிரங்கண்டு
இனிது வாழ்க ! வாழ்கவே ! 1

1022. அன்பால் அறிவால் அகங்குளிரும்
அமுத மொழியால் அனைவரையும்
தன்பா லாக்கும் தகைமையுளோன்
தமிழ்த்தாய் பெற்ற தவப்புதல்வன்
தென்பால் வைகும் திருப்பேரைச்
செல்வன் அனந்த கிருஷ்ண நண்பன்
இன்பா லாழி இறையருளால்
என்றும் வாழ்க ! வாழ்கவே ! 2

வேறு

1023. பாகனைய செந்தமிழ்ப் பாமாரி யைக்காள
மேகமென வேபொழியும் வித்தகா ! – ஊகமிகும்
அந்தணநண்பா ! அனந்த கிருஷ்ண நாவலா !
சந்ததம் வாழ்க தழைத்து ! 3

## 132. நாமக்கல் கவிஞர் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

1024. சிந்தையினுல் வாக்கதனுல் செய்கை தன்னுல்
தேசத்திற் கோயாது தொண்டு செய்தோன்
முந்தும் அன்பே உருவாக வந்த மூர்த்தி
மூதறிஞன் காந்திமகான் வழியின் பற்றிச்
செந்தமிழ்நாட் டாஸ்தான கவிஞுகிச்
சீரோங்கி ராமலிங்க நண்ப னே ! நீ
சந்ததமும் இவ்வுலகில் வாழச் செந்தில்
சண்முகனே வேண்டிநிதம் போற்று வேனே.

## 133. டி. கே. சிதம்பரநாத முதலியார் அறுபதாவது ஆண்டு ஆசிச் செய்தி

1025. கன்னித் தமிழேபோல், கம்பன் கவியேபோல்,
மன்னும் பொதிகை மலேயேபோல் - பன்னுநம்
நாடு மகிழச் சிதம்பர நாத நண்பா !
நீடுநீ வாழ்க நிலேத்து. 1

1026. அன்னேதமிழ்ச் செல்விக்கு அருந்தொண்டு
[செய்தின்னும்
மன்னுலகில் பல்லாண்டு வாழியவே - என் இனிய
நண்பா ! சிதம்பர நாதா ! நம் மாமுருகன்
கண்பார்த் தருளக் கனிந்து. 2

1027. குற்ருல நாதா ! குழல்வாய் உமைபங்கா !
பொற்ருள் பணிந்துன்னேப் போற்றுகின்றேன் -
சிந்தை மகிழச் சிதம்பர நாதநண்பன் [கற்ருர் தம்
சந்ததம் வாழவரம் தா. 3

## 134. மகாமகோபாத்தியாய
## பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்*

1028. ஆரா வமுத மனைய தமிழுக்கோர்
பேரா சிரியனெனப் பேர்பெற்றோன் - சீராரும்
கண்ணுதலுக் கன்பன் கதிரேசன் என்றென்றும்
மண்ணுலகில் வாழ்க மகிழ்ந்து 1

1029. பள்ளிப் படிப்பறியான் பைந்தமிழும் ஆரியமும்
தெள்ளிச் சுவைதேரும் செந்நாவான்-உள்ளிநிதம்
சித்தம் சிவன்பால் செலுத்தும் கதிரேசன்
நித்தம் வளர்க நிலத்து. 2

1030. எங்கும்நிறை பொருளாய் எப்பொருட்கும் [அப்பாலாய்த்
தங்கும் தனிப்பொருளின் தண்ணருளால் - [பொங்குபுகழ்ச்
செந்தமிழ்த் தாய்பெற்ற செல்வன் கதிரேசன்
சந்ததமும் வாழ்க தழைத்து. 3

வேறு

1031. சிந்தைக் கினிய செவிக்கினிய
திருவா சகத்தின் உட்பொருளை
முந்தும் அறிவால் ஆராய்ந்து
முத்தே வர்க்கும் முதற்றேவன்
எந்தை சிவனே யாமென்ன
எவர்க்கும் நன்றாய் எடுத்தோத
வந்த பெரும்பே ராசிரியன்
வாழ்க வாழ்க வாழ்கவே! 4

---

*1944-ல் திரு. வித்துவான் விசு. திருநாவுக்கரசு அவர்கள் எழுதிய 'பண்டித மணி - வாழ்க்கைச் சித்திரம்' என்ற நூலுக்காக இவ் வாழ்த்துக் கவிகள் பாடப்பட்டன.

1032. இனிய தமிழைச் செந்தமிழை
என்றும் ஓங்கி வளர்தமிழை
கனியும் அன்புமிக இளைஞர்
கற்று நெஞ்சம் களிப்பெய்த
புனித முறையில் போதனைசெய்
புலவர் பெருமான் கதிரேசன்
நனியிவ் வுலகில் வாழவரம்
நங்கை பாகன் நல்குகவே ! 5

1033. ஆரி யத்தின் நிலைகண்டோன்
அரிய தமிழின் கடலானோன்
பாரி அண்ணு மலைமன்னன்
பரிந்து போற்று முதுபுலவன்
தேரும் இனிய சொல்லால் எம்
சிந்தை கவரும் கதிரேசன்
பேரும் புகழும் பெருவாழ்வும்
பெற்று நிதமும் வாழ்கவே ! 6

1034. நெற்றி நிறைந்த நீறுடையான்,
நெஞ்சில் பஞ்சாக் கரமுடையான் ;
முற்றி முதிரும் அன்பாலே
மூவர் தமிழும் பயில்நாவான் ;
சுற்றம் தழுவும் குணசீலன்
தூய நெறிகண் டொழுகிடுவான் ;
கற்ற பெரியோன் கதிரேசன்
கடவு ளருளால் வாழியவே ! 7

## 135. சொ. முருகப்பா மணிவிழா வாழ்த்து

விருத்தம்

1035. நாடும் நகரும் திருந்திநிதம்
நன்மை காணும் வழிகளெலாம்
தேடி அறிந்து தளராது
செயலிற் போற்றும் குணமுடையோன் ;
பீடு பெறமா வணிகர்குலம்
பெற்ற வீர முருகப்பன்
ஆடுந் தில்லை அம்பலவன்
அருளால் வாழ்க வாழ்கவே ! 1

1036. சொல்லும் சொல்லை ஐயமறச்
சொல்லி உண்மை காத்திடுவோன் ;
அல்லும் பகலும் உழைத்திடுவோன்,
அழகார் அமரா வதிமகளிர்
இல்லம் கண்டு புகழ்கண்டோன் ;
எங்கள் நண்பன் முருகப்பன்
வெல்லும் செந்திற் பன்னிருகை
வேலன் அருளால் வாழ்கவே ! 2

வெண்பா

1037. பத்திமிகுந் தன்பர் பணிந்துநிதம் போற்றுகின்ற
அத்திமுகத் தண்ணல் அருளாலே - வித்தகன்
சிந்தைக் கினிய தமிழ்ச் செல்வன் முருகப்பன்
சந்ததம் வாழ்க தழைத்து. 3

## 136. "சோம. லெ." இலக்குமணன் வாழ்த்து

1038. எல்லா நாடும் தன் நாடாய்
எங்கும் சுற்றி ஆராய்ந்து
நல்லார் பலரின் கருத்தையெலாம்
நாளும் தேடித் தமிழ்மக்கள்
பல்லார் அறியச் செந்தமிழில்
பண்பாய் உரைக்கும் என்நண்பன்
சொல்லால் அமுதை வென்றிடுவோன்
சோம லக்கு மணன்வாழ்க !

## 137. தவயோகி வாழ்க

1039. கண்டும் கனியும் கரும்பும் களியமுதும்
தண்டமிழில் கொண்டுதரும் தண்ணளியான் -
[மண்டுபுகழ்ப்
பண்டிதன்சுத் தானந்த பாரதிசெய் பாவிருந்தை
உண்டறியார் உண்டோ ? உரை. 1

1040. முற்றத் துறந்த முனிவனை முத்தமிழும்
கற்றுத் தெளிந்த கலைஞனை - உற்றநல்
அன்புருவ மானசுத் தானந்த பாரதியை
மன்புவியில் வாழ்த்துகவென் வாய். 2

வேறு

1041. கொண்டல் வண்ணா ! கோபாலா !
கும்பிட் டுன்னை வேண்டுகிறேன்
அண்டு மன்பால் தமிழன்னைக்கு
அல்லும் பகலும் அலுப்பின்றித்
தொண்டு செய்யும் தவயோகி
சுத்தா னந்த பாரதியிம்
மண்ட லத்தில் என்றென்றும்
வாழ வரம் நீ வழங்குவையே ! 3

## 138. சுவாமி சுத்தானந்த பாரதியார் புத்தேரிக்கு வந்தபோது பாடியது

1042. சிந்தை கனிந்திந்தச் சிறுகுடிலில் காட்சிதர
வந்தருள்சுத் தானந்த மாமுனியே - வந்தனங்கள்
ஆயிரம் செய்தேன், அரிய தமிழ்த்தெய்வக்
கோயில்நீ என்றுளம் கொண்டு. 1

1043. தண்டமிழ்த்தாய் தந்த தவயோக மெய்ஞ்ஞான
பண்டிதசுத் தானந்த பாரதியே! - மண்டுபுகழ்
இந்திய நாட்டில் இமய மலையேபோல்
சந்ததம் வாழ்க தழைத்து. 2

1044. எத்திசையும் கண்டுதொழ எங்கள் புதுவைவளர்
சித்தன்யோ கீசன் திருவருளால் - நித்தமுமே
அன்புருவ மானசுத் தானந்தப் பைங்கிளிநீ
மன்புவியில் வாழ்க மகிழ்ந்து. 3

---

1044. புதுவை - புத்தேரி.

# சரம கவி

---

## 139. திருமூல மன்னர்

1045. தொக்க கொல்லம் ஆயிரத்துத் தொண்ணூற்றெ
[டொன்பதினில்
பக்கமதி ஆடியிரு பான்மூன்றில் - மிக்க குரு
வாரமதில் நள்ளிரவில் மாமூல மன்னவன் இத்
தாரணியின் வாழ்வுநீத் தான். 1

1046. திருமால் திருவடி போய்ச் சேர்ந்துதிரு மூலப்
பெருமான் பெரும்பேறு பெற்றான் - உருமேங்கு
விண்மழை போல வியன்வஞ்சி மாதழுத
கண்மழை வெள்ளங் கடந்து. 2

1047. பொய்யுடலைக் கொண்டு புகழுடலைக் கண்டஞ்சி
வையகம்விட் டோடும் மறலியே - ஐயமறக்
கற்றுத் தெளிந்த கவிவாணர் சொல் வீர
வெற்றி உனக் குண்டோ ? விளம்பு. 3

## 140. மகாத்மா காந்தியடிகள்

1048. திடம்படைத்த கல்நெஞ்சும் திடுக்கிட்டு
நடுநடுங்கிச் சிதறிப் போக
மடம்படைத்த மாபாவி வஞ்சனையால்
காந்திமகான் மடியச் சுட்டான் ;
உடம்பனைத்தும் வாயாக அழுதாலும்
உறுதுயரம் ஒழிந்தி டாதால் ;
இடம்படைத்த உலகாளும் இறையே நீ
எங்கொழிந்தாய் இந்நாள் ஐயா ! 1

---

1048. காந்தியடிகள் மறைந்த செய்தி கேட்டவுடன் சொல்லியது. இதன்பின் வரும் ஆறு பாடல்களும் (1049 - 1054) பின்னர்ப் பாடப்பட்டவை.

வெண்பா

1049. புத்த முனியும் புனிதன் அரிச் சந்திரனும்
உத்தமன் ஏசுவும் ஒன்றுனோன்-மெய்த்தவத்தோர்
வந்தனைசெய் காந்திமகான் வாய்மலரும் பொன்
[மொழியை
எந்தநாள் கேட்போம் இனி ? 2

1050. சத்தியத்தால் மன் அரிச் சந்திரனைத் தண்ணருளால்
புத்தபெரு மானையொத்த புண்ணியனை-உத்தமனும்
அந்தணனைக் காந்தி அடிகளை அன்போடு
சிந்தனைசெய் நெஞ்சே தினம். 3

வேறு

1051. போரின் வெறியால் உலகமெல்லாம்
புரண்டு மறியும் இந்நாளில்
நேரும் சீரும் தரும்நீதி
நெறியீ தென்று காட்டிட, நம்
பார தத்தாய் செய்ததவப்
பயனுய் வந்த காந்திமகான்,
மார்பில் குண்டு பட்டிறந்தான்
மண்ணில் அறமும் மடிந்ததுவோ ? 4

1052. மெய்யும் அருளும் துணையாக
வெற்றி காணும் ஜெகவீரன்,
செய்யும் தொழில்கள் உலகத்தின்
சேமங் கருதிச் செய்பெரியோன்,
ஐயன் ராமன் திருநாமம்
அன்பு பெருகக் கனிந்தோதி
வெய்ய குண்டு பட்டிறந்தான்
விதியே ! நீதி இதுவேயோ ? 5

1053. என்னைச் சுடுகின் றவன்மீதும்
இரக்கங் கொண்டு முகமலர்ந்து
மன்னித் துயிரை விடுவனென்ற
வார்த்தை முற்றும் பலித்ததையா !
உன்னை யொத்த அருளாளர்
உலகில் வேறு கேட்டறியோம் !
அன்னை பரதத் தேவிதரும்
அருமைக் காந்தி மாமணியே ! 6

1054. மெய்யே நெஞ்சில் நாடிடுவார்
விஞ்சும் பொறுமை போற்றிடுவார்
வையம் மகிழ அருள் நெறியில்
வாழ்வு கண்டு வாழ்ந்திடுவார்
தெய்வம் தொழுவார் நடு நீதி
திறம்பா தென்றும் காத்திடுவார்
ஐய மின்றிக் காந்திமகான்
அன்ப ராவார் அறிவீரே. 7

## 141. கஸ்தூரிபாய் இரங்கற்பா

1055. வையம் புகழும் காந்திமகான்
வாழ்க்கைத் துணையாய் வாழ்ந்துநிதம்
செய்யும் தொழில்கள் ஒவ்வொன்றும்
திருந்தச் செய்து கண்கண்ட
தெய்வம் கணவன் என்றுள்ளம்
தெளிந்த தாயே நீயெம்மை
வெய்ய துயரில் வீழ்த்தியின்று
விண்ணு டாளச் சென்றனையே

## 142. அணைந்த ஜோதி*

1056. ஐயம் அறவே நூற்கடலில்
ஆழ்ந்து மூழ்கி ஆராய்ந்து
பொய்யைப் போக்கி மெய்கண்ட
புனிதன் புதுவை மாநகரில்
தெய்வ ஞான தீபமெனத்
திகழ்ந்த யோகி அரவிந்தன்
வையம் காணுப் பேரின்ப
வாழ்வு கண்டு மறைந்தனனே ! 1

வேறு

1057. பீடாரும் வங்க வளநா
டதனில் பிறந்து வந்து,
நீடாழி மோது புதுவைப்
பதியில் நிலைத்து நின்று,
வாடாது மங்கி மறையாமல்
சூறு வளிவரினும்
ஆடா தொளிர்ந்த அரவிந்த
ஜோதி அணைந்ததுவே ! 2

## 143. தாகூர் இரங்கற்பா

1058. அலைவளைத்த புவிமுழுதும் அளந்தபெரும்
புகழுடையான் அரசர் கண்டு
தலைவளைத்து வணங்குமொரு குருதேவன்
சலியாது தரணிமீது

---

*அணைந்த ஜோதி : யோகி ஸ்ரீ அரவிந்தர் ; இப் பெரியார் 4-12-50-ல் மறைந்தனர்.

கலைவளர்த்த கவியரசன் தாகூரின்
றெம்மை யெல்லாம் கைவிட்டு, ஐயோ !
மலைவிளக்கு மறைந்ததென மறைந்திட்டான் !
என்னேஇம் மனித வாழ்க்கை !

## 144. சரோஜினி தேவி

1059. காந்தி திருவடியோ? கற்பகமோ? வாணியமுது
ஏந்தும் எழிற்கரமோ? யாரறிவார்?—ஆர்ந்தபுகழ்
மங்கை சரோஜினியாம் வண்ணக் கிளியின்று
தங்கி யிருக்குமிடம் தான். 1

1060. பைங்கிளிவா வாவென்று பங்கயச் செல்வியுனை
அங்கைகள் நீட்டி அழைத்தாளோ ?—பொங்குபுகழ்
மங்கை சரோஜினிநீ வானுலக வாழ்வு பெற
இங்கிருந்தேகினுய் இன்று. 2

1061. வெட்டி முறித்த விறகெனவோர் வீணையினைச்
சுட்டெரித்த பாவியென்று தூற்ருதோ?-சிட்டர்புகழ்
அன்னை சரோஜினியின் ஆவியுண்ட கூற்றமே!
உன்னையினி என்றும்உலகு. 3

1062. பைங்கிளியாய்த் தேன்கலந்த பாலமுதம்
[உண்டுமையாள்
அங்கையிலே தங்கியுரை யாடுதற்கோ?—இங்கிருந்து
மாதரசி நன்மதுர வாணி சரோஜினி நீ
மீதெழுந்து சென்ருய் விரைந்து. 4

## 145. செல்லையா என்னும்
## தெ. சி. தீத்தாரப்ப முதலியார்*

1063. எப்பாலும் போற்றும் இசைத்தமிழ்ச் செல்வா! என்
அப்பா! அழகியசெல் லையா! நான் – இப்பாரில்
சிந்தை குளிரச் சிரித்தொளிரும் உன்முகத்தை
எந்தநாள் காண்பேன் இனி ?

## 146. கோட்டாறு சதாவதானம்
## கா. செய்குத்தம்பிப் பாவலர்

1064. ஒரும் அவதானம் ஒருநூறு செய்திந்தப்
பாரில் புகழ்படைத்த பண்டிதனைச் – சீரிய
செந்தமிழ்ச் செல்வனைச் செய்குதம்பிப் பாவலனை
எந்தநாள் காண்பேன் இனி ?

## 147. அபிநவ காளமேகம்
## அனந்த கிருஷ்ண அய்யங்கார் பிரிவு

1065. ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து கற்றமகான்
பாரிலிணை யில்லாத பண்டிதன்—சீரிய
அந்தண சீலன் அனந்தகிருஷ்ண நண்பனையான்
எந்தநாள் காண்பேன் இனி ?

---

*ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்களின் அருமைக் குமாரர்.

## 148. நீதிபதி சத்தியநேசன்

1066. தேடித் தேடி மக்கள் அழ,
திகைத்து மனைவி சோர்ந்து விழ,
வாடி உற்றூர் உறவினர்கள்
வற்றாக் கண்ணீர் வடித்தலற,
ஈடும் எடுப்பும் இல்லாத
ஏக நீதி பதியென்றிந்
நாடு புகழ்சத் தியநேச
நண்பன் எம்மைப் பிரிந்தனனே ! 1

1067. ஈசன் பாதம் மறவாமல்
என்றும் போற்றி வழிபடுவோன் ;
ஆசைப் பேயைத் தலையில் அடித்து
அடக்கி யாளும் ஆற்றலுளோன் ;
கூசி டாமல் நடுநீதி
கூறும் கூர்ந்த மதியுடையோன் ;
நேச மிகுசத் தியநேசன்
நிலத்தில் வாழ்வு நீத்தனனே ! 2

1068. ஆங்கி லத்தில் செந்தமிழில்
அரிய நூல்கள் பலகற்றோன் ;
பாங்கு பெறுநல் அடையோகப்
பயிற்சி மிக்க பண்புடையோன் ;
தேங்கி யன்பு கனிந்தொழுகத்
தெள்ளத் தெளிந்த மொழிதருவோன்,
ஓங்கு புகழ்சத் தியநேசன்
உலகை நீத்துச் சென்றனனே ! 3

வெண்பா

1069. சாதி மதபேதம் சற்றேனு மின்றிநடு
நீதி வழுவா நெறிநின்று—பூதலத்தில்
சத்தியம் காணும் தரும தயாளனை நீ
நித்தியம் நெஞ்சே நினை. 4

1070. தேர்ந்த புலவன் தெளிந்த அடயோகி
வார்ந்தின் னமுதொழுகு வாக்கினன்-ஆர்ந்த புகழ்ச்
சத்திய நேசத் தமிழன்புச் செல்வனை நீ
நித்தியம் நெஞ்சே நினை. 5

1071. மாசெலாம் போயகல மௌனவிர தம்காத்துப்
பூசனைகள் செய்தபெரும் புண்ணியவான்—பேசு
சத்திய நேசன் சலியாநல் தொண்டனை நீ [புகழ்ச்
நித்தியம் நெஞ்சே நினை. 6

1072. கண்ணாரக் கண்டு கடவுளைப் போற்றிநிதம்
பண்ணார்ந்த செந்தமிழ்ப்பா பாடுதற்கோ?—
[அண்ணல் நீ
மண்ணுலகில் எம்மை மறந்து மனந்தேறி
விண்ணுலகம் சென்றாய் விரைந்து. 7

## 149. நாகர்கோவில் பி. சிதம்பரம் பிள்ளை பிரிவு

1073. தேர்ந்த தமிழன் சிறந்த வழக்கறிஞன்
கூர்ந்தமதி வாய்ந்த குணசீலன் - ஆர்ந்தபுகழ்த்
தென்னாஞ்சில் நாகைச் சிதம்பரம் பிள்ளையின்
நன்னாமம் போற்றுவோம் நாம்.

## 150. இசையரசு இலட்சுமண பிள்ளை

வெண்பா

1074. கந்தருவ நன்னகர்க்கோ? கண்ணுதல்
[சேவடிக்கோ ?
சந்தமெழு தண்பொதிகைச் சாரலுக்கோ ?—
[முந்துதமிழ்
இன்னிசை மன்னன் இலக்குமணன் ஏகினுன்
மன்னிலத் தெம்மை மறந்து. 1

வேறு

1075. ஆயிரத்து நூற்றிருபத் தையா மாண்டில்
ஆடியெட்டில் ஆதித்த வாரம் தன்னில்,
தூயகலை வளர்த்ததமிழ்த் தியாக ராஜன்
சுவையொழுகு முத்தமிழ் நூல்பலவும் தந்தோன்
வாயில்லாப் பிராணிகளின் வாழ்வுக்காக
வாதம்செய் துயிர்ப்பலியை மறுத்த வீரன்
மேயபுகழ் இலக்குமண நண்பன் எம்மை
விட்டகன்று விண்ணவர்தம் விருந்தா னுனே. 2

வேறு

1076. ஞானி வடலூர் வள்ளலையெந்
நாளும் போற்றும் குணசீலன்
தேனைப் பாலை இசையமுதைச்
சேர்த்தின் கவிகள் செய்திடுவோன்
ஊனை உண்ணேல் உண்ணேல் என்று
ஓதும் அறிஞன் இலக்குமணன்
ஆன வயதெண் பத்தேழில்
அமர வாழ்வை அடைந்தனனே ! 3

## 151. கே. ஜி. சங்கரய்யர் பிரிவு

1077. ஐயமறக் கற்றவனை ஆராய்ச்சி வல்லவனை
செய்வனவெல் லாம்திருந்தச் செய்பவனை -
[மெய்யன்பு
தங்கும் மனத்தவனை சங்கரய்ய மாமணியை
எங்குநாம் காண்போம் இனி !

## 152. ஈழகேசரி ஆசிரியர் பொன்னையா பிரிவு

1078. அன்னையே போல அருந்தமிழை ஆதரித்த
பொன்னையா விண்ணுலகம் போயினனே ! -
[மன்னுபுகழ்ப்
பாவலர் நாவலர் பத்திரிகை ஆசிரியர்
யாவரும் தேடியழ இங்கு.

## 153. ராஜா ஸர். அண்ணமலைச் செட்டியார் பிரிவு

1079. புண்ணியங்கள் பலபுரிந்தோன்
புவிநிறைந்த புகழுடையோன்
புலவர் போற்றும்
கண்ணியவான் தில்லையிலே
கலைவளரப் பெருங்கழகம்
கண்ட கோமான்
தண்ணளியான் நுண்ணறிவோன்
தனவணிகர் குலஞ்செய்த
தவத்தால் வந்தோன்
அண்ணல் அண்ணா மலைமன்னை
இழந்துலகம் அருந்துயரில்
ஆழ்ந்த தம்மா !

வேறு

1080. அன்பின் கடலை அமுத மொழியரசை
துன்பம் துடைத்தருளும் தோன்றலை - இன்பமெழப்
பொன்னுடை தேர்ந்தெனக்குப் போர்த்த
[பெருந்தகையை
எந்நாள்யான் காண்பேன் இனி ! 2

## 154. ஆர். கே. சண்முகம் செட்டியார் பிரிவு

1081. மன்னுதி மன்னர் மதிக்கும் மதிப்புடையான்
பொன்னுடை வந்தெனக்குப் போர்த்தமகான் -
[தென்னாட்டுச்
சிங்கவே றுன திருக்கோவைச் சண்முகனை
எங்கேநான் காண்பேன் இனி !

## 155. தமிழ் முனி

1082. எவ்வேடு தேடிநீ எந்நாட்டில் எப்பதியில்
எவ்வீடு நோக்கியின் றேகினையோ ? - அவ்வான்
அமிழ்தம் அமிழ்தமென அள்ளியள்ளிச் சங்கத்
தமிழ்தந்த சாமிநா தா ! 1

1083. கண்ணுஞ் சடையாமல் கையுந் தளராமல்
உண்ணப் பசியெழுவ தோராமல் - எண்ணி
[யெண்ணிச்
செந்தமிழ்த் தாய்க்குநீ செய்த திருத்தொண்டுக்
கிந்தநிலத் துண்டோ இணை ? 2

1084. சித்திரத்திற் பார்ப்போம் ; சிலைசெய்து
[கும்பிடுவோம்;
புத்தகத்திற் போற்றிப் புகழ்ந்திடுவோம் -
[இத்தரையில்
சந்தப் பொதிகைத் தமிழ்முனியென் றுன்னைநிதம்
சிந்தையிற் கொண்டு தெளிந்து. 3

## 156. திரு. வி. க. பிரிவு

1085. ஏழைத் தொழிலாளிக் கென்றும் துணைநின்று
வாழும் தமிழின் வளம்பெருக்கி - ஊழியங்கள்
செய்யப் பிறந்த திரு. வி. க. சென்றடைந்தான்
தையலொரு பாகனிரு தாள்.

## 157. பண்டிதமணி பிரிவு

1086. பத்தரெலாம் பாராட்டும் பண்டித மாமணிநீ
அத்தன் திருவடிக்கா ளாயினையோ ! - நித்தமவர்
கற்றுக் களிக்கும் கதிர்மணி நல்விளக்கம்
முற்றுப் பெறுவதன் முன். 1

1087. வையமெலாம் போற்றுதிரு வாசகத்தின்
[மெய்ப்பொருளை
ஐயமறக் கண்டின் றடைந்தனையோ ! - செய்யதமிழ்
மன்றத் தறிஞர் மணியாய் ஒளிவீசி
நின்ற கதிரேசா, நீ ! 2

1088. என்று வருவான் எமனென் றெதிர்நோக்கி
நின்று தளர்கின்றேன் நித்தமுமே - மன்றில்
நடங்கண்ட ஈசன் நடராஜன் பாதத்
திடங்கண்டு வைநீ எனக்கு. 3

1089. செந்தமிழ்ச் செல்வம் சிறந்து வளர்ந்துவரச்
சிந்தைமகிழ் பன்னூல்கள் செய்தளித்து - முந்துபுகழ்
பூண்ட கதிரேசப் புலவர் பெருமானை
யாண்டுநாம் காண்போம் இனி ! 4

1090. விஜய வருஷம் விளங்குதுலா மாதம்
இசைய வருந்தேதி எட்டாம் - இசைவளர
அம்புவியில் வாழ்ந்த அறிஞன் கதிரேசன்
நம்பனடிக் காளான நாள். 5

## 158. சகுந்தலை*

1091. மண்ணில் இனிய வாழ்வினுக்கு
வாய்த்த நல்ல துணை யென்ன
எண்ணி யிருந்த மணவாளன்
ஏங்கி ஏங்கி உளம் வருந்தக்
கண்ணிற் காணு விண்ணுலகம்
கடந்து சென்றதேன் ? அம்மா !
வண்ணக் கிளியே ! மடமயிலே !
மாதர் மணியே சகுந்தலையே ! 1

*திருச்சி நண்பர் தி. து. மீனுட்சிசுந்தரம் அவர்களின் அருமை மனைவி சகுந்தலை 30-12-1943-ல் காலமானபோது தமது நண்பரின் மன ஆறுதல் வேண்டிப் பாடியவை.

1092. காதல் முற்றி விளைந்துகனி
கனியும் பருவத்து அம்மா ! நின்
சாதல் கண்ட துயரெமக்குத்
தாங்கொ ணாத துயரேயாம் ;
ஈதல் ஓம்பும் இல்லறத்தின்
இயல்பை எவர்க்கும் உணர்த்த வந்த
கோதி லாத அரியகுலக்
கொழுந்தே ! தேவி சகுந்தலையே ! 2

# கதம்பம்

## 159. நாஞ்சில் நாடு

[நாஞ்சில் நாடு முன்பு தென் திருவிதாங்கூரில் ஒருசிறு பகுதி. பண்டை நாளில் சேர, சோழ, பாண்டிய அரசர்கள் நிரந்தரமாகப் போராடுதற்கு இவ்வளநாடு இடமாயிருந்த தாம். தெற்கும் மேற்கும் குமரிக்கடலையும் வடக்கும் கிழக்கும் பொதிகை மாமலையின் கிளைகளையும் எல்லையாகப் பெற் றிருக்கும் இந்நாடு நீர்வளம் செறிந்ததாகும். பஃறுளியாறு என்று புறநானூறு சிறப்பிக்கும் பேராறு நாஞ்சில் நாட்டில் உற்பத்தியாயிற்றென்று கூறுவதுண்டு. இந்நாடு இப்பொழுது கன்னியாகுமரி மாவட்டத்தின் ஒருபகுதியாய் உள்ளது.]

1093. மாமதில் போல்மலை சூழும் நாடு - வானம்
மாதமும் மாரி பொழியும் நாடு ;
பூமக ளின்முக மாகும் நாடு - சேரர்
பொன்முடி சூடிப் புரக்கும் நாடு. 1

1094. பாண்டியர் வந்தணை செய்த நாடு - சோழர்
பண்டு முடிதரித் தாண்ட நாடு ;
வேண்டு பொருள்கள் விளையும் நாடு - சோலை
வேலியாய்ச் சூழ்ந்தணி செய்யும் நாடு. 2

1095. நெஞ்சில் மிகுந்த கருணையெல்லாம் - இங்கு
நீராக மாறி நிறைந்திடவே,
வஞ்சிமன் கட்டிய பேய்ச்சிப்பாறை - ஏரி
வற்றுது பாயும் வள நாடு. 3

1096. ஆயிரங் காலால் நடந்து நடந்தமுது
அன்னை பழையா றளிக்கும் நாடு ;
தீய்வு கரிவறி யாத நாடு - நித்தம்
செல்வம் பொழியும் திருநாடு. 4

---

1094. பாண்டியன் அணை, மும்முடிச் சோழபுரம் இவை சான்றுகள். பாண்டியர் சோழருடைய பல சிலாசாசனங்கள் இங்குக் கிடைக்கின்றன.

1095. வஞ்சிமன் - திருமூல மன்னர்.

1097. க்ஷேமமாகப் பயிர் செய்திடவே - ஈசன்
சேவடி போற்றிப் பணிந்துழவர்
பூமி பலிதமாம் நாளிலே ஆயிரம்
பொன்னேர்கள் பூட்டி உழும் நாடு, 5

1098. பண்ணை பெருத்த பழநாடு – சுற்றிப்
பார்த்திடக் கண்கள் குளிரும் நாடு ;
மண்ணையும் பொன்னாக மாற்றும் நாடு - கவி
வாணர் புகழும் தமிழ்நாடு. 6

1099. செந்நெற் பயிர் அலை மோதும் நாடு ; - வாழை
தென்னை கமுகு செழிக்கும் நாடு ;
மன்னிய முல்லை மருக்கொழுந்தின் - நல்ல
வாசம் எழுந்து கமழும் நாடு. 7

1100. காடு மலையெல்லாம் மேய்ந்துவந்து – பசு
கன்றினை ஊட்டிக் களிக்கும் நாடு ;
ஆடுகள் மந்தையாய் வாழும் நாடு - கண்ணுக்கு
ஆனந்தக் காட்சி யளிக்கும் நாடு. 8

1101. தேவர் திருக்கோயில் ஓங்கும் நாடு – மேழிச்
செல்வர் பதிகள் சிறக்கும் நாடு ;
மூவர் தமிழும் முழங்கும் நாடு – திரை
முத்தினை வீசிக் கொழிக்கும் நாடு. 9

1102. புண்ணியஞ் செய்தவர் வாழும்நாடு - நெல்லைப்
பொன்மலை போலக் குவிக்கும் நாடு ;
எண்ணும்பல தொழில் செய்யும் நாடு - நீதி
ஏந்திய செங்கோல் வளர்க்கும் நாடு. 10

1103. கொண்ட நிலத்தில் விளைந்து வரும் - அந்தக்
கூழும் அமுதாகக் கொள்ளும் நாடு ;
கண்டு தொழுதுகை கூப்பி நின்று - பெறும்
காசை விடமாகக் காணும் நாடு. 11

1104. வெற்றி சுதந்திரம் வேண்டும் நாடு – சாதி
வேற்றுமை என்றும் வெறுக்கும் நாடு ;
ஒற்றுமையாக ஒழுகும் நாடு – தேச
ஊழியத் தாலே உயரும் நாடு. 12

1105. தென்றல் உலவித் திரியும் நாடு – உடற்
சீக்கெலாம் ஓட்டித் துரத்தும் நாடு ;
என்றும் தழைத்தறம் ஏறும் நாடு – வையத்து
ஏதும் இணையிலா நாஞ்சில் நாடே. 13

## 160. நாஞ்சில் நாட்டு வேளாளர் பாக வழக்கு

### கண்ணன் துதி

1106. தஞ்சம் என்றவர் தம்மை அளிப்பவன்
கஞ்சன் மாமரு கன்கழல் போற்றுவாம்,
நஞ்செய் நன்னிலம் ஓங்கிய நாடிதில்
விஞ்சு பாக வழக்கை விளம்பவே.

### வேறு

### காரணவரைக் கண்டு அனந்திரவர்கள் கூறுவது

1107. காணியெலாம் ஆளும் காரணவர் – உம்மைக்
கண்டு தொழுதிவை சொல்ல வந்தோம் ;
வீணர் இவரென் றிகழ்ந்திடாமல் – கேட்டு
வேண்டும் விடைகள் பகரும், ஐயா ! 1

---

1107. காரணவர் - குடும்பத் தலைவர். அனந்திரவர் - மருமக்கள் தாயம் என்னும் தாயமுறையைப் பின்பற்றிய குடும்பத்தில் காரணவருக்கு இளையவராயுள்ளவர்.

1108. பற்றுப் பருக்கையும் உண்டுவிட்டீர் - வெறும்
பானையைப் பங்கிட வைத்துவிட்டீர் :
சற்றும் கருணை உமக்கிலையோ ? - எங்கள்
சங்கட முற்றும் அறிகிலீரோ ? 2

1109. வட்டியிலே நெல் அளந்து நீர் - ஒவ்வொரு
மாதமும் தந்திட வேதனை ஏன் ?
குட்டிக் கரணங்கள் போட்டிடினும் - இனிக்
கோர்ட்டு விதிகள் அழிவதுண்டோ ? 3

1110. யானைக் குலத்து நீர் வந்தவரோ - நாங்கள்
ஏழை எறும்பின் குலத்தவரோ ?
மான மிலாது பெரும்பங்கு கேட்டிட
வாயும் சிறிதுமே கூசலையோ ? 4

1111. கைப்பொருள் எல்லாம் கடத்திவிட்டீர் - நூறு
கள்ளக் கடன்களும் காட்டிவிட்டீர் ;
பப்படம் போல நொறுங்கிடோமோ - இந்தப்
பாரமும் நாங்கள் பொறுப்போமோ ? 5

1112. கூனக் கிழவிகள் கொட்டை நூற்று - முன்னம்
கூட்டிய தேட்டம் எமக்கிலையோ ?
ஆனபொருளில் அதிகம் எடுக்க - நீர்
ஆசைப் படுவது எக்காரணமோ ? 6

1113. பத்துத் தலையுள்ள ராவணரோ ? - பெரும்
பங்கு நீர் கேட்ட முறையும் ஏதோ ?
சொத்துக் குரியரும் நீவிரேயோ ? - நாங்கள்
தோட்டப் புழுக்களோ ? சொல்லும் ஐயா ! 7

---

1111. பப்படம் - அப்பளம்.

1114. உள்ள வகை யெல்லாம் உங்களுக்கோ ? - நாங்கள்
உண்ணுத சோறும் உமதேயோ ?
கள்ள வழக்குஇனிச் செல்லாதையா ! அந்தக்
காலமும் சென்று கழிந்ததையா ! 8

1115. பண்ணை முழுவதும் உமக்காஞல் - எம்மைப்
பத்திரம் ஒப்பிடத் தேடுவதேன் ?
கண்ணை விழித்துநீர் கண்டீரோ ? - இந்தக்
காலத்தின் போக்கும் உணர்ந்திடீரோ ? 9

1116. சீறிப் பறித் தெங்கள் வாயமுதை - உங்கள்
செல்வர்க் களிப்பது அழகாமோ ?
தேறித் தெளிந்த பெரியவரே - இது
தெய்வம் பொறுக்கும் செயல் ஆமோ ? 10

1117. தேடிய தேட்டம் அளித்த தெல்லாம் - உங்கள்
செல்வச் சிறுவர்க்கும் போதாதோ ?
கூடஇப் பங்கும் பிடுங்கி அவர்க்குக்
கொடுத்திட உள்ளம் துணிந்தீரோ ? 11

1118. நெற்றி வியர்வை நிலத்தில்விழ - நீரும்
நித்தம் உழைத்தது எமக்கேயோ ?
பற்றிலா நெஞ்சம் படைத்தவரே - பெரும்
பங்குநீர் கேட்கும் முறையும் ஏதோ ? 12

1119. கட்டி உழுவதும் மக்களுக்காம் - அந்தக்
காளைக்கு வைக்கோல் குடும்பத்திலாம் ;
சட்டம் இதுநல்ல சட்டம், ஐயா ! - எந்தச்
சாத்திரம் கண்டு படித்தீர் ஐயா ! 13

---

1115. ஒப்பிடுதல் - கையெழுத்துச் செய்தல்.

1120. குண்டுரம் தோட்டக் குழைகளை - நீரும்
குடும்ப வயலில் இடுவதுண்டோ ?
உண்ட உணவுக்கு வஞ்சகம் செய்பவர்
உம்மைப் போல் இந்த உலகில் இல்லை. 14

1121. பண்டம் பொருளெலாம் கொள்ளை கொண்டீர் -
பங்கும் அதிகமாய் வேண்டுகின்றீர் ; [மேலும்
சண்டைக்கும் நல்ல கொடி கட்டினீர் - இது
சற்றும் உமக்குத் தகுமோ ? ஐயா ! 15

1122. கொள்ளிக் காசன்றி உம் மக்களுக்கு - எங்கள்
குடும்ப வகையில் உரிமை உண்டோ ?
அள்ளிப் பெரும்பங் கெடுத்தவர் கையில்
அளிப்ப துமக்குச் சரியாமோ ? 16

1123. சாகை சாகை என்று சத்தமிட்டீர் - அந்தச்
சாகைகள் தம்முள்ளே ஒப்பதுண்டோ ?
ஊகமாய்த் தாவர நூலைப் படித்து - அதன்
உண்மை வழிகண் டொழுகுவீரே. 17

1124. ஆறு பிஞ்சுள்ள தொருகிளையாம் - மற்றது
ஆயிரம் கொண்ட பெருங்கிளையாம் ;
ஏறும் உணவுப் பொருளினை - இம்மரம்
எப்படிப் பங்கிடும் ? செப்புவீரே. 18

1125. சாகைப் பாகம் அனியாயப் பாகம் - அது
சண்டைகள் மூட்டும் சழக்குப் பாகம் ;
நோக மனதைப்புண் ணுக்கும் பாகம் - ஒரு
நூல்வழி சென்றிடா நொண்டிப் பாகம். 19

---

1123. சாகை - கிளைக்குடும்பம்.

1126. இருந்தும் இறந்தவர் ஆக்கும் பாகம் - எம்மை
ஏழைக ளாக்கத் துணியும் பாகம் ;
திருந்தும் அறிஞர் இகழும் பாகம் - நன்மை
சேராத பாகம் அச் சாகைப் பாகம். 20

1127. சாகைப் பாகம் சட்ட மாக்குவதே - எங்கள்
சாவுக்குத் தூது விடுவது, ஐயா !
காகமாய் எங்கும் பறந்து திரிந்து – இன்னும்
காலம் கழிப்பது கஷ்டம், ஐயா ! 21

1128. சட்டம் தெரிந்தவர் கூறும் பாகம் - தர்ம
சாத்திர சம்மத மானபாகம் ;
திட்டமாகச் செல்வம் வளர்க்கும் பாகம் - நாங்கள்
செப்பும் தனித்தனிப் பாகம், ஐயா ! 22

1129. பாடு படவழி காட்டும் பாகம் - கல்விப்
பட்டங்கள் பெற்றிடச் செய்யும் பாகம் ;
கூடிய சோம்பலை ஓட்டும் பாகம் - நாங்கள்
கூறும் தனித்தனிப் பாகம், ஐயா ! 23

1130. இட்டமாய் யாவரும் வேண்டும் பாகம் - எம்மை
இராசாக்க ளாக்கி இருத்தும் பாகம் ;
கட்டமெலாம் அற நீக்கும் பாகம் - நாங்கள்
காட்டும் தனித்தனிப் பாகம், ஐயா ! 24

1131. வாழ்வின் பொறுப்பை உணர்த்தும் பாகம் - எம்மை
வம்பு வழக்குகள் போக்கும் பாகம் ;
தாழ்வினை யெல்லாம் அகற்றும் பாகம் - நாங்கள்
சாற்றும் தனித்தனிப் பாகம், ஐயா ! 25

1132. வோட்டுக் குரியவ ராக்கும் பாகம் - எம்மை
ஊரார் மதித்திடச் செய்யும் பாகம் ;
நாட்டுக்கு நல்வழி காட்டும் பாகம் - நாங்கள்
நாட்டும் தனித்தனிப் பாகம், ஐயா ! 26

1133. செம்பாக மாகிய பாகம் இது ; காலம்
சென்றாலும் கைத்திடாப் பாகம் இது ;
வம்பாக நீர்கெட்டுப் போக வேண்டாம் – எங்கள்
வார்த்தையில் நம்பிக்கை கொள்ளும், ஐயா ! 27

1134. சாட்சி களைத்தேடி ஓடவேண்டாம் - வக்கீல்
சாமிக்குத் தட்சிணை வைக்க வேண்டாம் ;
ஆட்சிப் பொருளெலாம் விற்கவேண்டாம் – ஏழை
ஆண்டி பரதேசி யாக வேண்டாம். 28

1135. கோர்ட்டு வாசல்சென்று காக்க வேண்டாம் – அங்கே
குள்ள நரிபோல நிற்க வேண்டாம் ;
ஏட்டுக் குமஸ்தாவைக் காண வேண்டாம் - ஜட்ஜி
ஏச்சுக் கேட் டுள்ளம் எரிய வேண்டாம். 29

1136. ஊர்வகை ஆயிரம் கோட்டை நிலம் – பக்கத்து
உள்ளதனால் எமக்கு என்ன பயன் ?
ஓர்பிடிச் சோற்றுக்கு உதவிடுமோ ? – அதன்
உண்மையும் நீர் அறியாததுவோ ? 30

1137. கூட்டுக் குடும்பங்கள் வேண்டாம், ஐயா ! – இனிக்
கும்பி பொறுக்கவும் மாட்டாது, ஐயா !
பாட்ட நிலமும் கிடையாது, ஐயா ! – எங்கள்
பாகத்தைப் பங்கிட்டுத் தாரும், ஐயா ! 31

1138. ஆறு சென்டு பூமி போதும், ஐயா ! – சொந்தம்
ஆனால் அதுவும் ஆறு ஏக்கர், ஐயா !
சோறுதந் தெங்களைக் காக்கும், ஐயா ! – அது
சொன்ன படிக்கும் விளையும், ஐயா ! 32

---

1137. பாட்ட நிலம் - குத்தகைக்கு வாங்கிய நிலம்.

1139. காப்பிக் கடைபோக வேண்டுமென்ருல் - எங்கள்
கையில் அரைக் காசும் உண்டோ ? ஐயா !
தாப்புத் தரிப்புவே றில்லை, ஐயா ! - பங்கைத்
தந்துவிட்டால் வெகு புண்யம், ஐயா ! 33

1140. பங்கும் கடைசியாய்ச் செய்யும் பங்காம் - இதில்
பட்ச பாதம் செய்ய நீதி உண்டோ ?
தங்கும் புதுச் சட்டம் வந்திடுமேல் - உங்கள்
சந்ததி நாங்களும் ஆகுவமோ ? 34

1141. வீரியப் பேச்செலாம் விட்டுவிடும் - உள்ள
வீதம் பகிர்ந்து கொடுத்துவிடும் ;
சூரியன் மேற்கே உதித்திடினும் - எங்கள்
சொத்து அவகாசங்கள் போய்விடுமோ ? 35

1142. நல்லவர் உண்மை நடுநிலை - யுள்ளவர்
நாட்டிற் பெரியவர் நம்வழக்கில்
நெல்இது சாவி இதுவெனக் - கண்டுஇனி
நிறுத்துவர் நீதி அறிந்திடுவோம். 36

## 161. நாகர்கோவில் மகாத்மா காந்தி ஞாபகார்த்த ஸ்தூபி

1143. மங்கை மதுரம், மணவாளன் க்ருஷ்ணன் ; இவர்
செங்கைப் பொருளின் திருப்பணியாம் - பொங்குபுகழ்
காந்திமகான் கற்பித்த கற்பனைகள் அத்தனையும்
ஏந்தியெழும் தூபி இது. 1

---

1141. அவகாசம் - பாத்தியதை.

1143. இந்த ஸ்தூபி நகைச்சுவையரசு என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் தம்பதிகளால் கட்டப்பெற்றது. இங்குக் குறித்த இரு பாடல்களும் ஸ்தூபியிலுள்ள கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன.

1144. வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவன் வானுறையும்
தெய்வத்தோ டொத்த திருவுடையான் - பொய்யற்ற
காந்திமகான் கற்பனைகள் கற்றுக் கடைப்பிடித்த
மாந்தரென்றும் வாழ்வர் மகிழ்ந்து. 2

## 162. நாகர்கோவில் இந்து கலாசாலை

### வாழ்த்து

1145. தேசிக விநாயகநின் சேவடியைச் சேவித்து
வாசமலர் தூவி வணங்குகின்றேன் - மாசிலா
இந்துகலா சாலைவளர்ந் திந்நாகை நன்னகரில்
சந்ததமும் வாழவரம் தா.

## 163. தேரூர் நூல் நிலைய வாழ்த்து*

1146. செய்யகம் சூழுமூர் செந்தமிழ் ஓங்குமூர்
வையகம் போற்றழகி வாழுமூர் - மெய்யுணர்ந்து
இந்திரன் தேர்விட் டிறங்குமூர் இந்தவூர்க்கு
எந்தவூ ராகும் இணை ? 1

1147. கண்டவர்தம் கண்ணும் கருத்தும் கவருமொரு
மண்டபமாய் ஓங்கி வளர்ந்ததால் - பண்டுமுதல்
செய்யதமிழ்த் தாய்மீது தேரூர்ப் பெருமக்கள்
ஐயமறப் போற்றிவரும் அன்பு. 2

*தேரூர்ப் பெருமக்கள் 'கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை நினைவு நிலையம்' எனப் பெயரிய பெரியதொரு நூல் நிலைய மண்டபத்தைத் தங்களூரில் கட்டி, 1952-ஆம் ஆண்டு மே மாதம் திறப்பு விழா நிகழ்த்தினர். அதுகாலைக் கவிமணி அவர்கள் தேரூர்ப் பெருமக்களை இக் கவிகள் மூலம் வாழ்த்தியருளினார்கள். இந்தத் தேரூர் தான் கவிமணி பிறந்த ஊர்; சுசீந்திரத்திற்கு வடக்கே சுமார் ஒருமைல் தூரத்தில் உள்ளது.

1148. நாவிற் குடியிருந்து நல்லமுதச் சொல்லுதவும்
தேவி அழகி திருவருளால் - மேவுபுகழ்
நன்னகர மாம்தேர் நகரமென்றும் வாழியவே
பொன்னகரம் போலப் பொலிந்து. 3

## 164. பாலராமபுரத்துத் தெய்வயோக சங்கம்

1149. ஆல நிழலில் சற்குருவாய்
அமர்ந்த பெருமான் திருவருளால்
பால ராம புரமென்னும்
பதியில் வைகும் இனியகுண
சீலர் அடியர் அறம்பேணும்
தெய்வ யோக சங்கத்தார்
ஞால மீது தளராதெந்
நாளும் வாழ்க வாழ்கவே !

## 165. ஆரல்வாய்மொழி

1150. கம்பனையும் சோழனையும் காத்திடுவோம் காற்றரசின்
வம்பினுக்கும் அஞ்சாது வாழ்ந்திடுவோம்—உம்பர்
[கோன்
வானமழை பெய்ய மறுத்திடினும் மற்றெங்கள்
கூனமழைக் குண்டோ, குறை ? 1

1151. பச்சடியும் தீண்டேன் பருப்பினிலும் கைவையேன்
கிச்சடியும் தீண்டேன் கிழங்கும் எடேன்—மெச்சு
[புகழ்
ஆரைப் பதியில் அவித்துக் கடைந்துவைத்த
கீரைக் கறிகிடைக்கு மேல். 2

1152. அங்கயற் கண்ணிக்கும் அண்ணலுக்கும் ஆபத்தில்
தங்குமிடம் ஈந்த தனியூராம் – பொங்குபுகழ்
ஆரையூர்க் கீடாய் அவனியின் மீதெந்த
ஊரையான் சொல்வேன் உணர்ந்து. 3

## 166. நெல்லை நகரசபை வாழ்த்து

### நகரம்

1153. மாந்தரெலாம் போற்றி வணங்கும் பெருமான்எம்
காந்திமதி நாதன் கருணையினால் – ஏந்துபுகழ்
நன்னகராம் நெல்லை நகரமென்றும் வாழியவே
பொன்னகரே போலப் பொலிந்து. 1

1152. மதுரையில் முஸ்லிம்கள் படையெடுத்து வந்தபோது மீனாட்சி சுந்தரேசுவரரைக் கிலுகிலுப்பைக் காட்டில் கொண்டு போய் மறைத்து வைத்தார்கள் என்று ‘மதுரைத் தலவரலாறு’ கூறுகிறது. இக் கிலுகிலுப்பைக் காடு ஆரல்வாய்மொழியாக இருக்கலாம். இங்கே மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் உள்ளது. இங்குப் பிரதான விழா முதலியன சாஸ்தாவுக்குக் கொண்டாடப் படுகிறது. இதனால், மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் சாஸ்தாங் கோவிலோடு பிற்காலத்துத் தோன்றியது என்று நினைக்க இட முண்டு. இந்த மதுரை வரலாற்றை உட்கொண்டதே இக் கவிதை.

### நகர சபை

1154. சொல்லற் கரிய கலைவளரத்
தொழில்கள் வளரப் பொருள்வளர
தொல்லை தருநோய் அறநீங்கிச்
சுகமாய் மக்கள் வாழ்ந்துவர
நல்ல நல்ல நெறிகண்டெந்
நாளும் போற்றிப் பணியாற்றி
நெல்லை நகர சபையுலகில்
நீடு வாழ்க வாழ்கவே ! 2

### சபைத்தலைவர்

1155. அல்லும் பகலும் உழைத்திடுவோன்
அன்பு கனிந்த உரைதருவோன்
நெல்லை நகர சபைத்தலைவன்
நேர்மை காணும் நெறியுடையான்
நல்லன் நல்லா ரெல்லார்க்கும்
நண்பன் ராம சாமிநிதம்
முல்லை முதல்வன் துழாய்மார்பன்
முகுந்தன் அருளால் வாழியவே ! 3

## 167. பாளையங்கோட்டை நகரசபை வைரவிழா வாழ்த்து

### கடவுள் வணக்கம்

1156. தென்னாட்டில் கல்வியினால் செல்வம் தன்னால்
சீருயர்ந்த நகரமென் றறிஞர் போற்றி
முன்னாட்டுப் பாளையமா நகரை யாளும்
முறைதேர்ந்த நகரசபைக் கினிது வாய்த்த

சொன்னாட்டு வைரவிழாச் சிறப்புற் றோங்க,
தொண்டருக்குத் தொண்டாற்றித்
[துணையாய் நிற்போன்
மின்னாட்டு விரிசடையான் பாதப் போதை
மெய்யன்போ டெப்போதும் வணங்குவோமே! 1

### சபை வாழ்த்து

1157. பீடு பெறவே நல்வாழ்வு
பேணும் வழிகள் பலகண்டு
பாடு பட்டுத் தளராது
பணிகள் புரியும் சபையென்ன
நாடு புகழும் பாளையமா
நகர சபையிந் நானிலத்தில்
நீடு வாழ எமையாளும்
நெடுமா லருளை வேண்டுவமே! 2

### தலைவர் வாழ்த்து

1158. ஐயமறப் பன்னூலும் ஆய்ந்து கற்றோன்,
அயராது பொதுநலத்துக் குழைக்கும் அன்பன்,
மெய்யுணர்ந்த காந்திமகான் விதித்த வெல்லாம்
வேதவிதி என்று கடைப் பிடிக்குந் தொண்டன்,
செய்யநெறி கண்டுசபைத் தலைமை தாங்கும்
திறலோன்சுப் பிரமணியச் செல்வன் என்றும்
வையமெலாம் புகழ்பாடி வணங்கும் செந்தில்
மாமுருகன் திருவருளால் வாழ்க மாதோ! 3

## 168. தில்லைப் பொருட்காட்சி

1159. தேசம் செழிப்படையச் செய்கருமம் நன்றாக
மாசில் புகழும் வளர்ந்தோங்க — ஈசனருள்
முந்தியெழுந் தில்லை முதுநகரின் காட்சியெலாம்
வந்தின்று காண்பீர் மகிழ்ந்து. 1

1160. கைத்திறன் கண்டோம் கதரின் பெருமை கண்டோம்
உத்தமநம் நாட்டின் உயர்வுகண்டோம் – அத்தன்
அருட்காட்சி கண்டதிரு வாதிரையில் தில்லைப்
பொருட்காட்சி கண்ட பொழுது. 2

1161. பண்டிழந்த செல்வமெலாம் பாரதத்தாய் கண்குளிரக்
கண்டுகண் டுள்ளம் களித்தனளே – தொண்டர்சீர்
நாடும் சிதம்பர நன்னகர்க்கிந் நாள்வாய்த்த
ஈடில் பொருட்காட்சி யில். 3

1162. நல்லநல்ல பஞ்சிருக்க நங்கை துணையிருக்க
மில்லில் எழும் ஆடை விரும்புவதேன்?–இல்லிடத்தே
வெண்ணெய் இருக்க விலைக்குநெய் வாங்குவது
கண்ணியமோ ? புண்ணியமோ ? காண். 4

1163. கப்பற் படையைக் கடற்படையை ஓட்டுபடை
எப்பொழுதும் ஏழைகளுக் கேற்றபடை – இப்புவியில்
சாந்தியினைப் போற்றுபடை சர்க்காப் படைஎங்கள்
காந்திமகான் கைப்படையே காண். 5

1164. பாடுபட்டுத் தேடும் பணமெல்லாம் பாரதநல்
நாடுவிட்டுப் போதல் நலமாமோ ? – கேடில்
பருத்தி பயிர்செய்வோம் பஞ்செடுப்போம் [நூற்போம்
திருத்தமுற நெய்வோம் தினம்.

1165. கைத்தொழிலே மெய்த்தொழிலாம் கைகூப்பும் [சேவகமே
பொய்த்தொழிலாம் என்னுமொழி போற்றியே – [இத்தரையில்
வாழ்வை நடத்தும் வலிமை யுடையவர்க்குத்
தாழ்வில்லை என்றுமே தான். 7

1166. எல்லையிலா நல்ல எழிற்காட்சி பாரதத்தாய்
தில்லையிலே கண்ட திருக்காட்சி - தொல்லுலகம்
போற்றும் சுதேசப் பொருட்காட்சி என்றென்றும்
ஏற்றமுற வாழ்க இனிது. 8

வேறு

1167. வாழ்க நல்லறம் ! வாழ்க சுதந்திரம் !
வாழ்க செல்வம் வளர்க்கும் தொழிலெலாம் !
வாழ்க செந்தமிழ் ! வாழ்கநம் பாரதம் !
வாழ்க காந்தி மகான் நிலத்தென்றுமே ! 9

## 169. தஞ்சாவூர்க் கலைக்கூடம் வாழ்த்து

1168. பண்டைத் தமிழரின் பண்பாட்டை மக்களின்று
கண்டறிய வந்த கலைக்கூடம் - மண்டுபுகழ்
ஓங்கியெழும் தஞ்சை யுடையார் திருவருளைத்
தாங்கிநிதம் வாழ்க தழைத்து. 1

வேறு

1169. முற்று மதியை அழகுபெற
முடியிற் சூடும் முதல்வா நின்
பொற்றுள் மலரை அன்போடு
புகழ்ந்து போற்றிப் பணிகின்றேன்
கற்றூர் தஞ்சை மாநகரில்
கண்ட கவிஞர் கலைக்கூடம்
வற்றுப் பொன்னி நதிபோல
வாழ வரம்நீ வழங்குவையே ! 2

## 170. திருநாவுக்கரசு வித்தியாசாலை

### நேமத்தான்பட்டி

1170. தேசமக்கள் யாவருந்தன் செல்வமக்க ளேஎன்னப்
பாசமுற நோக்கும் பழனியப்பன்—ஆசைமிகுந்து
அப்பர் பெயரால் அமைத்தகல் விச்சாலை
எப்பொழுதும் வாழ்க இனிது. 1

1171. ஓடி விளையாடி உல்லாச மாய்நின்று
பாடிக் கதைகள் பலசொல்லிக்—கூடிநம்
மக்கள் பயின்று மகிழ்ந்துவரும் காட்சி அந்தச்
சொர்க்கத் திலும்உண் டோ ? சொல். 2

1172. நித்தம் இளமை நிலைக்கும் படிஈசன்
வைத்திலனே என்று வருந்துகின்றேன் – பத்திமிகு
நாவரசின் நாமங்கொள் நற்கல்விச் சாலையின்சீர்
யாவையுமே கேட்டறிந்த யான். 3

1173. தேவரும் போற்றும் திருநாடு தென்னுடாம்
யாவதும் ஐயம் இதிவில்லை—மூவர்
தமிழ்தரும் இன்பம் தருமோ அவ்வானின்
அமிழ்தமும் சொல்வாய் அறிந்து. 4

1174. அப்பர் இசையரங்கும் அண்ணல்அரிச் சந்திரன்பேர்
எப்பொழுதும் போற்றும் இளம்படையும் – ஒப்பரிய
பாரதத் தாயைப் பணிந்து பணிசெய்து
சீருடன் வாழ்க தினம். 5

## 171. காரைக்குடி செட்டிமார் நலஉரிமைச் சங்கம்

1175. பாரதத்தாய்க் குகந்தபல பணிபுரிந்து
பசுந்தமிழைப் பாது காத்துச்
சீருயரத் தொழில்பேணி, அறம்பேணி,
செப்பரிய செல்வம் பேணி,
காரைநகர்த் தனவணிகர் நலவுரிமைக்
கழகமெக் காலும் வாழ
ஆரணிந்து தில்லையிலே ஆடுகின்ற
அம்பலவன் அருள்க மாதோ !

## 172. காரைக்குடி மீனாக்ஷிசுந்தரேசர் உயர்நிலைப்பள்ளி வெள்ளிவிழா

1176. சிந்தைக் கினிய திருக்காரைச்
செல்வ நகரில் மீனாக்ஷி
சுந்த ரேசர் கருணையினால்
தோன்றி வளரும் பள்ளியிலே
வந்து மலர்ந்த 'தாமரை' நீ
வாடா தென்றும் மணம்வீசிச்
சந்தத் தெய்வ மலர்போலத்
தரணி மீது வாழ்கவே !

---

1176. இது 'தாமரை'ப் பத்திரிகையில் வெளிவந்தது.

## 173. தேவகோட்டைத் தமிழிசைப் பள்ளி

### வாழ்த்து

1177. பாரணிந்த பெரும்புலவர் பகுத்து வைத்த
பண்ணினங்கள் நடனங்கள் பலவும் கற்கச்
சீரணிந்து புகழோங்கும் தேவ கோட்டைத்
திருநகரில் செல்வர்கலை வளர்க்கும் அன்பர்
தாரணிந்த முடிமன்னர் வியக்கு மாறு
தந்ததமி ழிசைப்பள்ளி தழைத்து வாழ
நீரணிந்து பிறைசூடித் தில்லை மன்றில்
நின்றாடும் ஈசனருள் செய்க மாதோ !

## 174. காட்டுப்புத்தூர் உயர்நிலைப் பள்ளி

### வாழ்த்து

1178. கயல்விழி மங்கை பங்கா !
கைலைமீ தமரும் ஈசா !
அயர்வற உழைக்கும் அன்பர்
ஆளுமிக் காட்டுப் புத்தூர்
உயர்நிலைப் பள்ளி இன்னும்
உலகினில் எவரும் போற்ற
வயிரநல் விழாவும் கண்டு
வாழநீ அருள்செய் வாயே !

## 175. இராமநாதன் கல்லூரி

1179. குன்றை வில்லாய் வளைத்தபிரான்
குகனை ஈன்ற கண்ணுதலான்
மன்றுள் நடனம் செய்கின்ற
மங்கை பாகன் திருவருளால்
என்றும் என்றும் தழைத்தோங்கி
இராம நாதன் கல்லூரி
நன்று நாடும் சுன்னுக
நகரில் வாழ்க ! வாழ்கவே !

## 176. இலங்கைப் பாரதி சங்கம்

1180. சீரியநல் லறப்பணிகள் பலவும் செய்து
செந்தமிழை வளம்பெருகத் தினமும் பேணி,
வீரசுதந் திரங்காத்துக் காந்தி யண்ணல்
விதித்திடும்மெய் யன்புநெறி கடைப் பிடித்து,
தாரணியில் புகழோங்கும் தில்லைக் கூத்தன்
தண்ணருளால் அழகியதென் இலங்கைத்தீவில்
பாரதியின் பெயர்போற்றும் இளைஞர் சங்கம்
பல்லாண்டு பல்லாண்டு வாழ்க மாதோ !

## 177. தமிழிசை

1181. வெந்தழல் நீராகும் ; வெள்ளெலும்பு பெண்ணுகும் ;
வந்தமத வேழம் வணங்கிடுமே ; — சந்தமெழப்
பாடுவார் உள்ளுருகிப் பாடும் தமிழிசைக்கு
நீடுலகில் உண்டோ நிகர் ?

## 178. தமிழிசைச் சங்கம்

1182. ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால் - பூதலத்தில்
எங்கும் புகழ்பெற் றினிய தமிழிசைச்
சங்கம் வளர்க தழைத்து. 1

1183. வேதப் பரியான் விரிசடையான் கங்காள
நாதன் நடராஜன் நல்லருளால் - பூதலத்தில்
பொங்கு புகழ்பெற்றுப் பொலிந்து தமிழிசைச்
சங்கம் வளர்க தழைத்து. 2

## 179. நாடகம்

1184. கண்ணைச் செவியைக் கருத்தைக் கவர்ந்து நமக்கு
எண்ணரிய போதனைகள் ஈவதற்கு - நண்ணுமிந்த
நாடக சாலையொத்த நற்கலா சாலையொன்று
நீடுலகில் உண்டோ? நிகழ்த்து.

## 180. ஒளவையார் நாடகம்*

1185. மந்திரமோ? தந்திரமோ? மாயமோ? சண்முகத்தின்
விந்தை நடிப்பு விசித்திரமோ? - செந்தமிழ்நாடு
அன்றுகண்டு போற்றி அடிபணிந்த ஒளவையை
இன்றுகண்ட காட்சி இது. 1

---

* நாகர்கோவில் ஒழுகினசேரி நியூ சரஸ்வதி ஹாலில் 8-9-1950 முதல் நாஞ்சில் நற்றவப் புதல்வர்கள் T. K. S. சகோதரர்களின் கலைக் குழுவினர்கள் நடத்திய "ஒளவையார்" நாடகம் கண்டு களித்து, உள்ளம் பொங்கி உவந்தளித்த வாழ்த்துப்பா.

1186. நாடும் இசையால் நடிப்பால் அரங்கமைப்பால்
பீடுபெறு செந்தமிழ்ப் பேச்சழகால் - நீடுலகில்
எவ்வெவரும் கண்டுமகிழ்ந் தின்புறுதற் கேற்றதிந்த
ஔவைவரு நாடகமே யாம். 2

1187. பண்டிதரும் பாமரரும் பாலர் முதியோரும்
பெண்டுகளும் ஒக்கலையில் பிள்ளைகளும்-கண்டுகண்டு
சித்தம் மகிழச் சிறந்துதமிழ் நாடகங்கள்
நித்தம் வளர்க நிலத்து. 3

## 181. மதுரை தேவி பால விநோத சபை

1188. மாமதுரை தேவியருள் வாய்த்தசபை வஞ்சியிலெம்
கோமகனும் கண்டுகளி கூர்ந்தசபை - நேமமுறு
பாலவி நோதசபை பண்ணெழுசங் கீதசபை
தாலமிசை வாழ்க தழைத்து.

## 182. நடிகர் கே. ஆர். ராம்சிங்

1189. சீத மதிபுனைந்தோன் சிற்றம் பலக்கூத்தன்
நாதன் உமைபங்கன் நல்லருளால் - கோதிலா
நன்னடிகச் சிங்கமென நாடுபுகழ் ராமசிங்கம்
மன்னுலகில் வாழ்க மகிழ்ந்து.

## 183. வெயிட் சாம்பியன்* கோட்டாறு கேசவன் ஆசாரி

1190. ஈடும் எடுப்புமிலா ஏகபல சாலியென்றிந்
நாடுபுகழ் கேசவ நண்பனே ! - பீடுபெற
ஆரம் உனக்கின் றணிகின்றேன் நீயென்முன்
பாரம் எடுத்ததிறன் பார்த்து.

## 184. முத்துசாமிப் பிள்ளையின் கவித்திறம்

1191. கண்டும் கனியும் களியமுதும் மாறிஉருக்
கொண்டும் கவியிற் குடிபுகுமோ ? - தண்டமிழைப்
போற்றுமுத்து சாமிப் புலவ ! நம் மன்சரிதைக்கு
ஏற்றசுவை ஏற்றயவா றென் ?

## 185. தொண்டர் குழாம் கே. ஆறுமுகம் பிள்ளை

1192. பாரறிய நாவலர் பட்டமும் பொற்கிழியும்
பேரறிஞன் ஆறுமுகன் பெற்றனனே - காரெழுந்து
பெய்யும் மழைபோல் பெருஞ்சொல் மழைபொழிந்து
சைவம் தழையவைத்த தால்.

---

*Weight Champion.

1191. ஸ்ரீமூலந்திருநாள் மன்னர் ஷஷ்டியப்த பூர்த்தியின்போது தமிழ்ப்பண்டிதர் திரு. முத்துசாமிப் பிள்ளை செய்த பாடல்களைப் பாராட்டிப் பாடிய செய்யுள்.

1192. நாவலர் பட்டம் கிடைத்தமை குறித்து மகிழ்ந்து பாடியது.

## 186. பேஷையா

1193. ஆறுமுகம் பிள்ளை அவதானம் கண்டெளியேன்
வேறுமுக மன்கூற வேண்டுமோ ? – தேறுமதிச்
சேஷையா மெச்சித் திருவாய் மலர்ந்து, 'ஸபாஷ் !
பேஷையா !' என்ற பிறகு.

## 187. கம்பர்தரும் இராமாயணம்*

1194. கம்பன் கவியின் கனியமுதம் ஊட்டி நம்மை
அம்புவியில் தேவராய் ஆக்கிடுவோன் – நம்பெரியன்
செந்தமிழ்ச் செல்வன் சிதம்பர நாதநண்பன்
சந்ததம் வாழ்க தழைத்து. 1

1195. பாடிப் படித்தமுதம் பாவில் வடித்தெடுத்து
நாடி நமக்குதவும் நல்லறிஞன் – நீடுபுகழ்
செய்ய குணசீலன் சிதம்பர நாதவள்ளல்
வையமிசை வாழ்க மகிழ்ந்து. 2

---

1193. தசாவதானி திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் திருவனந்தபுரம் ஹைகோர்ட் நீதிபதி பிரம்மஸ்ரீ கே. ஜி. சேஷையர் அவர்கள் தலைமையில் தசாவதானம் நடத்திக் காட்டினர் ; சபை வியந்து போற்றியது. தலைவர் சேஷையர், 'சபாஷ், பேஷ்' என்று மெச்சி, தேசிகவிநாயகம் பிள்ளையின் அபிப்பிராயத்தைக் கேட்டார். உடனே ஓர் அரிய கவி புறப்பட்டது. அன்புப் புலவர் அக்கணமே எழுந்துநின்று, பின்வரும் பாடலைப் பாடினர். சபை இந்த அவதானத்தைக் கண்டு திகைத்து வியந்தது ! என்ன பொருத்தமான பாட்டு !

*1953-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31-ஆம் தேதி குற்றாலத்தில் சேது மாளிகையில் டி. கே. சி. அவர்கள் 'கம்பர் தரும் இராமாயணம் பாலகாண்டம், அயோத்தியா காண்டம்-இரண்டாம் பதிப்பின் அரங்கேற்று விழா, முதலமைச்சர் ராஜாஜி தலைமையில் நடைபெற்றது. இவ்விழாவின் பொருட்டு இக்கவிக்ளைக் கவிமணி அவர்கள் பாடி அனுப்பியிருந்தார்கள்.

1196. பாவின் சுவை அறிந்து பாவலரைப் பாரறிய
ஆவலொடு போற்றும் அருளாளன் - மேவுமன்பர்
சித்தம் மறவாச் சிதம்பர நாதவள்ளல்
நித்தமும் வாழ்க நிலத்து. 3

## 188. மந்தாரை மலர்

[தேரூரில் தேவியின் நண்பர் ஒருவருக்கு இளமையிலேயே திருமணம் ஆனது. வீட்டுக் கவலை அந்த நண்பரைப் பற்றிக் கொண்டது. மனைவி நீண்டநாள் பூப்பெய்தாக் குறை வேறு. வாலிபத் துடிப்பு மனைவியின் பூப்பை எதிர் பார்த்து ஏங்கி யேங்கித் தவித்தது. ஆள் விரக்தியடைந்து மதுரைக்குப் போய்விட்டார். பிறகு தகவலில்லை. ஆண்டுகள் கழிந்தன. ஒருநாள் அவர் மனைவி பூப்பெய்திய செய்தி வந்தது. கவிஞர் பின்வரும் கவியை உடனே எழுதித் தமது நண்பருக்கு அனுப்பினார். இந்தப் பாட்டைக் கண்டதும் நண்பர் விரைந்து வந்தார் என்பது சொல்லவும் வேண்டுமோ !]

1197. மந்தாரை மலர்ந்திருக்க
மதுவுண்ணும் வண்டெங்கே ?
மாமுல்லைக் கொடிபடர,
வளருங்கொள் கொம்பெங்கே ?
சிந்தாத மணியிருக்க
ஒளியெங்கே சென்றதெனத்
தேரூரிற் பலர்கூடித்
தெரிந்துகொளக் கேட்டதற்கு
நந்தா பரஞான
அமுதுண்டு தெவிட்டெறியும்
நற்பரமா னந்தனருள்
பெறச் சென்ற நண்பா நீ
வந்தாலே மறுமொழியும்
வகுப்பமெனச் சோதிடநூல்
வல்லாரும் கூறுகின்றார்
வகையேதும் அறியேனே !

## 189. வீரபாண்டியக் கட்டபொம்மன்

1198. மீசை முறுக்கிநின்று வெள்ளையரே உங்களுக்கோர்
காசும் தரோமென்று கர்ஜித்த - கேசரியாம்
பாஞ்சைப் பதிவீர பாண்டியனை நெஞ்சமே
வாஞ்சையொடு பாடுவோம் வா. 1

வேறு

1199. செந்தில் முருகன் சேவடியைத்
தினமும் போற்றித் தொழுதிடுவோன் ;
சந்தக் கவிகேட் டுளமகிழ்ந்து
தரளம் வாரி அளித்திடுவோன் ;
வந்த பொல்லா வெள்ளையரை
மதியா வீர பாண்டியனைச்
சிந்தை மறவா தோவியத்தில்
சிலையில் கண்டு போற்றுவமே. 2

1200. தஞ்சம் என்று வந்தவரைத்
தாங்கும் இனிய குணசீலன் ;
பஞ்சம் அறியாப் பழம்பதியாம்
பாஞ்சைப் பதியில் அரசாண்ட
விஞ்சு புகழ்சேர் வீராதி
வீரன் கட்ட பொம்மன்பேர்
நெஞ்சில் எழுதி வைத்தன்பால்
நித்தம் நித்தம் போற்றுவமே. 3

1201. தானம் வேண்டில் தருகின்றேன் ;
தருமம் வேண்டில் தருகின்றேன் ;
வானம் இடிந்து விழுந்திடினும்
வரிதந் தும்மை வணங்கேன் என்று

ஏனை வெள்ளைக் கம்பெனியர்க்கு
எடுத்துக் கூறித் தென்னுட்டின்
மானம் காத்த பாண்டியனை
மறவா தென்றும் போற்றுவமே. 4

1202. தானம் வேண்டில் தருகின்றேன் ;
தருமம் வேண்டில் தருகின்றேன் ;
வானம் மழையைப் பொழியுதையா
மண்ணில் பயிரும் வளருதையா
யான்இங் குமக்கு வரியிறுப்ப
தேனே என்று வெள்ளையர்முன்
மானம் காத்த பாண்டியனை
மறவா தென்றும் போற்றுவமே. 5

1203. சீமை வெள்ளைக் காரர்படை
சிதறி ஓட முறியடித்தோன்
ஊமைத் துரையென் றுலகுபுகழ்
ஒப்பில் விஜயன் முன்வந்த
வீமன் வீர பாண்டியனின்
வெற்றி முரசு முழக்கியிந்தப்
பூமி மீதெந் நாளுமவன்
புகழைப் பாடிப் போற்றுவமே. 6

1204. காய்ந்து போரில் வெள்ளையரைக்
கறங்கச் செய்த ஆண்சிங்கம் ;
ஆய்ந்து வினைகள் செய்துநிதம்
அறங்கள் காத்த அறிவுடையோன் ;
பாய்ந்து நாயை முயல்விரட்டும்
பாஞ்சை ஆண்ட பாண்டியனுக்கு
ஏய்ந்த புகழை இனியதமிழ்
இசையிற் பாடிப் போற்றுவமே. 7

1205. மான முற்றும் விலைகொடுத்து
மண்ணை வாங்கி அரசாளும்
ஈன வாழ்வை உள்ளத்தில்
எள்ளத் தனையும் எண்ணாதோன்
ஊன உடலை வெறுத்துதறி
உலகி லழியாப் புகழ்நாட்டி
வானம் சென்ற வீரனைநாம்
மறவா தென்றும் போற்றுவமே. 8

1206. கட்ட பொம்மன் சீமையிலே
காகம் பறவா தெனுமாறு
சட்ட திட்டம் செய்துகுடி
தாங்கி நின்ற ஜகவீரன் ;
துட்டர் அஞ்சும் துரைராஜன்
துணிந்த வீரன் என்றுலகில்
எட்டுத் திசையும் புகழ்பெற்றோன்
எங்கள் வீர பாண்டியனே. 9

1207 கட்டபொம்மன் சீமையிலே
காகம் பறவா தெனுமாறு
சட்ட திட்டம் செய்துகுடி
தாங்கி நின்ற ஜகவீரன்
துட்டர் கண்டன் சூராதி
சூரன் என்றிவ் வுலகெங்கும்
பட்டம் பெற்ற பாண்டியனைப்
பாடிப் பாடிப் போற்றுவமே. 10

1208. அன்ன சாலை அமைத்திடுவோம் ;
ஆல யங்கள் கட்டிடுவோம்;
பன்னற் கரிய கலைகளெலாம்
பயிலக் கழகம் கண்டிடுவோம் ;

தென்னர் போற்றும் பாஞ்சையினைத்
திருத்தி அளகை யாக்கிடுவோம் ;
மன்னர் வீர பாண்டியன்பேர்
வையத் தென்றும் வழங்கிடவே. 11

1209. கெஞ்சி வாழும் வாழ்க்கையினைக்
கிஞ்சித் தேனும் விரும்பாத
செஞ்சி யாண்ட தேசிங்கத்
திறலோன் அனைய போர்வீரன்
வஞ்சர் இழைத்த தீவினையால்
மாண்ட கட்டபொம்மன்பேர்
விஞ்சும் ஆண்மை பெறுவதற்கு
வீரர் போற்றும் மந்திரமே. 12

வெண்பா

1210. அஞ்சினவர்க் கென்றும் அபயம் அளித்திடுவோன்
வஞ்சகர்க்கு வாழ்வு மறுத்திடுவோன் - விஞ்சுபுகழ்த்
தென்னாட்டுப் பாஞ்சைத் திறல்வீர பாண்டியனின்
நன்னாமம் போற்றுவோம் நாம். 13

## 190. யார் பெரியர் ?

1211. கண்ணைக் கெடுப்பர் கவிராயர் ; அக்கண்ணை
எண்ணி உரைகாரர் ஈவாரே - மண்ணுலகில்
ஆக்கு பவரோ அழிப்பவரோ மேலாவார் ?
நோக்கி நீஉண்மை நுவல்.

---

1211. கண்ணைக் கெடுப்பர் - ஈவர் : 'கண்' ஆகிய ஏழாம் வேற்றுமை உருபு தொக்கு வருதலும் விரித்தலும்.

## 191. முருகன் நிந்தாஸ்துதி

1212. தந்தை மலையாளி ; தாய்மாமன் மாட்டிடையன் ;
வந்தஒரு மச்சானும் வாணியனே – சந்ததமும்
விண்முகத்தை எட்டும் அயில் வேலேந்து [பன்னிருகைச்
சண்முகற்குச் சாதியெது தான் ?

## 192. சிரங்கு

1213. செந்தில் குமரா ! திருமால் மருகா ! என்
சிந்தை குடிகொண்ட தேசிகா ! – நொந்தஇம்
மெய்யிற் சிரங்கை விடியுமட் டுஞ்சொறியக்
கையிரண்டு போதாது காண். 1

1214. வாரம் முடங்காமல் வைப்பெண்ணெய் தேய்த்திட் [டேன் ;
சார மருந்தெல்லாம் சாப்பிட்டேன் - வீரம்
குறைந்திடக் காணேன் ; குமரா ! சிரங்கு
மறைந்திடத் தாநீ வரம். 2

1215. உண்ட மருந்தாலும் உடல்முழுவ தும்பூசிக்
கொண்ட மருந்தாலும் குணமிலையே - மண்டு
சிரங்கப்ப ராயா சினமாறிக் கொஞ்சம்
இரங்கப்பா ஏழை எனக்கு. 3

1216. முத்துப் பவழம் முழுவயிரம் மாணிக்கம்
பத்தியொளி வீசு பதக்கமெலாம் - சித்தன்
சிரங்கப்ப ராயன் சிறியேன் எனக்குத்
தரங்கண்டு தந்த தனம். 4

---

1212. மலையாளி - வெள்ளிமலையையுடையவன். இடையன் - ஆயர்பாடியில் வளர்ந்தவன்; கண்ணன். வாணியன் - வாணியை நாவில் உடையவன்.

## 193. பத்திரிகை வாழ்த்துக்கள்

### 1. குமரன்

1217. வாக்கினயங் கண்டும் மதிக்கும் பொருள் கண்டும்
ஊக்கநடை கண்டும் உளமகிழ்ந்தோம் - ஆக்கமிகு
செந்தமிழ்நா டாளவரும் செல்வக் குமராநீ
சந்ததமும் வாழ்க தழைத்து. 1

1218. பண்டிழந்த நாடும் பதியும் தமிழரசு
கொண்டதுபோல் உள்ளம் குளிருமே - எண்டிசையும்
பாரதியார் பாடல் பரிமளிக்க நீயணிந்தித்
தாரணியில் வந்துலவத் தான். 2

1219. அந்தி யிருளில் அலைபவருக் காதரவாய்
வந்தருளும் காந்தி மதிபோலச் - செந்தமிழ்த்தாய்
நாட்டினுக்கு நல்வேளை நற்றுணையாம் நல்வழியைக்
காட்டுதற்குத் தோன்றினைநீ காண். 3

### 2. நேதாஜி

1220. வங்கம் வளர்த்த சிங்கமென
வையம் முழுதும் ஒருங்குபுகழ்
எங்கள் வீரன் நேதாஜி
இனிய பெயரால் எழுந்துதமிழ்
பொங்கி வளரும் திருநாடு
போற்ற வரும்இப் பத்திரிகை
மங்கை பாகன் அருளாலே
வாழ்க ! வாழ்க ! வாழ்கவே !

## 3. முரசொலிப் பத்திரிகை*

1221. அன்பருளத் துண்மை அறிவாய் அமர்ந்தொளிரும்
தென்பழனி வேலன் திருவருளால் – இன்பமிகு
முத்தமிழ் நாட்டில் முரசொலிப் பத்திரிகை
நித்தமும் வாழ்க நிலைத்து.

## 4. நாட்டியம்

1222. அல்லும்பகலும் நின் ருனந்தக் கூத்தாடும்
தில்லைப் பெருமான் திருவருளால் – தொல்லுலகில்
பல்லாண்டு நாட்டியம் பல்கி வளருகவே
எல்லோரும் போற்ற இனிது.

## 5. அமுதசுரபி

1223. எத்தொழிற்கும் முன்நின் றெமக்குத் துணைபுரியும்
அத்திமுகத் தண்ணல் அருளினுல் – முத்தமிழ்
அன்பருக்கு வாய்த்த அமுத சுரபியிது
மன்புவியில் வாழ்க வளர்ந்து.

## 6. பாரத சக்தி

1224. கந்தன் முருகன் கடம்பன் கதிர்வேலன்
செந்திற் குமரன் திருவருளால் – சிந்தைமகிழ்
தந்துநிதம் பாரத சக்தி தவருது
வந்துலகில் வாழ்க வளர்ந்து.

*இது சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியைச் சேர்ந்த மாதிரி உயர்தரப் பாடசாலை மாணவர்களால் வெளியிடப் பெறும் கையெழுத்துப் பத்திரிகை.

## 7. கலைமகள்

1225. பொன்படைத்த பேரைப் புகழ்ந்தபுலை நீங்கியினி
இன்படைய நாவேநீ எண்ணுவையேல் – அன்
[பெழுந்து
செந்தமிழைக் காத்தருளுந் தெய்வமென இந்நிலத்து
வந்த கலைமகளை வாழ்த்து. 1

1226. காலத்துக் கேற்றவுடை காலத்துக் கேற்றநடை
காலத்துக் கேற்றவணி கைக்கொண்டு – காலத்தில்
தப்பாது காட்சிதருந் தாயாங் கலைமகளிங்
கெப்போதும் வாழ்க இனிது. 2

## 8. சக்தி *

1227. சித்தம் மகிழ்ந்துநம் செந்தமிழ்த்தாய் வந்திந்தச்
சத்திவடி விற்காட்சி தந்தனளால் – பத்தியொடு
நித்தமும் அன்பு நிலையத்தார் செய்துதரும்
புத்தணிகள் பூணும் பொருட்டு. 1

1228. கல்வி வளரக் கலைவளர நாடெங்கும்
செல்வம் வளரத் திருவளர – நல்வழிசேர்
புத்தி வளரப் புகழ்வளரத் தோன்றுமிச்
சத்தி வளர்க தழைத்து. 2

1229. நீணிலத்தி லன்பு நிலையத்தா ராதரித்துப்
பேணுதலால் சத்தி பிறந்ததினி – ஆணவங்கொண்
டெந்த மொழிவந் தெதிர்த்தாலும் வெற்றிநம்
சந்தத் தமிழ்மொழிக்கே தான் 3

* பிரமாதி வருஷம் (1939) ஆவணி மாதம் பிறந்தது இப் பத்திரிகை. இதன் தொடக்க இதழில் இவ்வாழ்த்துக்கள் வெளி வந்துள்ளன.

## 9. கலைக்கதிர் *

1230. ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால் – கோதின்றிப்
பல்லாண்டு வாழ்கவே பாரில் 'கலைக்கதிர்'நீ
எல்லோரும் போற்ற இனிது. 1

1231. ஆவித் துணையாய் அகிலமெலாம் காத்தருளும்
தேவிமீ னாட்சி திருவருளால் – மேவுபுகழ்ச்
செந்தமிழ் நாடு திருந்தக் 'கலைக்கதிர்'நீ
வந்துநிதம் வாழ்க வளர்ந்து. 2

வேறு

1232. சிந்தைக் கினிய கட்டுரைகள்
தேனார் கவிகள் கதைகளெலாம்
சந்த முறவே தாங்கிநிதம்
தமிழர் உள்ளம் மகிழ்வெய்த
வந்து நிலவும் 'கலைக்கதிர்'நீ
மயில்மீ தேறி விளையாடும்
செந்தில் முருகன் திருவருளால்
சிறந்து வாழ்க வாழ்கவே ! 3

## 10. அமுத சுரபி மலர்

1233. என்னகமும் ஏந்துபுகழ் ஏரகமும் தங்கிடுவோன்
பொன்னரகம் காத்தபெரும் போர்வீரன் – பன்
ஐயன் அருளால் அமுதசுரபியிது [னிருகை
வையமிசை வாழ்க வளர்ந்து. 1

* இந்தப் பத்திரிகை கோயம்புத்தூரிலிருந்து சர்வதாரி வருஷம் மார்கழி மாதம் முதல் வெளிவருகிறது. 1949–ஆம் வருடம் ஜனவரி மாதம் வெளியான முதல் மலரின் இரண்டாவது இதழில் இவ் வாழ்த்துக் கவிகள் வெளியாயின.

1233–1234. 1953–ஆம் ஆண்டு வெளிவந்த தீபாவளி விசேஷ மலரில் வந்த பாடல்கள்.

வேறு

1234. கற்ருர் மற்ருர் எவ்வெவரும்
கண்டு கண்டு களிப்படைய
வற்ரு அமுத சுரபியிது
வையத் தென்றும் வாழ்கவெனக்
குற்ரு லத்தில் அமர் நா தன்
குழல்வாய் உமையாள் பங்கனிரு
பொற்ருள் மலரை அன்போடு
போற்றிப் போற்றிப் பணிவோமே ! 2

## 11. 'விந்தியா' பத்திரிகை

1235. பைந்தமிழ் எங்கும் பரிமளிக்கப் பம்பாயில்
விந்தியா என்றும் விளங்குகவே - முந்துபுகழ்
மன்னும் முடிசூடி மாமதுரை நாடாண்ட
அன்னைமீ ஞட்சிஅரு ளால். 1

1236. நாற்றிசையும் காண நடுவெழுந்த மாமலைபோல்
ஏற்றியமெய்த் தீபமென யாவருமே - போற்றவரு
விந்தியாப் பத்திரிகை மேன்மேல் வளர்ந்திடுக
இந்தியா நாட்டில் இனிது. 2

1237. மக்களெலாம் ஒன்றுபட்டு வாழும் வழியறிந்து
சிக்கலறக் காட்டிச் சிறப்பெய்தி - மிக்கபுகழ்
வித்தகர் போற்றவரு விந்தியாப் பத்திரிகை
நித்தமும் வாழ்க நிலத்து. 3

## 12. 'சௌபாக்கியம்' வாழ்த்து

1238. நாடும் நகரும் நகர்ப்புறமும் நன்ருக
வீடும் குடியும் விளக்கமுறப் - பாடுபட்டு
மன்னுலகில் சௌபாக்கியம் வாழ்ந்திடுக மாமதுரை
அன்னைமீ ஞட்சிஅரு ளால். 1

1239. ஔவை வளர்த்த அமுதத் தமிழ்மொழியைச்
செவ்வையுறக் காட்டிச் சிறந்தோங்கி - இவ்வுலகில்
பல்லாண்டு சௌபாக்கியம் பார்மீது வாழ்ந்திடுக
எல்லாரும் போற்ற இனிது. 2

## 13. 'மகிழ்ச்சி' பத்திரிகை*

1240. ஐய மறவே பன்னூல்கள்
ஆராய்ந் தறிந்த அரும்புலவர்
செய்ய தமிழில் அழகுபெறத்
தீட்டும் எழுத்தோ வியங்களெலாம்
வையத் தெவரும் கண்டுள்ளம்
மகிழத் தாங்கி வரு'மகிழ்ச்சி'
பொய்யைப் போக்கி மெய்யறிவைப்
போற்றிப் பொலிக பொலிகவே !

## 14. தினமணிக்கு வாழ்த்து

1241. மெய்யெலாம் நன்கு விளங்கி வளர்ந்துவரப்
பொய்யெலாம் மங்கிப் புறம்போக - வையமிசைப்
புத்தொளி வீசிப் பொலிந்து 'தினமணி'நீ
நித்தமும் வாழ்க நிலைத்து. 1

1242. பொன்னமர்ந்த மார்பன் புவியளந்த சேவடியான்
தென்னரங்கத் தெம்மான் திருவருளால்-மன்னுலகில்
எக்கலையும் போற்ற எழுந்த 'தினமணி'நீ !
மக்களிடை வாழ்க வளர்ந்து. 2

*1951 - ஆம் ஆண்டு மலரில் வெளிவந்தது.

1243. என்னகமும் ஓங்குதிரு ஏரகமும் தங்கிடுவோன்
பொன்னகரம் காத்தபெரும் போர்வீரன் –
[இன்னருளால்
பல்லாண்டு வாழ்க! இப் பாரில் ‘தினமணி’நீ!
எல்லோரும் போற்ற இனிது. 3

1244. வேத முதல்வன் விரிசடையன் வெண்ணீற்றன்
ஆதி இறைவன் அருளாலே – பூதலத்தில்
எவ்வறமும் போற்றி இனிய ‘தினமணி’ நீ!
செவ்வையுற வாழ்க தினம். 4

## 15. நல்லாயன்

1245. பாவ இருளகற்றும் பானுவாய் வந்துதித்த
தேவ குமரன் திருவருளால் – பூவுலகில்
நல்லாயன் வாழ்கஎந் நாளும் தமிழ்மக்கள்
எல்லாரும் போற்ற இனிது.

## 16. பொங்கல் மலர் வாழ்த்து

கலைமகள்

1246. மண்டுபுகழ்ப் பொங்கல் மலராக மக்களெலாம்
கண்டுதொழ வந்த கலைமகள்நீ – தண்டமிழ்ப்
பூங்காவில் எங்கும் புதிய மணம்வீசி
நீங்காமல் வாழ்க நிலைத்து. 1

கலைக்கதிர்

1247. புண்ணியநாள் கண்டகதிர் பொங்கலொடு வந்தகதிர்
கண்ணைக் கவரும் கலைக்கதிர் – எண்ணுமுளத்
தையமெலாம் போக்கி அறிவுச் சுடர்பரப்பி
வையமிசை வாழ்க வளர்ந்து. 2

1241-1244. தினமணிப் பத்திரிகையில் நந்தன வருஷப் பிறப்பு இதழில் (13-4-52) இவ்வாழ்த்துக்கள் வெளிவந்தன.

தினமணி கதிர்

1248. தேடும் அடியவர்தம் சிந்தையிலும் அம்பலத்தும்
ஆடும் பெருமான் அருளாலே – நீடுபுகழ்
நன்னகராம் சென்னை நகரில் உதித்தகதிர்
மன்னுலகில் வாழ்க வளர்ந்து. 3

தினமலர்

1249. பொங்கல் தினமலர்நீ பூவுலகில் என்றென்றும்
மங்கல நாண்மலராய் வாழ்கவே – செங்கமலக்
கண்ணன் அரவணையில் கண்வளரும் கார்மேக
வண்ணன் அருளால் வளர்ந்து. 4

பொன்னி

1250. ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால் – ஓதுதமிழ்ப்
பொன்னிமலர் வீசும் புதுமணம் பெற்றுமக்கள்
மன்னுலகில் வாழ்க மகிழ்ந்து. 5

## 17. "ராமகிருஷ்ண விஜயம்" வாழ்த்து

1251. இனிய தமிழில் செந்தமிழில்
என்றும் தழைத்து வருந்தமிழில்
கனியும் பாலும் தேனும்கற்
கண்டும் அனைய கட்டுரைகள்
புனித கவிகள் கதைக ளெல்லாம்
பொலிய வரும்இப் பத்திரிகை
நனியிவ் வுலகில் வாழவரம்
நங்கை பாக நல்குகவே. 1

---

1246–1250. 1953-ஆம் ஆண்டு, பொங்கல் மலர்களுக்கு அளிக்கப்பட்ட வாழ்த்துக் கவிகள்.

1252. அளத்தற் கரிய பலசமய
ஆக மங்கள் அத்தனையும்
களக்கம் அறவே இரவுபகல்
கற்ற பெரியார் யாவருமே
உளத்திற் கண்டு தெளிந்தபொருள்
ஒன்றே என்னும் உண்மையினை
விளக்க வந்த ராமகிருஷ்ண
விஜயம் வாழ்க ! வாழ்கவே ! 2

1253. கற்றுத் தேர்ந்த பண்டிதரும்
காணற் கரிய பரம்பொருளை
முற்றி முதிர்ந்த அன்பாலே
முழுதுங் கண்ட மாமுனிவன்
சொற்ற நெறியை மக்களுக்குத்
துலங்கச் செய்து நாடெங்கும்
வெற்றி காணும் ராமகிருஷ்ண
விஜயம் வாழ்க ! வாழ்கவே ! 3

1254. திருத்தம் உறவே மக்களெல்லாம்
செய்தற் குரிய பணிசெய்து
வருத்தம் இன்றி இருமையும்நல்
வாழ்வை அடையும் வழிகாணப்
பொருத்த மான உண்மைகளைப்
பொறுக்கி இனிய செந்தமிழில்
விரித்துக் கூறும் ராமகிருஷ்ண
விஜயம் வாழ்க ! வாழ்கவே ! 4

## 194. சிறப்புப் பாயிரங்கள்

### 1. நாஞ்சில் வெண்பா

1255. செந்தமிழ் நங்கை திரைகொண்ட செல்வம்கை
வந்ததென உள்ளம் மகிழ்ந்தனளால் – முந்தும்என்
நண்பா சிவராஜ நாவலா நின்னாஞ்சி
வெண்பாவைக் கேட்டு வியந்து. 1

1256. முன்னைய நாஞ்சி முதுமகள்இப் பாவணிந்த
பின்னையொரு பேரிளம் பெண்ணானாள் – மன்னிரத
வாதியரின் ஆய்ந்தகவி வாணர் பெரியரென்று
ஓதுவதும் பொய்யுரையா மோ? 2

### 2. செண்பகராமன் பள்ளு

1257. வள்ளலுயர் தென்கோவை மன்செண் பகராமன்
பள்ளினிமை யானும் பகருவதேன் – தெள்ளமுதப்
பாட்டிசைக்கோர் பச்சைப் பசலையுமே சாய்ந்தாடிக்
காட்டியதால் உள்ளக் களிப்பு.

### 3. தசாவதானி ஆறுமுகம் பிள்ளை இயற்றிய குசேல வெண்பா

1258. நாடும் அவதானியென நாடுபுகழ் ஆறுமுகன்
பாடுங் குசேலவெண் பாவினிலே – பீடுபெறு
செந்தமிழ்ச் செல்வி திருநடங் கண்டுநான்
வந்தனம் செய்தேன் மகிழ்ந்து.

### 4. திருவள்ளுவர் ஒருதுறைக் கோவை

1259. உள்ளுவந்து போற்றி ஒருதுறைக் கோவைதிரு
வள்ளுவர்மேல் அன்பால் வனைந்தளித்தான் –
[தெள்ளுதமிழ்ப்
பண்பு மலிந்தொழுகப் பாடுமுத்து சாமிப்பேர்
நண்பன் கவிமணியிந் நாள்.

## 5. திருக்குறள் இன்பம்

1260. ஓதுநந் தாய்மொழிக்கு உயிரை யொத்தநூல்,
பூதல முழுவதும் புகழ்ந்து போற்றுநூல்,
பொய்யகம் போக்கிப் புனித மாக்குநூல்,
மெய்யகம் நாட்டிமேல் வீடு காட்டுநூல்,
ஒருமதம் ஒருநெறி ஒருபொரு ளுண்மையை
விரிநில மெங்கணும் விளங்க வைத்தநூல்,
அறிவின தெல்லையை அளந்த மைந்தநூல்,
தெள்ளிய தமிழ்மறை வள்ளுவர் நூலே ;
ஒப்பற இந்நூற்கு உரை வகுத்தவர்
பற்பலர் ; அவரெலாம் விற்பன ராயினும்,
உலகிருள் விலக்க உதித்தொளி வீசு
முழுமதி யினைத்தம் முன்றிலி னின்று,
நோக்கி "ஈ தெம்மதி நும்மதி யன்று" எனச்
செப்புஞ் சிறுமகார் செய்கையே போன்று அத்
தெய்வப் புலவனைச் செந்நாப் போதனைச்
சைவன், வைணவன், சமணன், பௌத்தன்,
எனக்கொண்டு அவரவர்க் கிசைந்த படிநூற்
செம்பொருள் முற்றுந் திரியச் செய்தனர்.
ஆதலின்,
உள்ளதை உள்ளவாறு உணர்ந்துளங் கண்டு,
நடுநிலை யமர்ந்து, நவிலுமிந் நல்லுரை,
எம்மதத் தவர்க்குஞ் சம்மத மாமுரை,
சிறியருங் கற்றுத் தேறத் திகழுரை,
பெரியரும் விரும்பிப் பேணும் புத்துரை ;
ஆழ்பொரு ளுள்ளே மூழ்கி யெடுத்து
நிரல்படக் கோத்து நித்தில மாலைபோல்
குறள்மணி யிடையே குயிற்றிய ஒள்ளுரை ;
வாழ்வாங்கு வாழும் வழியைத் துலக்கும்
திருக்குற ளின்பத் தெளிவுரை ; இதனைத்

தேனினும் இனிய செஞ்சொலின் அமைந்த
வசன நடையில் வழங்கினன் : அறமும்
உண்மை யறிவும் உலகெலாம் பரவ
அல்லும் பகலும் அயர்விலா துழைப்போன்,
சாதி சமய சாத்திர கோத்திர
வேற்றுமை காணு வீதியி லுலாவுவோன்,
தவத்திற் பெரியோன்; தமிழ்ப்பயிர் வளர்ப்போன்;
களங்கமில் உளத்தாற் கைம்மக வனையோன்,
அன்பால் எவரையுந் தன்பாற் கொள்வோன்,
புதுவையம் பதிவாழ் புண்ணியன், எங்கும்
துதிபெறு சுவாமி சுத்தா னந்த
பாரதி யெனப்பெயர் பகரும்
சீரிய ஞானச் செல்வமிக் கோனே.

## 6. சிலம்புச் செல்வம்

1261. சேரர் பெருமான் செந்தமிழில்
தேடி வைத்த பொருளை யெலாம்
யாரும் எளிதில் பெற்றின்பம்
எய்தப் புதுவைப் பாரதியார்
தேரும் இனிய உரைநடையில்
செய்த சிலம்புச் செல்வமிது
பாரில் என்றும் நிலவிடவே
பரமன் அருளுண் டாகுகவே.

## 7. யோக சித்தி

1262. பயன்தரு பனுவல் பற்பல கற்று
நயந்தர உரைக்கும் நண்பனை யொத்தும்,
உலக வாழ்வின் உண்மையை உணர்த்தி
இகபர சுகங்க ளிரண்டையுந் தரும்அவ்

1261. புதுவைப் பாரதியார் - சுவாமி சுத்தானந்த பாரதியார்.

வழிகளை நன்கு வகுத்துக் காட்டும்
குணந்திகழ் ஞான குரவனை யொத்தும்,
உற்றுழி யுதவும் 'யோக சித்தி' யாம்
அப்பெரு நூலை, ஒப்பருந் தவத்தோர்
உள்ளதை உள்ளவா றுணர்ந்த பெரியோர்
சுத்தமெய்ஞ் ஞானச் சுடரெனப் பொலிவோர்
அரிய பெரிய அறவோர் உறவால்,
சகச நிட்டையால் சாதன நெறியால்,
தானே பொங்கித் ததும்பிய அறிவால்,
முன்னை வழக்கம் முற்றுமா ராய்ந்து,
பின்னை வழக்கம் பிழையறத் தேர்ந்து,
போக்குதற் குரியவை போக்கியும், ஆதரித்து
ஆக்குதற் குரியவை ஆக்கியும், அழகாய்
இக்கா லத்துக் கிசைந்தநன் முறையில்
கற்றவர் தமக்கும் கல்லா தவர்க்கும்
எளிதில் விளங்கிட இனிய மொழியால்
அந்த ஞானன், அருந்தவன், புதுவைச்
சுத்தா னந்த சுவாமி அருளினன்,
அந்தமி லின்ப மடைந்திச்
செந்தமிழ் நாடு சிறப்புற் றோங்கவே.

## 8. உடலுறுதி

1263. இடமும் பொருளும் ஏவலுமே
எண்ணி எண்ணிப் புண்ணுவீர்
உடலின் உறுதி யுடையவர் இங்கு
உலகம் முழுதும் உடையவராம்;
திடமெய்ஞ் ஞானி இந்நூலில்
செப்பும் முறைபின் பற்றுவிரேல்
அடைதற் கரிய நலமெய்தி
அமர ராக வாழ்வீரே.

---

1263. திடமெய்ஞ்ஞானி - சுவாமி சுத்தானந்த பாரதியார்.

## 9. காந்தி புராணச் சிறப்பு

1264. தொண்டரெலாம் கண்டுதொழும் தொண்டனெம் [காந்திமகான்
மண்டுபுகழ் வாழ்க்கை வரலாற்றைத் – தண்டமிழ்
ஐயமறக் கற்ற அசலாம் பிகைசொன்னாள்
செய்யுணயம் வாய்ப்பத் தெரிந்து. 1

1265. சொல்லால் பொருளால் தொடையால் வருமின்பம்
எல்லாம் ஒருங்குநமக் கீயுமே - நல்லார்வாய்
ஆர்ந்த புகழ்சேர் அசலாம் பிகைதந்த
காந்தி புராணமிது காண். 2

1266. அன்னைதமிழ் நங்கை அலைகொண்ட செல்வங்கை
மன்னியதென் றுள்ளம் மகிழ்ந்தனளால்–இன்ன [முதம்
ஆர்ந்த கவியில் அசலாம் பிகைதந்த
காந்தி புராணமிதைக் கண்டு. 3

1267. கல்லாரும் பன்னூல்கள் கற்றபெரும் பண்டிதரும்
எல்லாரும் இன்பமிக எய்துவரே - நல்லார்சொல்
ஆர்ந்தகலைச் செல்வி அசலாம் பிகைசொன்ன
காந்தி புராணமிதைக் கற்று. 4

1268. தாரணியை முற்றுமே தண்ணருளால் வென்றமெய்
வீரனது மாட்சி விளக்குநூல் - பேரழகு
வாய்ந்த கவிகள் மலர்ந்து மணங்கமழும்
காந்தி புராணமிது காண். 5

வேறு

1269. மூல நூல்கள் ஆராய்ந்து
முற்றி முதிர்ந்த அறிவாலே
பாலும் தேனும் கலந்தொழுகு
பாவில் அசலாம் பிகைதேவி

ஞாலத்து தெவரும் பாராட்ட
நவின்ற காந்தி புராணமிது
ஆல நீழல் எம்பெருமான்
அருளால் வாழ்க வாழ்கவே ! 6

1270. உள்ளம் உருகச் செவிகுளிர
ஓதும் நாவில் அமுதூற
தெள்ளத் தெளிந்த செந்தமிழில்
தேவி அசலாம் பிகைசொன்ன
வள்ளல் காந்தி வாழ்வாங்கு
வாழ்ந்த வாழ்க்கைப் புராணமிது
வெள்ளம் தாழும் விரிசடைய
விமலன் அருளால் வாழ்கவே ! 7

## 10. பண்டிதமணியின் கதிர்மணி விளக்கம்*

மகிழ்ச்சி உரை

1271. பண்டிதர் போற்றுமகா பண்டிதா ! நின்னையெதிர்
கண்டதுபோல் உள்ளம் களிப்படைந்தேன் - தண்
[டமிழ்
வித்தகர்க்கு வாய்த்த விருந்தாம் மணிவிளக்கப்
புத்தகமென் கைவந்த போது. 1

---

* மகிபாலன் பட்டி மகாமகோபாத்தியாய பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள், திருவாசகம் திருச்சதகத்திற்கும் நீத்தல் விண்ணப்பத்திற்கும் தாம் எழுதிய கதிர்மணி விளக்கம் உரைநூலைக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கு அனுப்பிவைத்து, அவர்களது வாழ்த்துரை வேண்டிக் கடிதமும் எழுதியிருந்தனர். இவ் வேண்டுகோளுக்கு இசையக் கவிமணி அவர்கள் கதிர்மணி விளக்கத்தைப் படிக்கக் கேட்டுப் பரவசமுற்று, அவ்வுணர்ச்சிப் பெருக்கால் இவ் வாழ்த்துக் கவிதைகளைப் பாடினர். இவை 1951-ஆம் ஆண்டு 'தொண்டன்' பத்திரிகையில் ஆவணி மாத இதழில் வெளிவந்துள்ளன.

வேறு

1272. வித்தகர்க் கமுதாம் நீத்தல்
விண்ணப்ப உரையின் பாலுன்
பத்தியின் ஆழம் கண்டேன்,
பசுந்தமிழ் இனிமை கண்டேன்;
புத்தியின் நுட்பம் கண்டேன்,
புலமையின் வளமும் கண்டேன்;
உத்தம உரைநீ தந்த
உரையெனற் கைய முண்டோ? 2

1273. புத்தி நுட்பம் கண்டேனுன்
புலமை கண்டேன், சிவநெறிசேர்
பத்தி கண்டேன் செந்தமிழின்
பாகின் இனிய சுவைகண்டேன்;
சித்தம் மகிழ்ந்து நண்பாநீ
செய்த கதிர்மா மணிவிளக்கை
எய்த்த நாளில் வைப்பாக
எண்ணிப் போற்றி வாழ்வேனே! 3

உரைச் சிறப்பு

1274. வையகம் போற்றுதிரு வாசகத்தின் உட்பொருளைக்
கையிற் கனியாகக் காட்டினனுல் - செய்யதமிழ்ப்
பேரா சிரியர் பெருமான் கதிரேசன்
ஆராய்ந்து முற்றும் அறிந்து. 4

1275. வாசக மெல்லாம் மணிவா சகமாமோ?
காசெல்லாம் காணும்பொற் காசாமோ?-பேசுலகில்
மன்னுமுரை யெல்லாம் மகிபால மாநகரான்
சொன்னவுரைக் கீடாமோ சொல்? 5

1276. தெய்வ மறையாம் திருவா சகப்பொருளை
ஐயமறக் காட்டும் அணிவிளக்கம் – வையமிசைச்
செந்தமிழைக் கற்றுத் தெளிந்த கதிரேசன்
தந்த மணிவிளக்கம் தான். 6

## நூல் வாழ்த்து

1277. சீத மதிபுனைந்து சிற்றம் பலத்தாடும்
ஆதி பகவன் அருளினால் – ஓதுபவர்
சித்தம் மகிழச் சிறந்திம் மணிவிளக்கம்
நித்தமுமே வாழ்க நிலத்து. 7

1278. சிற்றம் பலத்தான் திருக்கையால் ஏடெழுதப்
பெற்ற பெரும்பேறு பெற்றநூல் – முற்றிலுமே
சித்தமுறக் கொண்டு தெளிந்த மணிவிளக்கம்
நித்தமுமே வாழ்க நிலத்து. 8

1279. கல்லைப் பிசைந்து கனியாக்க வல்லானெம்
தில்லைப் பெருமான் திருவருளால் – நல்லவொரு
வாடா விளக்காக வாழ்க மணிவிளக்கம்
நீடாழி சூழும் நிலத்து. 9

## உரையாசிரியருக்குப் பாராட்டு

### வேறு

1280. வற்றா அமுத ஊற்றாகி
வழங்கு திருவா சகநூற்குக்
கற்றார் மெச்சும் மணிவிளக்கம்
கண்டபுலவன் கதிரேசன்
உற்றார் சூழப் பல்லாண்டிவ்
வுலகில் வாழஎம் பெருமான்
பொற்றாளிணையை அன்போடு
போற்றிப் போற்றிப் பணிவோமே! 10

1281. வையத் தென்றும் சிவஞானம்
மலர்ந்து தெய்வ மணங்கமழச்
செய்யும் அரிய தமிழ்மறையாம்
திருவாச கத்தின் உட்பொருளை
கையிற் கனிபோல் காட்டியநம்
கதிரே சப்பே ராசிரியன்
தையல் பாகன் திருவருளால்
தழைத்து வாழ்க வாழ்கவே! 11

வேறு

1282. வாதவூர் மாமுனிவன் மனங்க னிந்து
மக்க ளெல்லாம் சிவநெறிகண் டுய்யுமாறு
கோதிலா தமைத்ததிரு வாச கப்பூங்
கோயிலுக்குச் சிறந்தகதிர் மணிவி ளக்கம்
ஓதரிய பேரன்பால் உபயம் வைத்தோன்
ஓங்குபுகழ்க் கதிரேச நண்பன் தில்லை
ஆதிரையான் அழகியசிற் றம்ப லத்தான்
அருளாலே நீடுழி வாழ்க மாதோ! 12

வேறு

1283. வண்டமிழ் நாட்டுக்கு வாய்த்த மணிவிளக்கம்
கண்ட கதிரேசன் கண்டதுபோல் – மண்டுபுகழ்
வாதவூர் அண்ணல் மனங்கண்ட மாதவரிப்
பூதலத்தில் உண்டோ புகல்? 13

1284. இன்னமுதச் செந்தமிழ்நூல் இன்னும் பலதந்து
மன்னுநலங் கண்டு நிதம் வாழியவே – துன்னுபுகழ்ப்
பேரா சிரியர் பெருமான் கதிரேசன்
நீராழி சூழும் நிலத்து. 14

## 11. புதுமைப் பித்தன் நினைவுமலர்

1285. சிந்தைக் கினிய கட்டுரைகள்
சிறந்த கதைகள் பற்பலவும்
தந்த புதுமைப் பித்தன்பேர்
தமிழ்நாட் டன்பர் போற்றிடவே
வந்த நினைவு மலரென்றும்
வாடா மலராய் மணம்வீச
அந்தி வண்ணா! பிறை சூடீ!
ஆடும் பித்தா! அருள்கவே.

## 12. ரஷ்யாவின் ரகசிய ஆயுதம்

1286. யாதுமென் ஊரே எவருமென் கேளிரே
பூதலம் யார்க்கும் பொதுவேயென்று - ஓதியநற்
போதனையை முற்றும் புதியருஷ் யாமக்கள்
சாதனையில் கொண்டார் தமக்கு.

## 13. புதுவைக் கல்விக் கழக வெள்ளிவிழா மலர்

வாழ்த்து

1287. பாரில் என்றும் சுதந்திரத்தைப்
பாது காக்கும் நகரமெனப்
பேரு யர்ந்த புதுவைநகர்
பேணுங் கல்விக் கழகத்தின்
சீர ணிந்த வெள்ளிவிழாச்
சிறப்பில் மலர்ந்த மலர்கங்கை
நீர ணிந்த இறையருளால்
நித்தம் வாழ்க வாழ்கவே!

---

1287. 1951—ஆம் ஆண்டு இக்கழகத்தின் வெள்ளிவிழா நிகழ்ந்தது.

## 14. தமிழன் இதயம்

1288. இற்றைத் தமிழன் இதயத் துடிப்பினைஇச்
சொற்றரு சித்திரத்தில் தோன்ற வைத்தான்-
ஓவிய நற்கலைஞன் ஓதுபுகழ் நாமக்கல் [கற்றறிந்த
பாவலன் ராமலிங்கம் பார்.

## 15. தமிழ்ச்சுனை

1289. வண்ண மலர்கள் மலர்ந்து மணம்வீசி
உண்ண அமுதம் உதவுமே - எண்ணியவர்
சிந்தை மகிழத் திருவார் இளங்கவிஞன்
தந்த தமிழ்ச்சுனை தான். 1

1290. புத்தகக் காட்டில் புகுந்து களைப்புற்றது
இத்தனையும் போதுமினி என்னெஞ்சே-நித்தமும்
தண்ணிழல் தங்கித் தமிழ்ச்சுனையில் இன்னமுதம்
உண்ணலாம் வாநீ உவந்து. 2

வேறு

1291. ஆவல் மிகவே அன்பரெலாம்
அரிய அமுதம் இதுவென்ன
நாவிற் கினிய தமிழ்ச்சுனையை
நாடி நமக்குத் தந்தமகன்
பாவின் சுவைகள் பரந்தொழுகப்
பாடும் பகவ திப்பெருமாள்
சேவ லுயர்த்தோன் திருவருளால்
தினமும் வாழ்க வாழ்கவே ! 3

## 16. இராம காதைப் பதிப்பு

1292. யாவரும் போற்ற இராம கதையிதனை
ஆவலொடு தேர்ந்தளித்த அன்புடையோன் - [மேவு தமிழ்
வித்தகச் செல்வனெம் வீர முருகப்பன்
நித்தமும் வாழ்க நிலைத்து.

## 17. மலரும் உள்ளம்

1293. 'பாலும் பழமும் ஏனம்மா ?
பசியே இல்லை' எனக்கூறிச்
சீலச் சிறுவர் சிறுமியர்கள்
சிறந்த 'மலரும் உள்ள' மிதைக்
காலை மாலை என்றென்றும்
கற்று மகிழச் செயுமிந்த்ர
ஜாலக் கவிஞன் வள்ளியப்பன்
தழைத்து வாழ்க வாழ்கவே. 1

1294. பள்ளிச் சிறுவர் சிறுமியர்கள்
பாடிப் பாடி மகிழ்வெய்த,
தெள்ளத் தெளிந்த செந்தமிழில்
தேனூர் கவிகள் செய்துதரும்
வள்ளியப்பா ! நின்னினிய
'மலரும் உள்ளம்' என்றென்றும்
புள்ளி மயில்வா.கனனருளால்
புவியில் வாழ்க ! வாழ்கவே ! 2

1292. திரு. சொ. முருகப்பா அவர்கள் 'இராம காதை - பால காண்டம்' பதிப்பித்து, 1954-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வெளியிட்டபோது இவ்வாழ்த்துக் கவிதை பாடப்பெற்றது.

1295. சின்னஞ் சிறுவர் சிறுமியர்க்குச்
சிறந்த கருத்தைத் தெளிவாக்கக்
கன்னல் செந்தேன் முக்கனிகள்
கலந்த இனிய சுவையோடு
மன்னும் கவிதை மணம்வீசி
'மலரும் உள்ளம்' என்றென்றும்
பன்னற் கரிய புகழ்பெற்றிப்
பாரில் வாழ்க வாழ்கவே ! 3

வேறு

1296. நித்தம் இளமை நிலைக்கும் படியீசன்
வைத்தில னேயென்று வருந்துகின்றேன்-சித்த
சித்திரமும் பாட்டும் சிறந்து விளங்கிடுமிப் [மகிழ்
புத்தகத்தைப் பார்க்கும் பொழுது. 4

1297. கன்னலும், கண்டும், கனியும் அனையகவி
சின்னஞ் சிறுவருக்குச் செய்தளித்தான்-மன்னு
[தமிழ்ப்
பூவலர்ந்து வாசமெழும் 'பூஞ்சோலை' ஆசிரியன்
பாவலன் வள்ளியப்பன் பார். 5

1298. கன்னற் கவியால் கவிக்கிசைந்த சித்திரத்தால்
தன்னிகரில் இந்நூலைத் தந்தனனே-மன்னுதமிழ்ப்
பள்ளிச் சிறுவரொடு பண்டிதரும் பாராட்ட
வள்ளியப்பன் உள்ளம் மகிழ்ந்து. 6

1299. பன்னிருகை வேலா ! பழனிக் குமரா ! நின்
பொன்னடிகள் போற்றிப் புகழ்கின்றேன்—
[மன்னுபுகழ்ச்
செந்தமிழ் நாட்டில் சிறந்து 'மலரு முள்ளம்'
சந்ததம் வாழவரம் தா. 7

### 18. ரஸிகமணி

1300. கூடியிருக்கும் நண்பரெலாம்
குடித்து மகிழ்ந்து கூத்தாட,
பாடிப் பாடிப் பாடலிலே
பாலும் தேனும் கலந்ததுவும்
தாடி இல்லாத் தாகூர் செய்
ஜால வித்தை அத்தனையும்
தேடி யழகாய்ச் சொன்ன தமிழ்ச்
செல்வா! வாழ்க! வாழ்கவே!

### 19. நாகரிகச் சிற்பிகள்

1301. சீருயரும் நாகரிகச் சிற்பிகளின் மாசரித
ஆரமுதை அன்பால் அளித்த நண்பன் – பேருயரும்
பண்டிதன் எம்வீர பத்திரன் வாழ்கபூ
மண்டலத்தி லென்றும் மகிழ்ந்து.

### 195. அரியர் யார்?

1302. பெரியோர் செய்த பெரும்பிழை யதனைச்
சிறுபிழை யென்று தேய்த்து விடுவர்;
சிறியோர் செய்தது சிறுபிழை எனினும்
பெரும்பிழை யென்று பேரிகை கொட்டுவர்;
உள்ளதை உள்ளவா றுரைப்பவர்
அரியர் அம்மா அவனி மீதே!

---

1300. இது திரு. டி. கே. சி. அவர்கள் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதிய பாஸ்கரத் தொண்டைமான் அவர்கட்குக் கவிமணி அனுப்பிய வாழ்த்து.

## 196. விண்ணப்பம்

1303. பாலைவனம் சோலைவன மாக வேண்டும் ;
பசுங்கிளிகள் அங்கிருந்து பாடவேண்டும் ;
சாலைகளிற் பலதொழிலும் பெருக வேண்டும் ;
சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும் ;
சீலைஉடை கதருடையாய்த் திகழ வேண்டும் ;
தேசபக்தி செழித்தோங்கி வளர வேண்டும் ;
வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டும் ;
வெற்றியின்மேல் வெற்றிஎமக் கெய்தவேண்டும். 1

1304. கஞ்சாவை நஞ்சாகக் கருதவேண்டும் ;
கள்ளொழுகுங் கடைவாயை மூடவேண்டும் ;
அஞ்சாத வீரரெங்கும் தோன்ற வேண்டும் ;
அகிம்சா தருமமவர் பேணவேண்டும் ;
என்சாதி உயர்சாதி இழிந்த சாதி
என்றுசொல நாவுமெழா திருக்க வேண்டும் ;
நெஞ்சாரும் நினைப்பெல்லாம் நிகழ்த்தி நின்றேன் ;
நின்மலனே இரங்கிநீ அருள்செய் வாயே. 2

1305. பருவமழை பொய்யாது பெய்ய வேண்டும் ;
பயிர்களெலாம் செழித்தோங்கி வளரவேண்டும் ;
தருமநெறி தவறாது தழைக்க வேண்டும் ;
சாதிமதச் சண்டையெலாம் ஒழிய வேண்டும் ;
திருமகளும் கலைமகளும் சிறக்க வேண்டும் ;
தேசாபி மானமெங்கும் திகழவேண்டும் ;
கருமமெலாம் நற்கரும மாக வேண்டும் ;
காந்திமதி நின்னடிகள் வாழ்த்தி னேனே. 3

# முத்துக் குவியல்

## 197. அமிழ்ந்துறையும் மணிகள்

1306. ஆழ்கடலின் கீழெவர்க்கும்
அறியமுடி யாமல்
அளவிறந்த ஒளிமணிகள்
அமிழ்ந்துறையும், அம்மா ! 1

1307. பாழ்நிலத்தில் வீணுகப்
பகலிரவும் பூத்துப்
பலகோடிப் பனிமலர்கள்
புரிமளிக்கும், அம்மா ! 2

1308. கடல்சூழ்ந்த உலகுபுகழ்
காவியம்செய் யாமல்
கண்மூடும் கம்பருக்கோர்
கணக்கில்லை, அம்மா ! 3

1309. இடமகன்ற போர்முனைதான்
ஈதென்னக் காணு
திறக்கின்ற வில்விசயர்
எத்தனைபேர், அம்மா ! 4

வேறு

1310. தக்க திறனிருந்தும் - நல்ல
தருணம் வாய்த்திலதேல்,
மிக்க புகழெய்தி - மக்கள்
மேன்மை அடையாரம்மா ! 5

1311. சூழ்நிலை வாய்த்திலதேல் - சூரனும்
சோம்பி மடிவானம்மா !
பாழ்நிலத் திட்டவிதை - வளர்ந்து
பயன்மர மாமோ ? 6

---

1306 - 1311. Gray's Elegy - என்ற ஆங்கிலப் பாடலைத் தழுவியவை.

## 198. டி. கே. சி. இரங்கற்பா*

1312. மன்னும் விஜய வருஷத்தில் மாசியினில்
உன்னி வருந்தேதி ஓரைந்தாம்—இன்னமுத
சீலன் ரசிகமணி டி. கே. சி நண்பனிந்த
ஞாலந் தனைநீத்த நாள் 1

1313. புன்னகை பூத்துப் பொலியும் முகத்தழகன்
கன்னலைச் சொல்லிற் கலந்தளிப்போன்—
[மன்னுபுகழ்ச்
செந்தமிழ்ச் செல்வன் சிதம்பர நாதனை நான்
எந்தநாள் காண்பேன் இனி ! 2

1314. அன்னைபோ லென்னை அருவியில் நீராட்டி
இன்னமுதும் பக்கத் திருந்தூட்டித்—தன்னொடு
தங்குதங் கென்று சொன்ன தங்கக் குணத்தானை
எங்குநான் காண்பேன் இனி ? 3

1315. தண்பொருநை நெல்லைத் தமிழர் குலதிலகன்
நண்பன் சிதம்பர நாதனைப்போல்—பண்பமைந்த
பாவின் நயமறிந்து பாவலரைப் பாராட்ட
யாவருள ரையா இனி ? 4

---

*ரசிகமணி டி. கே. சி. காலமானது தெரிந்து கவிமணி பாடிய இரங்கற்பாக்கள் இவை. ரசிகமணியின் முகப்பொலிவும், அவர் கவிமணியைக் குற்றாலத்தில் வரவேற்று உபசரித்த பண்பும், கம்பன் கவியிலும் கன்னித் தமிழிலும் அவர் கொண்டிருந்த ஆழமான காதலும், உணர்ச்சி பொங்கும் வண்ணம் இப்பாடல்களில் கூறப்படுகின்றன. தன்னிலும் இளையரான ரசிகமணிக்குச் சரம கவி பாடும் துரதிர்ஷ்டம் பற்றிக் கவிஞர் நொந்துகொள்வது ஆற்றாமையை அதிகப்படுத்துகிறது.

1316. என்னருமை நண்பா ! இனிய கலைரசிகா !
தன்னிகர் இல்லாத் தமிழ்ச்செல்வா !—மன்னுமுளம்
தத்தளித்து நின்றுன் சரமகவி பாடுதற்கோ
இத்தனைநாள் வாழ்ந்திருந்தேன் யான் ? 5

வேறு

1317. அம்பொன் நகரில் அமர்ந்திடினும்
அமுதே உணவாய் அருந்திடினும்
கம்பன் கவியைப் பாடாமல்
கன்னித் தமிழைப் பேசாமல்
உம்பர் உலக வாழ்க்கையிலுன்
உள்ளம் மகிழ்ச்சி கண்டிடுமோ ?
நம்பன் பாதம் மறவாத
நண்பா ரசிக மாமணியே ! 6

## 199. வீரத்தாய்*

[போர்முனைக்குச் செல்லும் தன் மகனை நோக்கி, ஒரு வீரத் தாய் கூறுவது.]

1318. தாயிற் சிறந்த தப்பா !—பிறந்த
தாய்நா டதுபேணுர்
நாயிற் கடைய ரென—இந்த
நானிலம் சொல்லும், அப்பா ! 1

*அமுதசுரபி ஆசிரியர் திரு. சு. வேம்பு மாணவராயிருக்கையில் கையெழுத்துப் பத்திரிகை நடத்தி வந்தபோது, அதன் விசேட மலரொன்றுக்கு அளித்த கவிதை. இக்கவிதை 1942-ஆம் ஆண்டில் பாடப் பெற்றதாகத் தெரிகிறது. அப்பொழுது இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்துகொண்டிருந்தமை அனைவரும் அறிந்ததே.

1319. தாய்நிலம் காத்திடவே - ருஷியர்
சாவும் மதித்திடாமல்
காய்சினப் போரதிலே - சென்று
கலப்பதும் கண்டிலேயோ ? 2

1320. நன்றுபுரி வதற்கே - உடலை
நாமிங் கெடுத்தோம், அப்பா !
நின்று தெரிந்திடுவாய் - அதுதான்
நீர்மேற் குமிழி, அப்பா ! 3

1321. பாரத நாடளித்த - உன்றன்
பரம்பரை முன்னோரின்
வீரச் செயலை எல்லாம் - நீயும்
மேற்கொள்ள வேண்டும், அப்பா ! 4

1322. புகழ்வி ளையுமிடம் - அந்தப்
போர்முனையே, அப்பா !
மகனே உன்தாயின் - உள்ளம்
மகிழச் செய்வாய், அப்பா ! 5

1323. சற்றும் தளராமல் - இன்று
சண்டைக்குப் போய்வருவாய் ;
வெற்றி கிடைக்கும், அப்பா ! - ஈசனை
வேண்டித் தொழுதேன், அப்பா ! 6

## 200. 'தமிழர் நாடு' வாழ்த்து[1]

1324. தென்னாடு முற்றும் திருந்திச் சிறப்பெய்திப்
பொன்னாடு போலப் பொலிந்திடவே—எந்நாளும்
நாடுபுக ழுந்'தமிழர் நாடெ'னுமிப் பத்திரிகை
நீடுலகில் வாழ்க நிலைத்து. 1

1325. ஆக்கமும் பேரறிவும் ஆண்மையும் செய்வினையில்
ஊக்கமும் மக்களிடை ஓங்கிடவே—நீக்கமற
நந்'தமிழர் நாடு' நலங்கண்டு தொண்டாற்றிச்
சந்ததமும் வாழ்க தழைத்து. 2

## 201. குன்றக்குடி அடிகளார் வாழ்த்து[2]

1326. சைவம் வளரத் தமிழ்வளரச்
சலியா தென்றும் தொண்டாற்றி
வையம் புகழ நல்லறங்கள்
வளர்த்து நாட்டில் புலவர்களை
மெய்யன் போடு பாராட்டும்
மேலோன் அருணா சலவடிகள்
ஐயன் குன்றக் குடிமுருகன்
அருளால் வாழ்க ! வாழ்கவே ! 1

1327. இனிய தமிழில் சைவத்தை
எவரும் அறிய எடுத்தோதி
கனியும் அன்பால் அறம்பேணிக்
கற்றோர் போற்ற விளங்கிடுநம்

---

1. திருச்சி திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களது வெளியீடு.

2. திரு. எம். எஸ். பி. சண்முகம், எம். ஏ. அவர்கள் எழுதிய 'குன்றக்குடி அடிகளார்' (வாழ்க்கை வரலாறு) நூலுக்காகக் கவிமணி அவர்கள் அறுப்புச் சிகிச்சை பெற்று நோய்ப் படுக்கையிலிருந்த போது, 5-6-54ல் இவ் வாழ்த்துப் பாக்களைப் பாடி அளித்தார்கள்.

புனிதன் அருணு சலவடிகள்
புகழ்சேர் வாழ்க்கை வரலாறு
நனியிவ் வுலகில் சிறந்தோங்கி
நாளும் வாழ்க ! வாழ்கவே ! 2

வேறு

1328. சைவம் பரவத் தருமம் தழைத்துவரச்
செய்ய தமிழும் சிறந்தோங்க—வையமிசை
குன்றக் குடியெம் குருநாதன் தொண்டாற்றி
என்றென்றும் வாழ்க இனிது. 3

1329. மெய்யறிவே எத்திசையும் மேலோங்க, வீண்வாதப்
பொய்யழிந்து பாதலம் புக்கொழியச்—செய்யபுகழ்
ஐயனெம் அண்ணல் அருணு சலவடிகள்
வையமிசை வாழ்க மகிழ்ந்து 4

வேறு

1330. செய்ய தமிழும் சிவநெறியும்
சிறக்கத் தொண்டு புரிந்திடுவோன்
ஐயன் குன்றக் குடிஅடிகள்
அருணு சலதே சிகநாதன்
தையல் பாகன் தண்ணருளால்
சமயச் செங்கோல் இனிதோச்சி
வையம் புகழப் பல்லாண்டு
வாழ்க! வாழ்க! வாழ்கவே! 5

---

## பாடல் முதற் குறிப்பு அகராதி

[எண்: பாட்டு எண்]

### அ

பா

# THE TAMIL RENAISSANCE

DESIKAVINAYAKAM PILLAI'S

***MALARUM MALAIYUM** (Flowers and Garlands)**

By Prof. K. SWAMINATHAN

Rao Sahib S. Vaiyapuri Pillai has done a great service to contemporary Tamil literature by collecting and editing, in such flawless fashion, the poems, long and short, narrative, reflective and lyrical, of a poet whose writtings, appearing modestly and infrequently in magazines and school-readers, have been tantalising and fascinating discerning readers for some years. The bulk, the variety and the qualities, both of inspiration and technique, of these exquisite poems establish Sri Desikavinayakam Pillai's claim to a distinguished place in the long splendid and happily still incomplete roll of Tamil Poets.

A comparison of Sri Desikavinayakam Pillai's works with those of the late Subramanya Bharati reveals the powerful and inescapable influence which older poetry as well as the speech habits of the common people is bound to exert on verse that has a chance both of immediate popular appeal and of permanent survival as literature. All poetry is no doubt previous poetry with a difference, the difference, being explicable both in terms of a new age and of the personality of the writer; in all poetry, tradition and individuality have to be blended somehow. But Tamil poetry is by nature continuous and anonymous, the signature, where it is recognizable, being traced by critics to the

*Review in The Hindu, dated 29th January 1939.

characteristic technical devices of a period or an author rather than to the voice or gestures, the moral or emotional 'quiddity' of a particular person. Poetry which is thus timeless and impersonal tends, like the ballads, to be stylished and to become the expression of a people at large, and not of individual thinkers. If in recent times Bharati escaped from this respectable but unexciting anonymity, it was because he lived and wrote in a period of aspiration almost hopeless and not in a period of fulfilment almost complete. The bitterness of revolt, the spiritual tooth-ach which was a complex physical feeling of disgust with oneself, of contempt for our people's weakness, of restless and unavailing anger and the other nine and ninety devils which give to the most characteristic modern poetry its resillence and realism, where all ready to Bharati's hand; and they found, in the forms and conventions of our older poetry and in the tunes of our labourers' songs, a miraculous vehicle which, deftly handled by a master, gave to the modern mood such definitive exprersion as it has not achieved in other contries. To a mother weeping for her children and refusing to be comforted and a nation indignant which itself and refusing to hate others or to confess frustration, the legends of our ancient gods and goddesses provided a symbolic language which served at once as the medium and the inspiration of a new poetry.

Yielding to his temperament, as well as to the prevailing atmosphere of the Post-Gandhian era, Sri Desikavinayakam Pillai has chosen a

less arduous task than his great predecessor's; but his poetic achievement, considered objectively and without reference to origins and effects, is not less remarkable. If he has not the duty and the advantage which Bharati had of harnessing into the service of his poetry the enormous energy of a many-sided political revolt; if he sings neither to rouse nor to persuade but to confirm, he has the poet's freedom to be free, to be an artist, not a message-bearer. A poet of tenderness and sympathy sensitive to the varied beauties of nature and the sufferings of the minutest living being, he is eclectic rather than rebellious, serenrly afloat on a sea of calm, not buffeting against the waves of doom. Sri Pillai has no harsh word to say of anyone, he needs no harsh note to complete his harmony. His poetry has none of the writhing or inarticulate fury of a tortured animal. After the storm, the calm; after the tragedies, the romances; after Bharati, Dasikavinayakam Pallai. Loss or gain, who can say?

English education was to Barati a den of wild beasts to whose voracity our helpless children were served out by their foolish parents. Sri Desikavinayakam Pillai, on the contrary, accepts with grace and assimilates into some of the most moving of his Tamil poems the thoughts and images of Blake, Emerson, Tennyson, Fitzgerald and Swinburne. Again and again, his choice of themes and images reminds us of the Wordsworth of the *Lyrical Ballads*, while his exploitation of popular tunes is often as happy as that of Burns. His

preference for low life, for simple tunes, for thoughts not bowed to cunning, for common images and the language of ordinory speech, and his delicate blending of humour and melancholy, conspire to give his poems the appearance of perfect translations from the quintessential English poetry of our imagination. They strike our finer senses as a sort of attar of English poetry.

This, however, is an illusion of identity, which is easily accounted for, though it would be inexcusable if it were real; it is the efflorescence, beautiful and legitimate, of the deep, subtle and perhaps unconscious influence of many English poems, read with delight and understanding and lovingly prooded over. This influence is most vividly present in the simplest and most popular of Sri Pillai's poems, in the nursery songs, for example, which are a kind of transparent and moving verbal accompaniment for music and acting. Not even Bharati's most successful "Pappa Pattu" possesses the concrete sensuousness, the clarity, intensity and bell-like chiming of sounds which give to these childrens songs their instantaneous and irresistible appeal to old any young.

Sri Pillai is wholly averse to bringing about the divorce, which in our opinion is long overdue, between Tamil poetry and music. In fact, the obvious charm both of meaning and emphasis resides in a great many of his poems in the deliberate reinforcing or counter-pointing of the verbal and musical phrases : in the Lullby (No. 26), for example, in the "Untouchable's

Prayer" (No. 99) and in the bereaved mother's lament before Buddha in *Asia Joti** the greater part of the effect is due to the tactful blending of word and tune. An element of cleverness and surprise, which might not other wise fit into the mood of tenderness, of protest or of sobbing pathos, is carried off by the wounderful tact of the diction and the studied pauses and paces of the music. Once in the children's poems he makes a unique and not unsuccessful experiment in free verse (No. 37). This, however, is a liberty which he does nob permit himself in his more serious mood. He calls in rhyme and rhythm to second his diction. At page 1, in a formal poem of four lines, the rhyming syllables, wich carry the metrical emphasis, receive such a variety of sense and grammatical emphasis that three super imposed patterns emerge.

No praise can be too high for the tact and taste displayed in the use of familiar but euphonious and suggestive words. The following list, long but not exhaustive, of "foreign" words which are used effectively and without effort, illustrates his mastery of current Tamil:—பஹதுார் (126) ஸைக்கிள் (388, 514), ரயில் (396), மோட்டார் (513), வக்கீல் (807, 1134), ஜட்ஜி (807, 1134), மல் பீஸ் (838), மில் (891) மஸ்லின் (895), வோட்டு (1132), கோர்ட்டு (1135), குமாஸ்தா (1135), சென்டு (1138), காப்பிக்கடை (1139).

No translation of course, and no description can do justice to the utter rightness of his choice and arrangement of words. But the following images will convey some idea of his power:—

The sweetness of cow's milk with what measure can one measure this ?........

* Now Published Separately.

The cow may forget her calf, but your karma will not forsake you.........
His (my dead child's) toy-cart and little drum, they make me mad, mad, mad......
In the flow of the river of time, behold the law of God.........
(The rose's complaint)—The thief come and carried away my treasure, my beauty;
My sentries so many with swords uplifted—he has cheated them all.........
(The untouchable's complaint)—Will my pollution enter and settle in the temple? Will the sins of the bathers defile the Ganges?......... Are we not Siva's folk? Seeing us, will He shut His eye of grace and open His eye of fire?

In the religious poems with which the book opens and concludes, and in a few of the reflective poems on the world and human life, Sri Pillai abandons his studied naivety and uses a few archaic and defficult words and combines his words into somewhat obscure phrases. Nature poems, children's songs, poems on society and nationalism have a brief though glorious tradition in Tamil. Their standard has been set by Bharati and their language is not a backward-looking ghost, but a living thing with current significance. Our devotional and metaphysical poetry, on the contrary, has a longer and better-established ancestry; they are odes rather than lyrics and demand and justify a more solemn and ceremonious style than ordinary, the armoury of the invincible kinghts of old. Sri Pillai is conscious of his place in

the high company of the Alvars and Nayanmars, of Thayumanavar and Ramalingaswami. The diction here is appropriately elevated and full, but it is never really impenetrable. In the first part of " The Triumph of love " (No. 22—The story of Mira Bai) he boldly challenges comparison with Andal by his choice of the marriage-machinery. But he has the sence and the courage to distinguish and to keep apart the special qualities and functions of verse and those of prose. In this very poem, the emotions are appropriatey uttered in delicately-turned lyrics, while link-pieces are given in clear but aufficient prose.

Poets, according to Sri Pillai, are not mere dreamers of dreams but the architects of an indestructible kingdom of souls; and either directly or indirectly and in spite of a more or less unique simplicity of style, Sri Pillai strives to maintain this high and meritorious ideal. It is therefore with no effort and with no sense of irrelevancy that he utters in some of his most moving poems the ideals of Mathatma Gandhi. These ideals have to enter only apologetically and as unwelcome intruders into the realms of politics, economics and even ethics; but into Indian poetry, ' which is their native country and their own natural home, they enter unannounced as lords that are certainly expected and yet there is a silent joy at their arrival'. A poem's prosperity lies in the ears and hearts of the public for whom it is meant. There are poems (and some living Tamil poets) which perish because they are sown on soil not pre-

pared for them. Sri Pillai's poems on National Unity, on the National Flag, on the Caste Hindu's lament for the Harijan, on the Congress Ship and on the Khaddar-Seller, have a large public avidly awaiting them; and indeed no part of his output is likely to be spilt uselessly on the barren rock of indifference or among the stifling weeds of harted. His religion is not a formality nor his politics imported from abroad. No poet is so thorougly or consistently nonviolent in thought and word. There is only one kick, so to say, in the whole volume (No. 108—The Dictator); and even that is more a gesture of contempt than an action energized by hatred.

Those who look to poetry for the statement if not the solution of their problems may be disappointed by this apparent mixture of naive childishness ond jingling music. But if poetry in an oblique and symbolic, not a direct and intellectual, interpretation of life, the Gandhian world-view cannot be more melodiously stated than it is in Sri Pillai's verse. He is a genuine poet, though perhaps not a great one. We hesitate to call him great, because he lacks the greatest beauty, which is the beauty of arrangement, and the highest quality, which is structural.

Standing right in the centre of the Tamil poetic tradition and uttering in the best and clearest words the noblest thoughts and feelings of our country and our generation, Sri Desikavinayakam Pillai is certain to achieve both a wide and immediate popularity and a permanent place in our literary history.

---

